# பாரதிதாசன் பாடல்களும் சங்கப் பாடல்களும்: மொழி, இலக்கியம், இனம், நாடு பற்றிய சிந்தனைகள்

முனைவர்ப் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகப்

புதுவைப் பல்கலைக் கழகத்திற்கு

அளிக்கப்பெற்ற ஆய்வேடு


ப. கசுதூரிபாய்









**தமிழ் ஆராய்ச்சித் துறை**

**காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையம்**

**புதுச்சேரி – 605 008**


ஏப்பிரல் - 2004

**முனைவர். தி. செல்வம்,**
விரிவுரையாளர்,
தமிழ் ஆராய்ச்சித்துறை,
காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையம,
புதுச்சேரி 605 008.

# நெறியாளர் சான்றிதழ்

புதுவைக் காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையத் தமிழ் ஆராய்ச்சித் துறையில் திரு. ப. கசுதூரிபாய் அவர்கள் முனைவர்க் கல்வித் தகுதி பெறுவதற்காக மேற்கொள்ளப்பெற்ற ஆய்வேடு இது.

**'பாரதிதாசன் பாடல்களும் சங்கப்பாடல்களும்: மொழி, இலக்கியம், இனம், நாடு பற்றிய சிந்தனைகள்'** எனும் தலைப்பில் உருவாக்கப் பெற்றுள்ள இந்த ஆய்வேடு இதற்கு முன்னர் வேறு எந்தக் கல்வித் தகுதி பெறவும் அளிக்கப் பெறவில்லை.

இவ்வாய்வாளரின் தன் முயற்சியில் இந்த ஆய்வேடு உருவாக்கப்பட்டது.



தி. செல்வம்.
26.04.2004

( தி. செல்வம் )
நெறியாளர்.

Dr. T. SEL[illegible]AM, M.A., Ph.D.
[illegible]
PONDICHERRY - 605 008

இடம்: புதுச்சேரி
நாள்: 26-04-2004

ப. கசுதூரிபாய்,
முனைவர்ப்பட்ட ஆய்வாளர்,
தமிழ் ஆராய்ச்சித்துறை,
காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்பு மையம்,
புதுச்சேரி 605 008.

## ஆய்வாளர் உறுதிமொழி

**'பாரதிதாசன் பாடல்களும் சங்கப் பாடல்களும்; மொழி, இலக்கியம், இனம், நாடு பற்றிய சிந்தனைகள்'** எனும் தலைப்பில் உருவாக்கப் பெற்றுள்ளது இந்த ஆய்வேடு.

இது புதுவைக் காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்பு மையத் தமிழ் ஆராய்ச்சித் துறையில் முனைவர்க் கல்வித் தகுதிக்காக மேற்கொள்ளப் பெற்ற ஆய்வேடாகும்.

ஆய்வாளரின் தன் முயற்சியில் உருவாக்கப் பெற்றுள்ள இந்த ஆய்வேடு வேறு எந்தக் கல்வித் தகுதிக்கும் இதற்கு முன்னர் அளிக்கப்படவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

B. Gastooribaye
(ப. கசுதூரிபாய்)
ஆய்வாளர்.

இடம்: புதுச்சேரி
நாள்: 26 · 04 · 2004

துறைத்தலைவர் மேலொப்பம்
DR. S. [illegible]MAN M.A., Ph.D.,
HEAD OF DEPART[illegible]
Department of Tam[illegible]
K.M. Centre for P.G. [illegible]
LAWSPET
PONDICHERRY - 8

# நன்றியுரை

"பாரதிதாசன் பாடல்களும் சங்கப் பாடல்களும்: மொழி, இலக்கியம், இனம், நாடு பற்றிய சிந்தனைகள்" எனும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வேடு சிறப்பான முறையில் உருவாவதற்கு என்னைத் தக்க முறையில் நெறிப்படுத்தியதோடு ஆய்வுத் தொடர்பான பல நூல்களைக் கொடுத்தும் பேருதவி புரிந்த என்னுடைய நெறியாளர் முனைவர் தி. செல்வம் அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இவ்வாய்வினை மேற்கொள்ள வாய்ப்பளித்த மைய இயக்குநர் கே. உமா அவர்களுக்கும் உரிய வாய்ப்பினை நல்கப் பெருமுயற்சி செய்த முன்னாள் துறைத்தலைவர் முனைவர் நாகப்பா. நாச்சியப்பன் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஆய்வு நெறிக்குழு உறுப்பினர்கள் முனைவர் சிவ. மாதவன் அவர்களுக்கும் முனைவர் ப. இளங்கோ அவர்களுக்கும் நன்றி.

தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர் முனைவர் சூ. கௌதமன் அவர்களுக்கும் துறைப் பேராசிரியர்களான முனைவர் க. பஞ்சாங்கம், முனைவர் க. பரிமளம், முனைவர் சிந்தா நிலா தேவி, முனைவர் சத்தியசீலன், முனைவர் வே. கருணாநிதி, முனைவர் ஆ. விசயராணி, முனைவர் செல்வ பெருமாள் ஆகியோர்களுக்கும் என் நன்றி உரித்தாகிறது.

ஆய்வுக்கான தரவுகளைத் தந்து உதவிய பாரதிதாசன் அருங்காட்சியகத்திற்கும் ,என் பெற்றோர்களாகிய திரு. பொ. பலராமன் அவர்களுக்கும், திருமதி. தெய்வானை பலராமன் அவர்களுக்கும் மற்றும் என் ஆய்வு சிறக்கப் பல நிலைகளில் உதவி செய்த என் சகோதரிகளுக்கும் நன்றி உரித்தாகிறது.

நூல்கள் கொடுத்துதவிய நண்பர்களுக்கும், இவ்வாய்வேட்டினை நன்முறையில் கணிப்பொறி அச்சுச் செய்து கொடுத்த வேல் கணிப்பொறி மையத்திற்கும், மேலும் என் ஆய்வு சிறந்த முறையில் உருவாக உறுதுணையாக இருந்த இல்லத்தார்க்கும் என் நன்றி உரித்தாகிறது.

**நன்றி! நன்றி!! நன்றி!!!**

ப. கசுதூரிபாய்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

1. அகத். - அகத்திணையியல்
2. அகம். - அகநானூறு
3. இடை. - இடையியல்
4. இளம். - இளம்பூரணர்
5. எச். - எச்சவியல்
6. எழு. - எழுத்ததிகாரம்
7. ஐங். - ஐங்குறுநூறு
8. கலித். - கலித்தொகை
9. களவு. - களவியல்
10. கற்பு. - கற்பியல்
11. கனா. - கனாத்திறம் உரைத்த காதை
12. கிளவி - கிளவியாக்கம்
13. கௌட - கௌடலீயம்
14. குற். - குற்றியலுகரப் புணரியல்
15. குறிஞ். - குறிஞ்சிப்பாட்டு
16. குறு. - குறுந்தொகை
17. சில. - சிலப்பதிகாரம்
18. சிறு. - சிறுபாணாற்றுப்படை
19. செய். - செய்யுளியல்
20. சொல். - சொல்லதிகாரம்
21. திரு. - திருக்குறள்
22. திருமு. - திருமுருகாற்றுப்படை
23. தொல். - தொல்காப்பியம்
24. நற். - நற்றிணை

25. நூல். - நூன்மரபு

26. பரி. - பரிபாடல்

27. பரி. திர. - பரிபாடல் திரட்டு

28. பட். - பட்டினப்பாலை

-

29. பதி. - பதிகம்

30. பதிற். - பதிற்றுப்பத்து

31. பனம். - பனம்பாரனார்

32. புகார். - புகார்க் காண்டம்

33. புற. - புறத்திணையியல்

34. புறம். - புறநானூறு

35. பெரும். - பெரும்பாணாற்றுப்படை

36. பொருந. - பொருநராற்றுப்படை

37. பொருள். - பொருளதிகாரம்

38. பொருளி. - பொருளியல்

39. மது. - மதுரைக்காஞ்சி

40. மரபு. - மரபியல்

41. மலை. - மலைபடுகடாம்

42. மெய்ப். - மெய்ப்பாட்டியல்

43. வழக். - வழக்குரை காதை

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்க காலத்திலேயே தமிழ் மொழி, தமிழ் இலக்கியம், தமிழ் இனம், தமிழ் நாடு ஆகியவை பற்றிய மேம்பாட்டு நிலையைக் கருதும் போக்கு உருவாகி விட்டதை உணரலாம், பாரதிதாசன் பாடல்களிலும் தமிழ் மொழி, தமிழ் இலக்கியம், தமிழ் இனம், தமிழ்நாடு ஆகியவை பற்றிய மேம்பாடான எண்ணங்களும் விழிப்புணர்ச்சியும் தோன்றியுள்ளமை புலனாகிறது. இந்நிலையில் சங்கப் பாடல்களும் பாரதிதாசன் பாடல்களும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்குரிய பல வாய்ப்புகளைப் பெறுகின்றன எனலாம்.

## ஆய்வு நோக்கம்

பாரதிதாசன் தன்னுடைய பாடல்களிலே மொழி முதலியவற்றின் மேம்பாடுகளைக் கூறுகின்றபொழுதும், தமிழகச்சேர, சோழ, பாண்டியர்களை எடுத்துக் கூறி விளக்குகின்ற பொழுதும், சங்க இலக்கியங்களைப் போற்றிப் பாரதிதாசன் கூறுகின்ற இடங்களிலும், சங்க இலக்கியப் பகுதிகளை ஒத்த பொருட்பகுதிகளைப் பாடுகின்ற பொழுதும், அவர் தமிழ் மொழி, இலக்கியம், இனம், நாடு ஆகியவற்றின் மறுமலர்ச்சிக்குச் சங்க கால அரசு, இலக்கியம் ஆகியவற்றைக் கருவியாகப் பயன்படுத்துகிறார் என்பதை உணரலாம். எனவே, மொழி, இலக்கியம், இனம், நாடு ஆகிய சிந்தனைகளில் சங்க இலக்கியங்களையும் பாரதிதாசன் பாடல்களையும் ஒப்பிட்டு ஆராய வேண்டுமென்ற எண்ணம் ஆய்வாளருக்குத் தோன்றியது. சங்க காலத்தில் தமிழர்களிடையே அயலவர்களின் தாக்குதல், கலப்பு ஆகியவை நேர்ந்துள்ளமை அறியலாம். பாரதிதாசன் காலத்திலும் தமிழ்நாட்டை உள்ளடக்கிய இந்திய நாடு ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்திற்கு அடிமைப்பட்டு இருந்தமை உணரலாம். இந்நிலையில் அயல்மொழிப் பண்பாட்டாளர்களால் சங்க காலத் தமிழ்நாடும் பாரதிதாசன் காலத் தமிழ்நாடும் ஊறுபாட்டிற்கு உள்ளாகியுள்ளமையால், இவற்றை ஒப்பிட்டு ஒற்றுமை, வேற்றுமை ஆகியவற்றை ஆராய வேண்டுமென்ற நோக்கம் ஆய்வாளருக்கு உண்டு. இந்நிலையில் இவ்வாய்வேடு அமைந்துள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

சங்க இலக்கியங்களும் பாரதிதாசன் பாடல்களும் பற்றிய ஒப்பீட்டாய்வு இதுகாறும் முனைவர்ப் பட்டத்திற்கோ, இளமுனைவர்ப் பட்டத்திற்கோ செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால், பாரதிதாசன் பாடல்கள் சங்க இலக்கிய நோக்கில் இளமுனைவர்ப்பட்ட ஆய்வேடு ஒன்றில் ஆராயப்பட்டுள்ளன. ந.வே. மாரியப்பன் என்பவர்,

"பாரதிதாசன் பாடல்களில் அகப்பொருள் மரபும் புதுமையும்" என்னும் தலைப்பில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆய்வை நிகழ்த்தியுள்ளார். பாரதிதாசன் பாடல்களும் பல கோணங்களில் முனைவர்ப்பட்ட, இளமுனைவர்ப்பட்ட ஆய்வேடுகளில் ஆராயப்பட்டுள்ளன. அவ்வாறே சங்க இலக்கியப் பாடல்களும் பல கோணங்களில் முனைவர்ப்பட்ட, இளமுனைவர்ப்பட்ட ஆய்வேடுகளில் ஆராயப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்கள், பாரதிதாசன் பாடல்கள் இரண்டையும் இணைத்து ஒப்பீட்டாய்விற்கு இதுகாறும் கருதப்படாமையின், ஆய்வாளரால் "பாரதிதாசன் பாடல்களும் சங்கப் பாடல்களும்; மொழி, இலக்கியம், இனம், நாடு பற்றிய சிந்தனைகள்" என்னும் ஆய்வுத் தலைப்புத் தெரிவு செய்யப்பட்டுள்ளது.

## ஆய்வு மூலங்கள்

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களும், பாரதிதாசன் பாடல்களும் இவ்வாய்வேட்டிற்குரிய முதன்மைச் சான்றுகளாகும். தொல்காப்பியம், திருக்குறள் பிற இலக்கிய, இலக்கண நூல்கள், பாரதிதாசன் எழுதியுள்ள பிற படைப்புகள் கட்டுரை முதலிய பிற எழுத்துக்கள் ஆகியவை துணைமைச் சான்றுகளாகும்.

## ஆய்வின் எல்லை

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களால் புலப்படும் மொழி, இலக்கியம், இனம், நாடு பற்றிய சிந்தனைகள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. பாரதிதாசன் பாடல்களில் புலப்படும் மொழி, இலக்கியம், இனம், நாடு ஆகிய நான்கு சிந்தனைகள் ஆராயப்பட்டுள்ளன. தேவையான இடங்களில் பாரதிதாசனின் பிற எழுத்துக்களும் ஆய்வுக்குக் கருதப்பட்டுள்ளன. மொழி, இலக்கியம், இனம், நாடு ஆகிய நான்கு சிந்தனைகளும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் எவ்வாறு அமைந்துள்ளன என்பது ஆராயப்பட்டு அவற்றிடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகள் விளக்கப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வேட்டில் விளக்கமுறை ஆய்வும், ஒப்பீட்டு ஆய்வும் பெரிதும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. பகுப்பாய்வும், புள்ளியியல் ஆய்வும் ஏற்புடைய இடங்களில் இடையிடையே கையாளப்பட்டுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

முன்னுரை, நிறைவுரை நீங்கலாக, இவ்வாய்வேட்டில் நான்கு இயல்கள் அமைந்துள்ளன. அவை வருமாறு.

1 மொழி
2 இலக்கியம
3. இனம்
4. நாடு

## 1. மொழி

தமிழ்நாடு முழுமையும் ஒரு குடையினகீழ் ஆளப்படவில்லையென்றாலும், இந்நாடு முழுவதும் தமிழ்மொழியே பேசப்பட்டும் போற்றப்பட்டும் வந்துள்ளது. இதற்கான சங்க இலக்கியச் சான்றுகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

ஆரியர், மௌரியர், வடுகர் முதலியவர்களின் படையெடுப்புக்கள் தமிழகத்தை நோக்கி நிகழ்ந்து கொண்டிருந்தன எனறாலும், அவை தமிழ்மன்னர்களால் முறியடிக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கான சங்க இலக்கியச் சான்றுகள் விளக்கியுரைக்கப்பட்டுள்ளன. சங்க கால மன்னர்களின் இத்தகைய ஒற்றுமைக்கு அடிப்படைக் காரணம் மொழியும் பண்பாடுமே ஆகும் என்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ஆரியர், மௌரியர், வடுகர் முதலிய மாற்றுமொழிக்கும் பண்பாட்டுக்கும் உரியவர் தமிழகத்தின்மீது படையெடுததிருப்பினும், அப்படையெடுப்புகள் முறியடிக்கப்பட்டமையால், பெரிய அளவில் தமிழ் மொழிக்கு ஊறு செய்யுமளவில் மொழிக்கலப்பு எதுவும் நடந்துவிடவில்லை. சங்க இலக்கியத்தில் கலந்துள்ள சமசுகிருத மொழிச்சொற்கள் ஏறக்குறைய இரண்டு விழுக்காடு எனப் புலப்படுகிறது.

சங்க காலத் தமிழர்கள் வாணிகம், கலை ஆகிய காரணங்களுக்காக ஆரியர் முதலியோர் வாழ்ந்த வட இந்தியப் பகுதிகளுக்குச் சென்றமையாலும் தம்மொழி, பண்பாடு ஆகியவற்றின் சிறப்பை வடபுலத்து மன்னர்களுக்கு உணர்த்துவதற்காகப் படையெடுப்பு நிகழ்த்தியமையாலும் ஆரியர் முதலிய மாற்றுமொழிப் பண்பாட்டாளர் தமிழர்களைப் போலவே வாணிகம், கலை, படையெடுப்பு ஆகிய காரணங்களுக்காகத் தமிழ்நாட்டிற்கு வந்தமையாலும் தமிழில் மொழிக்கலப்புச் சிறிதளவே நிகழ்ந்துள்ளமை

கருதத்தக்கது. ஆனால, பாரதிதாசன காலத்திலும் சங்க காலத்தைப் போலவே அயலவர்களின் மொழியினால் தமிழகம் பாதிக்கப்பட்டமை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. ஆனாலும் சங்க காலத்தில மொழி முதலியவை பாதிக்கப்பட்டுவிடுமோ என்று அஞ்சிய நிலை காணப்படுகிறதேயனறி மிகுந்த ஊறுபாடு தமிழ்மொழிக்கு இல்லை. பாரதிதாசன் காலத்திலோ பல்வேறு இனமக்கள் தமிழகத்தை நோக்கிப் படையெடுத்து வந்தமையாலும் ஆங்கிலேயர் நம் நாட்டை அடிமை கொண்டு ஆண்டமையாலும் பாதுகாப்பான தன்னாட்சி பலகாலும் இன்மையாலும் தமிழ்மொழியில் சங்க காலத்தைக் காட்டிலும் மிகுந்த அளவில் மொழிக்கலப்பு நிகழ்ந்துவிட்டமை உணரலாம். எனவே, பாரதிதாசன் மொழிப்பற்றுக் குறித்தும் தூயதமிழ் பற்றியும் தனித்தமிழ் பற்றியும் வலியுறுத்திப் பேச வேண்டிய நிலை எழுந்தமை சங்ககாலச் சூழலினின்றும் மாறுபட்டதாக அமைகிறது. பாரதிதாசன் பாடல்களினின்றும் சான்றுகள் எடுத்து விளக்கப்பட்டுள்ளன.

சமசுகிருத, இந்திமொழி எதிர்ப்புகளைப் பாரதிதாசன் நிரம்பவும் மேற்கொண்டமை எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

சங்க காலத்தில் ஆரியர் முதலிய வேற்றினத்திற்கு எதிர்ப்பு இருந்தாலும், சமசுகிருதம் முதலிய மொழி எதிர்ப்பு வெளிப்படையாகக் காணப்பட்டதற்கான சான்றுகள் புலப்படவில்லை.

சங்க காலத்தில் தமிழ்மொழியைத் தமிழ்த்தாய் என்று விளக்கிய போக்குப் பொதுவாகக் காணப்படவில்லை. ஆனால், பாரதிதாசன் காலத்திலும் அவர் தன் பாடல்களிலும் தமிழைத் தாயாக உருவகிக்கும் போக்கு உருவாகிவிட்டமையும் கடவுள், தெய்வம் ஆகியவற்றோடு வைத்துத் தமிழையும் போற்றி உரைக்கும் போக்கு எழுந்துள்ளது என்பதும் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன.

திராவிட மொழிகளையும் தமிழையும் ஆராய்ந்து தமிழின் தனித் தன்மையை எடுத்துக்காட்டும் போக்குச் சங்க காலத்தில் காணப்படவில்லை. ஆனால், பாரதிதாசன் பாடல்களில் திராவிட மொழிகளைப் பற்றியும் தமிழின் தனித்தன்மை பற்றியும் மிகுதியாகப் பேசப்பட்டுள்ளமை எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

சங்க காலத்தில் கல்விக்கான பயிற்று மொழியாகத் தமிழே இருந்துள்ளது. பயிற்றுமொழிச் சிக்கல் அக்காலத்தில் இருந்ததாகப் புலப்படவில்லை. ஆனால், பாரதிதாசன் காலத்தில் பல அயல் மொழிகளும் நாட்டில் குறுக்கிட்டமையால், தமிழ்ப்பயிற்று மொழிச்சிக்கல்

நேர்ந்துள்ளது. இதற்கான சான்றுகள் ஆராயப்பட்டுள்ளன. தாய்மொழிக் கல்வி பற்றிப் பாரதிதாசன் பேச வேண்டிய சூழல் அவர் காலத்தில் எழுந்தமைபற்றி விளக்கிக் காட்டப்பட்டுள்ளது.

இசைத் தமிழ், நாடகத் தமிழ் ஆகியவை சங்க காலத்தில் ஓங்கி இருந்தமை புலப்படுகின்றது. அதற்கான சான்றுகள எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அயலவர் தாக்கத்தால் இசைத் தமிழும் நாடகத் தமிழும் சங்க காலத்தில் பாதிக்கப்பட்டதற்கான சான்று எதுவும் புலப்படவில்லை. கலைஞர்களாலும் புலவர்களாலும் அவை நன்கு போற்றப்பட்டமையும் புலப்படுகின்றது. ஆனால், இவற்றிற்கு மாறாகப் பாரதிதாசன் காலத்தில் இசைத் தமிழும் நாடகத் தமிழும் மிகவும் நலிவடைந்த நிலையில் காணப்பட்டன. இந்நிலையில் அவர் அவற்றின் மேம்பாட்டிற்காகக் குரல் கொடுத்தமை விளக்கிக் காட்டப்பட்டுள்ளது.

பொதுவாகத் தமிழ்மொழி சங்க காலத்தில் ஆங்காங்குச் சில அடைத் தொடர்களால் போற்றி உரைக்கப்பட்டுள்ளது என்றாலும் தமிழ்மொழியைப் போற்றி உரைக்கும் பகுதி மிகுதியாகக் காணப்படவில்லை. ஆனால், பாரதிதாசன் பாடல்களில் தமிழ்மொழியைப் போற்றி உரைத்தல் பல்வேறு இடங்களிலும் மிகுதியாகக் காணப்படுகிறது. இவற்றிற்கான சான்றுகள் எடுத்துரைக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

பாரதிதாசன் பாடல்களில் தமிழ்மொழியைச் சிறப்பித்து எழுதிய தனிப்பகுதிகளும் காணப்படுகின்றன என்பதும் தமிழல்லாத பிற பொருள்களைப் பாரதிதாசன் விளக்குகின்ற பொழுதும், உவமை முதலிய பிற நிலைகளிலும் தமிழ் மொழியைப் பாராட்டிக் கூறியுள்ளார் என்பதும் விளக்கிக்காட்டப்பட்டுள்ளன.

## 2. இலக்கியம்

சங்க இலக்கியக் காதல் பாடல்களும் பாரதிதாசன் காதல் பாடல்களும் இயற்கைப் புணர்ச்சி, இரவுக்குறி, பகற்குறி முதலிய பாடல் துறை நோக்குகளிலும் மெய்ப்பாட்டு நோக்கிலும் இவ்விருதிறப் புறத்திணைப் பாடல்களும் வெட்சி முதலிய திணை நோக்கிலும் ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளன.

சங்க இலக்கியத்தில் காணப்படும் தொனி, இரசம், ஔசித்தியம் ஆகிய இலக்கியக் கோட்பாடுகள் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன. பொருள் தொனி, அணித் தொனி, இரசத் தொனி ஆகிய மூன்று தொனிகளும் பாடல்களில் பயின்று வரும் பாங்கு

விளக்கிக் காட்டப்பட்டுளளது. பாரதிதாசன் பாடல்களிலும் இம்மூன்று தொனிகளும எவ்வாறு பயினறு வநதுளளன எனபது ஒபபீடடு முறையில் விளககிக் காட்டப்பட்டுள்ளது.

ஆலம்பன விபாவம, உததீபன விபாவம், அனுபாவம், வியபிசாரி பாவம, தாயி பாவம் ஆகிய அடிப்படைகளில இரசம் புலனாகும் என்பது சங்க இலக்கியங்களில் பொருத்திக்காட்டப்பட்டுளளது. அவவாறே அவ்விரசம் பாரதிதாசன் பாடல்களில் புலனாகும் தன்மையும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் இரசம் பயின்று வரும் தனமை ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளன.

பாடுபொருளில முழுமைக்கும் அதன பகுதிப் பொருள்களுக்கும் உள்ள ஒத்திசைவைப் பொதுவாக ஔசித்தியம் எனறு இலக்கிய அறிஞர்கள் கூறுவர். சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் ஔசித்தியம் என்பது எவ்வாறு அமைந்து வந்துள்ளதென ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளது.

## 3. இனம்

தமிழர் அல்லாத அயலவர் - வேற்றின மக்கள் - தமிழை ஆதிக்கம் செலுத்த முனையும் சூழல் சங்க காலத்தில் இருந்தமை சங்ககால வரலாற்றால் புலனாகிறது. பாரதிதாசன் காலத்தில் தமிழ்நாட்டை உள்ளிட்ட பாரத நாடே அயலவர் ஆட்சியில் அடிமைப்பட்டு இருந்துள்ளமை இந்திய வரலாற்றால் உணரலாம். எனவே, இத்தகைய வேற்றின ஆதிக்கச் சூழல்களால் சஙக காலத்திலும் பாரதிதாசன் காலத்திலும் தமிழ் இன உணர்வு மேலோங்கியமை இயல்பாக நிகழக் கூடியதே எனலாம். சங்கப் பாடல்களும் பாரதிதாசன் பாடல்களும் இதனை உணருமாறு அமைந்துள்ளன என்பது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

### இலக்கியம்

சங்க இலக்கியக் குறிஞ்சிப் பாட்டில் கபிலர் களவுப் பகுதியெல்லாம் கற்பினை நோக்கியவை என்பதை வலியுறுத்தியுள்ளார் என்பதும் அதாவது களவென்பது திருமணம் புரிவதை அடிப்படை நோக்கமாகக் கொண்டது என்பதை வலியுறுத்தும் நோக்கோடு அறத்தொடு நிற்றலைப் பாடியுள்ளார் என்பதும் ஆரியப் பிரகத்தனுக்குத் தமிழின இலக்கியப் பொருளாகிய அறத்தொடு நிற்றலைப் பாடியுள்ளார் என்பதும் ஆரியப் பிரகத்தனுக்குத் தமிழின இலக்கியப் பொருளாகிய அறத்தொடு நிற்றலின்

பாட்டுப்
தனித்தனமையை உணாததுவதற்குக குறிஞ்சிப் பாடியுள்ளார் என்பதும் அடிக்குறிப்பிலிருந்து பெறப்படுகிறது என்பதும் விளககிக்காட்டபபட்டுளளன.

இறையனார் களவியல் நூறபாவில களவும் கந்தருவமும் இணையானவை எனக் கூறப்படுவதை உணரலாம். கநதருவம் என்பது திருமணததை நோக்கியதாக அமையாமையால் தமிழ் அகப்பொருளின தனிததன்மை தோன்றாமல் போகின்றது.

களவெனப்படுவது கநதருவம் என உருவகப்படுத்தும் தன்மை சங்க கால இறுதிப் பகுதியில் காணப்படுகின்றது. இநநிலை சற்று முற்காலத்திலும் இருந்திருக்க வாய்ப்புண்டு. இத்தகைய நிலையில ஆரிய அரசன் பிரகத்தனுக்குக் கபிலர் குறிஞ்சிப்பாட்டைக் கூற நேர்ந்திருக்கும் என்பது விளக்கப்பட்டுள்ளது.

பாரதிதாசன் பாடல்களில இன உணாவு மிகுதியான இடங்களில் தோன்றக் காணலாம். இலக்கியம் படைப்பதில் தோனறும் இன உணர்வு ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளது.

**அரசியல்**

**அயலவர் படையெடுப்பு**

**ஆரியப் படையெடுப்பு**

ஆரிய விளையாடடு வீரரும் தமிழ் மன்னரை எதிர்த்து வந்த ஆரிய மன்னர்களும் தமிழர்களால் எதிர்க்கப்பட்டு வெற்றி கொள்ளப்பட்ட செய்திகளும் காணப்படுகின்றன. பின்வரும் செய்திகள் கருதத்தக்கன.

1. ஆரியப் பொருநன் பாணனை எதிர்த்துப் போர் செய்தல்

2. ஆரிய மன்னர்களை எதிர்த்துத் தமிழர் வென்றமை

அ. மலையன் முள்ளூரில் ஆரியரை வெல்லல்

ஆ. சோழர் வல்லத்துப் புறங்காட்டில் ஆரியரை வெல்லல்

இ. சேரன் செங்குட்டுவன் ஆரிய மன்னர்களை வெல்லுதல்

ஈ. சேரன் ஆரியரை வெல்லல்

"ஆரியப் படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன்" என்ற புறநானூற்றுத் தொடர் வடவாரியர் படைகளை எதிர்த்து நின்று போர் செய்து வென்ற நெடுஞ்செழியனின் பேராண்மையை விளக்கி நிற்பதாகக் கொள்ளலாம்.

## மௌரியர் படையெடுப்பு

ஏறத்தாழக் கி.மு. 165 - இல் கலிங்க மன்னனாய் முடிசூடிக் கொண்ட காரவேலன் என்பவன், தமிழ் வேந்தர்கள் தம்முள் ஒன்றுபட்டுத தனக்கு முன்னே 113 ஆண்டுகளாக வலிமை பெற்று இருந்தார்கள் என்றும், அவர்களது ஒற்றுமை தனக்கு இன்னலை விளைப்பது என்று எண்ணித் தான் அவர்தம் கூட்டணியை ஒழித்ததாகவும், ஒரு கல்வெட்டில் குறித்துள்ளான். இங்ஙனம் அவன் குறிப்பிட்ட தமிழரசர் ஒற்றுமையே கி.மு.138 வரையில் வட இந்தியப் பேரரசர்களாக ஆட்சி செய்த மௌரியர் படையெடுப்பதைத் தடுத்து நிறுத்தியது என்று கூறலாம்.

வடவர், வடுகக்கருநாடர் ஆகியோர் தமிழ் மன்னர்களால் எதிர்க்கப்பட்ட செய்தியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

இவ்வாறாக அயலவர் படையெடுப்பின் காரணமாகத் தமிழ் மன்னர்கள் ஒற்றுமையுடன் தங்களது இன உணர்வை வெளிப்படுத்தியுள்ளனர். சங்க காலப் பாடல்கள் அடிமைப்பட்டு விடுவோமோ என்று அஞ்சி எதிர்த்த நிலையில் எழுதப்பட்டவை. ஆனால், பாரதிதாசன் பாடல்கள் நாடு அடிமைப்பட்ட நிலையில எழுதப்பட்டவை என்பது விளக்கிக்காட்டப்பட்டுள்ளது.

உலகம், உயிர், கடவுள் பற்றி ஆராய்ச்சி செய்வதே சமயம் எனலாம். இச்சமயம் என்பது மனிதன் வாழும் மூன்று காலமும் பற்றி ஆராய்வது ஆகும்; உயிர் எப்படி இருக்கும், கடவுள் என்பதென்ன என்று விளக்கங்களை அறிவதுமாகும்.

## கொல்லாமையும் சிறுதெய்வ வழிபாடும் நீங்கிய கடவுள் வழிபாடு

திருவள்ளுவர் தன் பாடலில் நெய் முதலிய பொருள்களைத் தீயிலிட்டு ஆயிரம் வேள்விகள் செய்தலைவிட, ஒன்றன் உயிரைக் கொன்று உடம்பைத்

தின்னாமலிருத்தல் நல்லதென்கிறார். இத்தகைய அறம்புரி கொள்கையை உடையவர்கள் தமிழர்கள் எனச்சங்கப் புலவர் தம் புறநானூற்றுப் பாடலில் கூறியுள்ளமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

சமய நிலையில் கொல்லாமையை மேற்கொள்பவர் தமிழர் என்பதை உணரலாம். வேள்வியில் உயிர்ப்பலி செய்தல் என்பது ஆரியர்களின் வேதமான இருக்கு, எசூர் முதலியவற்றில் காணப்படுகின்றது. திருக்குறளில் உயிர்ப்பலியை எதிர்ப்பதென்பது, சிறுதெய்வ வழிபாட்டை மறுத்து, முழுமுதற் கடவுள் வழிபாட்டையே ஏற்பதாகும்.

அன்பு, அருள் நாடும் வழிபாடு, பிறவிக்கோட்பாடு, விண்ணுலகம், நரகம் என்ற கருத்துக்கள் சங்கப்பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் அமைந்துள்ள தன்மை ஒப்பிடப்பட்டுள்ளன.

பாரதிதாசனும் சங்க இலக்கியச் சமயப் பொருளொடு ஒத்த கருத்தைக் கூறியுள்ளமை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. வேறுபடும் இடமும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## 4. நாடு

திருவள்ளுவர் சிறந்த நாடு பற்றிப் பொருட்பாலில் ஆராய்ச்சி செய்துள்ளார். நாடு என்பது படை வலிமை கொண்டதாகவும், தேவையான அறிவுடையோர், குறைபாடில்லாத செல்வந்தர், பலகுழுக்கள் இல்லாதிருத்தல் ஆகியவற்றை உள்ளடக்கிய குடிமைப் பண்பு உடையதாகவும் பொருளீட்டும் வாய்ப்பு, இறைப்பொருள் தருதல், செல்வ வளம் ஆகியவற்றை உள்ளடக்கிய கூழ் சார்ந்த பகுதியைக் கொண்டதாகவும் அமைச்சினை உள்ளடக்கிய நல்லாட்சியை உடையதாகவும் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் நட்பு நிலையைக் கொண்டாதாகவும், அச்சமின்றி வாழும் பாதுகாப்பு, உட்பகை இல்லாமல், அரசுக்குக் கட்டுப்படாமல் கொலை நிகழ்த்துவோர் இல்லாதிருத்தல் ஆகியவற்றை உள்ளிட்ட பகையின்மைப் பகுதியை உடையதாகவும், பாதுகாப்பிற்குரிய அரண் கொண்டதாகவும் நிலத்து நீரையும், மழை நீரையும், மலை நீரையும் கொண்ட நீர்வளம், மலைவளம் ஆகியவற்றைக் கொண்ட இயற்கை வளம், முயற்சியால் நிகழும் குறைபாடில்லாத விளைச்சல் ஆகியவற்றை உள்ளடக்கிய வளப்பெருக்கினைக் கொண்டதாகவும் பசியின்மை, நீங்காத பிணியின்மை, இன்ப வாழ்வு ஆகியவற்றை உடையதாகவும் அமைதல் வேண்டும் என்று வள்ளுவர் பேசியுள்ளார். நாடு பற்றிய வள்ளுவர் கருத்துக்கள் சங்கப் பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் எவ்வாறு பயின்று வந்துள்ளன என்பது விளக்கப்பட்டு ஒற்றுமை வேற்றுமைக் கூறுகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

## ஆய்வுப் பயன்பாடு

இவவாயவேடு சஙக இலககியஙகளையும் பாரதிதாசன் பாடல்களையும் மொழி, இலக்கியம, இனம, நாடு ஆகிய சிநதனைகளில் நோககுவாாககுப பயன்படக கூடியதாகும பாரதியாா முதலிய தறகால எழுசசிக கவிஞர்களின படைபபுகளைச சங்க இலக்கியங்களோடு ஒபபிடடு வருஙகாலததில ஆயவு நிகழத்தபபடலாம. அத்தகைய ஆய்வுகடகு இவவாய்வேடு ஒரு முனனோடியாகத திகழும.

# 11

# மொழி

## முன்னுரை

சங்க இலக்கியத்தில் தமிழ் போற்றபபட்ட தன்மையும் பாரதிதாசன் தமிழைப் போற்றியுள்ள தன்மையும் ஆராயப்பட்டுளளன சங்க இலக்கியத்திலும் பாரதிதாசன் பாடல்களிலும் ஏற்பட்டுள்ள மொழிககலப்பு ஆராயப்படடுள்ளது, சமசுகிருதம், ஆங்கிலம், இந்தி ஆகிய அயல்மொழிகளைப் பாரதிதாசன் எதிர்ப்பது பற்றியும் தமிழ்நாட்டில் தமிழ்மொழி பயிற்றுமொழியாவதற்குப் பாரதிதாசன் கூறியுளள கருத்துகளும் கோவில்களில் தமிழ் வழிபாட்டுமொழியாவது பற்றி அவர் கூறியுள்ள கருத்துகளும் தமிழிசை, தமிழ்நாடகம் ஆகியவை ஏற்றம் பெற வேண்டும் என்ற கருத்துகளும் ஆராயப்பட்டுள்ளன.

## சங்க இலக்கியததில் தமிழைப் போற்றுதல்

தமிழைச் சங்கப் புலவர்களும் போற்றியுள்ளனர். பாரதிதாசனும் போற்றியுள்ளார். அவற்றில் ஒற்றுமை வேற்றுமை ஆகியவை உண்டு.

சங்க இலக்கியத்தில் தமிழ் பற்றிய புனைந்துரை காணப்படுகிறது. சங்க இலக்கியப் புலவர்களும் தமிழைப் போற்றியும் பாராட்டியும் வந்துள்ளனர் என்பதை உணரலாம். தமிழ் என்ற சொல் பதினாறு[1] இடங்களில் புனைந்துரைகளுடன் காணப்படுகிறது. இவற்றுள் தமிழ் தண்டமிழ் என்று போற்றப்பட்ட இடங்கள் ஏழு[2] ஆகும். நற்றமிழ் என்று ஓரிடத்தில்[3] மட்டும் போற்றி உரைக்கப்பட்டுள்ளது.

தமிழ் சார்ந்த பூமி-தமிழர் வாழும் நிலம்-தமிழகம்[4] என்று குறிக்கப்பட்டு மூன்று இடங்களிலும் தமிழ் நாட்டகம்[5] என்று ஓரிடத்திலும் பேசப்பட்டுள்ளது.

ஈண்டுக் குறிக்கப்பட்ட இடங்களில் தமிழ் என்பது மொழியைக் குறித்து வரும் இடங்களாக எட்டினைக்[6] குறிப்பிடலாம்.

## சிறுபாணாற்றுப் படையில் கூறப்படும் தமிழ்நிலை

1. அகம். 31 : 14, 227 : 14, பதி. 2 : 5, புறம். 19 : 2, 35 · 3, 50 . 10, 51 : 5, 58 : 3, 168 : 18, 198 · 12; பரி. 6 : 60, 9 : 25; பரி. திர. 7 : 5, 8; சிறு. 66; பதிற். 63 : 9.
2. புறம். 35 : 3, 51 : 5, 198 : 12; பரி. திர. 7 5, 8; பதிற். 63 : 9; பரி. 9 : 25,
3. புறம். 50 : 10
4. அகம். 227 : 14; பதி. 2 . 5; புறம். 168 · 18
5. பரி. திர. 8 : 1
6. புறம். 50 : 10, 58 : 13 ; பரி. 6 : 60, 7 : 5 ; பரி. திர. 7 : 5, 8 ; அகம். 12 : 15 ; சிறு. 66

"..... கடுந்தேர்ச் செழியன்

**தமிழ்நிலை** பெற்ற தாங்கரு மரபின்

மகிழ்நனை மறுகின் மதுரை"[7]

என்று தமிழ் மொழி புனைந்துரைக்கப்பட்டுள்ளது. இப்பாடலடிகளில் விரைந்து செல்லும் தேரினையுடைய பாண்டியனுடைய ஆட்சியில் தமிழ்மொழி நிலைபெற்ற துன்பமற்ற முறைமையினையுடைய இன்பம் நிலவுகின்ற தெருக்களையுடைய மதுரை என்று கூறப்பட்டுள்ளது.

நல்லாட்சி புரிகின்ற பாண்டியனுக்குரிய மதுரையில் தமிழ்மொழி இலக்கணங்களாலும் இலக்கியங்களாலும் தமிழ் ஆராய்ச்சியால் நிலைத்ததோர் இடத்தைப் பெற்றுள்ளது என்பது தோன்ற "தமிழ்நிலை பெற்ற" என்பது பாடலில் வந்துள்ளது. தமிழ் ஆராய்ச்சியின் பயனால் துன்பமற்ற முறைமையினையுடைய இன்பம் இன்னது என்பதை மதுரையின் தெருக்களில் வாழும் மக்கள் உணர்ந்துள்ளனர் என்பது தோன்றுகின்ற வகையிலே "தாங்கரு மரபின் மகிழ்நனை மறுகின் மதுரை" என்று புனைந்துரைக்கப்பட்டமை உணரலாம். மதுரையில் பாண்டியர்கள் சங்கம் வைத்துத் தமிழ் ஆராய்ந்த நிலை குறிப்பாகப் பாடலில் புலப்படுகிறது எனலாம்.

## புறநானூற்றில் கூறப்படும் தமிழ்கெழு கூடல்

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்னும் புலவர் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியை,

"-----------------------------இவனே

நெல்லு நீரு மெல்லார்க்கு மெளியவென

வரைய சாந்தமுந் திரைய முத்தமும்

இமிழ்குரன் முரச மூன்றுட னாளும்

**தமிழ்கெழு கூடற்** றண்கோல் வேந்தே"[8]

என்று பாடியுள்ள பாடலடிகளில், பாண்டிய நாட்டில் வாழும் எல்லா மக்களும் உண்ணும் உணவும் பருகும் நீரும் கிடைக்கப் பெற்றுப் பசியின்றி வாழ்வதற்குரிய நல்லாட்சி புரிபவன் பாண்டிய மன்னன் என்று விளக்கப்பட்டுள்ளது. தமிழ் அப்பாண்டிய மன்னனுக்குரிய

7. சிறு. 65-67
8. புறம் 58 : 9 - 13

கூடல் நகரில் நிலைபெற்றுள்ளது என்பது தோன்ற 'தமிழ்கெழு கூடல்' என்று புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

## பரிபாடலில் கூறப்படும் தமிழ் வையை

தமிழ், அகப்பொருள் புனைந்துரைக்கும் ஊடலும் கூடலும் சேர்ந்து வையைக் கரையிலே காணப்படுகின்றன என்பதும் வையை ஆற்றிலே வந்த குளிர்ந்த அழகிய புதுநீர் தலைவன் தலைவியரது மகிழ்ச்சியை மேலும் மிகுவிக்கிறது என்பதும் தோன்ற பரிபாடல் அடிகள் அமைந்துள்ளன. அப்பரிபாடல் அடிகள் பின்வருமாறு:

"சலப்படை யானிரவிற் றாக்கிய தெல்லாம்
புலப்படப் புன்னம் புலரியி னிலப்படத்
தான் மலர்ந் தன்றே
**தமிழ் வையைத்** தண்ணம் புனல்"[9]

## பரிபாடல் கூறும் தண்டமிழ் வேலி

தமிழ் மொழியும் தமிழ் மக்களின் பண்பாடும் நிலவும் எல்லைக்குட்பட்ட தமிழ்நாடு பாண்டியன் ஆட்சியில் சிறப்புற்று விளங்குதலை,

"**தண்டமிழ் வேலி**த் தமிழ்நாட் டகமெல்லாம்
நின்று நிலைஇப் புகழ்பூத்த லல்லது
குன்றுதல் உண்டோ மதுரை கொடித்தேரான்
குன்றமுண் டாகு மளவு"[10]

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. தமிழ்மொழியும் தமிழ் இலக்கியங்களும் தமிழர்களுக்கு மிக்க இன்பம் தருவனவாகும் என்பது தோன்றத் 'தண்டமிழ்' என்று புனைந்துரைக்கப்பட்டுள்ளது. தமிழ்மொழியும் தமிழ் இலக்கியங்களும் பிறமொழி பிற இலக்கியம் ஆகியவற்றினின்றும் மாறுபட்டுத் தனித்தன்மை கொண்டவை என்பது தோன்றத் 'தண்டமிழ் வேலித் தமிழ்நாடு' என்று புனைந்துரைத்தமை கருதத்தக்கதாகும்.

9. பரி. 6 : 57 - 60
10. பரி. திர. 9 : 1 - 4

## தமிழ்கெழு மூவர் காக்கும் மொழி

தமிழ்மொழி, இலக்கியம் ஆகியவற்றின் நிலைபேற்றிற்குச் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர்களும் பாடுபடக் கூடியவர்கள் என்பது தோன்ற "தமிழ்கெழு மூவர்" என்னும் தொடர் காணப்படுகிறது. மூவேந்தர்கள் தம் வில்லாற்றலாலும் தம் வலிமையாலும் தமிழினம் நிலை பெறுதற்கு உழைப்பர் என்பது தோன்ற "வென்றியோடு வில்லலைத்து உண்ணும் வல்லாண் வாழ்க்கை" என்னும் அடி அமைந்துள்ளது எனலாம்.

தமிழ்மொழியையும் தமிழ் இலக்கியங்களையும் தமிழ்ப் பண்பாட்டையும் எத்தகைய அழிவினின்றும் காக்க வேண்டுமென்னும் முயற்சி மூவேந்தர்களிடையே இருந்தது என்பது தோன்ற "மூவர்காக்கும்" என்பது அமைந்துள்ளமை அறியலாம். தமிழர் அயல்பண்பாட்டுச் சூழலில் இருக்க நேரும் போது தமிழ்ப்பற்றுத் தோன்றுவது இயல்பாகும். இந்நிலைக் கேற்பத் தமிழ்மொழி பேசும் நிலத்தை விட்டுப் பிரிந்து சென்ற தலைவன்-தமிழ்மொழி மேலும் தலைவி மீதும் பற்றுக் கொண்ட தலைவன் - எப்படித்தான் தன்னைப் பிரிந்தானோ என்பது தோன்றத் தலைவி உரைப்பதாகப் பாடல் அமைந்துள்ளது. இப்பாடல் மாமூலனார் பாடியதாகும். பொதுவாக மாமூலனார் தமிழ்நாட்டு வரலாற்றில் கருத்துடையவர். இவர் பாடல்களில் தமிழ்மொழிப்பற்றும் நாட்டுப்பற்றும் ஆங்காங்கு மிளிர்வதை உணரலாம். இவர் அகப்பாடல் பாடுபொருளில் தமிழ் மொழிப் பற்றைக் குறிப்பிட்டமை இவரது மொழிக் கோட்பாட்டைப் புலப்படுத்துவதாகும். மாமூலனாரின் பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கவை.

> "----------------வென்றியோடு
> வில்லலைத் துண்ணும் வல்லாண் வாழ்க்கைத்
> **தமிழ்கெழு மூவர் காக்கு**
> **மொழி**பெயர் தேஎத்த பன்மலை யிறந்தே"[11]

## பரிபாடல் கூறும் தெரிமாண் மும்மைத் தமிழ்

பரிபாடல் திரட்டில் காணப்படும் பின்வரும் அடிகள் கருதத்தக்கவை.

> "**தெரிமாண் தமிழ்** மும்மைத் தென்னம் பொருப்பன்
> பரிமா நிரையின் பரந்தன்று வையை"[12]

11. அகம். 31 : 12 - 15
12. பரி. திர. 4 : 1 - 2

இப்பாடலடிகளில் தமிழுக்கு மூன்று வகையான அடைகள் கூறப்பட்டுள்ளன. தெரிதமிழ், மாண்தமிழ், மும்மைத்தமிழ என்று பாராட்டப்பட்டுள்ளமை உணர முடிகின்றது. தமிழ்மொழியும் தமிழ் இலக்கியங்களும் பல புலவர்களாலும் ஆராயப்படுகின்றன. தமிழ் சங்கம் வைத்து வளர்க்கப்படுகிறது என்னும் கருத்துத் தோன்றுமாறு தமிழ் 'தெரிதமிழ்' என்று புனைந்துரைக்கப்பட்டுள்ளது என உணரலாம். தமிழ் மொழியின் இனிய இயல்பு தோன்றுமாறும் தமிழ் எழுத்து சொல் சார்ந்த இலக்கணச் செழுமைக் கோட்பாடுகள் தோன்றுமாறும் தமிழ் 'மாண்தமிழ்' என்று புனைந்துரைக்கப்பட்டிருக்கிறது. தமிழ் பொதுவாக இயல் இசை நாடகம் என்ற மூன்று நிலைகளில் பழந்தமிழர்களால் வளர்க்கப்பட்டமை உணரலாம். அக்கருத்தினைப் போற்றும் வகையில் 'மும்மைத் தமிழ்' என்று புனைந்துரைக்கப்பட்டுள்ளது என உணரலாம். தமிழைப் போற்றி வளர்ப்போர் பாண்டியர் என்பதும் வையையாற்றங்கரையில் தமிழ் மொழியும் தமிழ் நாகரிகமும் செழிப்புற்றுத் தோன்றுகின்றன என்பதும் தோன்ற,

"------------தென்னம் பொருப்பின்
பரிமா நிரையின் பரந்தன்று வையை"

எனச் சுட்டப்பட்டுள்ளது.

## புறநானூறு கூறும் நற்றமிழ் முழுதறிதல்

மோசிகீரனார் சேரன் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும் பொறையை விளித்து அவனைப் பாராட்டிக் கூறிய பாடலடிகளில் தமிழ்ப்பற்றுப் பேசப்பட்டுள்ளது. கருதத்தக்க பாடலடிகள் வருமாறு:

"---------------முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய வென்னைத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
அதூஉஞ் சாலு**நற் றமிழ்முழு தறிதல்**
அதனோடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழுவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே"[13]

13. புறம். 50 : 5 - 13

"வீரமுரசம் நீராடி வருவதன்முன் மெல்லிய பூக்களையுடைய கட்டிலில், அது முரசுக் கட்டில் என்பது அறியாது, ஏறி அக்கட்டிலில் இருந்த என்னை வெகுண்டு நின் வாளால் இருகூறு ஆக்காமல் அச்செய்கையைக் கைவிட்டமை நல்ல தமிழ் முழுதறிதலைக் காட்டுவதாகும். அவ்வாறு நற்றமிழ் முழுதறிந்தமைக்கு மேலும் ஒரு செய்கை சான்றாக அமைவதாகும். என்னை நெருங்கி வந்து சாமரத்தால் குளிருமாறு வீசுதல் செய்தான்" என்று மோசிகீரனார் சேரனைப் புகழ்ந்து கூறும் வேளையில் தமிழ் மொழிக்கும் தமிழ்க் கல்விக்கும் அத்தமிழ்க் கல்வியைக் கற்ற புலவராகிய தனக்கும் உள்ள பெருமையை முற்றுமாக அறிந்தவன் பெருஞ்சேரலிரும்பொறை என்பது தோன்ற 'நற்றமிழ் முழுதறிதல்' என்று பேசுகிறார். தமிழ் மொழியாலேயே தான் உயிர் பிழைத்தமை விளங்குமாறு தனக்கு நன்மை செய்த தமிழைப் புலவர் 'நற்றமிழ்' என்று குறித்தமை நோக்கத்தக்கது.

## புறநானூறு கூறும் தண்டமிழ்க் கிழவர் மூவர்

தமிழ் மொழிக்கு உரிமையுடைய மூவேந்தர் "தண்டமிழ்க் கிழவர்" என்று கூறப்பட்டுள்ளார். இங்குத் தமிழ் மொழியோடும், தமிழ்நாட்டோடும் தமிழ்ப் பண்பாட்டோடும் மூவேந்தர் உறவுடையர் என்பது புலப்படுகிறது. ஈண்டு முதல் நிலையில் தமிழ் மொழியும் இரண்டாவது நிலையில் தமிழ் மொழி பேசப்படும் நாடும் மூன்றாவது நிலையில் அந்நாட்டில் நிலவி வரும் பண்பாடும் கருதப்பட்டமை உணரலாம்.

"------------- **தண்டமிழ்க் கிழவர்**
முரசுமுழங்கு தானை **மூவ ருள்ளும்**"[14]

என்னும் பாடலடிகள் கருதுதற்குரியன.

## புறநானூறு கூறும் தண்டமிழ் வரைப்பகம்

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுடைய புதல்வர் அவனைப் போலவே வீரத்திலும் வெற்றியிலும் சிறந்து விளங்குகின்றார் என்பது,

"----------------தொடுத்த
**தண்டமிழ் வரைப்பகங்** கொண்டி யாகப்
பணித்துக்கூட் டுண்ணுந் தணிப்பருங் கடுந்திறல்
நின்னோ ரன்னநின் புதல்வர்"[15]

**14.** புறம். 35 : 3-4
**15.** மேலது, 198 : 11 - 14

என்னும் அடிகளால் உணரக் கிடக்கின்றது இச்சூழலில வடம வண்ணக்கன் பேரி சாத்தனார் குறிப்பிட்டுள்ள "தண்டமிழ் வரைப்பகம்" எனபது கருதுத்தக்கது. தமிழ் பல்லாற்றானும் இனிமை செய்வதாக அமைவதால் 'தண்டமிழ்' என்று புனைந்துரைக்கப் பட்டுள்ளது. அத்தமிழ் மொழி பேசும் எல்லைக்குட்பட்ட மக்கள்வாழ் பூமியை 'தண்டமிழ் வரைப்பகம்' என்று கூறியுள்ளமை உணரலாம்.

## பரிபாடல் கூறும் தண்டமிழ்க் குடிகள்

தாமரை மலரில் உள்ள தாதுக்கு ஒப்பாகத் தண்டமிழ்க் குடிமக்கள் இருத்தல்,

"தாதின் அனையர் **தண்டமிழ்க் குடிகள்**"[16]

என்னுமடியில் குறிக்கப்பட்டுள்ளது. மகரந்தங்கள் மணம் பரப்புவது போலத் தமிழ்மொழி தன்புகழ் என்றும் பரந்துபட்டு நிற்கக் கூடியதென்பது உணர்த்தப்பட்டுள்ளது. தமிழ் மொழியைப் பேசும் மக்கள் இன்ப வாழ்க்கை வாழ்வதற்குத் தமிழ்மொழி இனிமை செய்யக்கூடியது என்பது தோன்றத் 'தண்டமிழ்' என்று கூறப்பட்டுள்ளது.

## பரிபாடல் கூறும் தள்ளாப் பொருளியல்பும் தண்டமிழும்

குறிஞ்சி நிலம் தமிழ் அகப்பொருளுக்கு உரிய நற்சிறப்புடையது. அக்குன்றினுடைய பயனைத் துய்க்காதவர் தமிழ் அகப்பொருளை ஆராயாதவரேயாவார் என்ற கருத்துப் பின்வரும் பாடலடிகளில் உணர்த்தப்பட்டுள்ளது. நீக்கமாட்டாத-தனித்தன்மை வாய்ந்த-தமிழ் அகப்பொருளை "**தள்ளாப் பொருளியல்பு**" என்று குறித்துள்ளமை உணரலாம். அகப்பொருள் அடுத்தடுத்துக் கற்குந் தோறும் இன்பம் பயக்க வல்லதாகலின் '**தண்டமிழ்**' என்று உரைக்கப்பட்டுள்ளது. தமிழ் அகப்பொருளும், தமிழ் அகப்பொருள் நூல்களும் பல்லாண்டுக்காலமாக ஆராயப்பட்டு வருகின்றன என்ற கருத்துத் தோன்ற, "தண்டமிழாய் வந்திலார் கொள்ளாரிக் குன்று பயன்"[17] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு ஈண்டு "தண்டமிழ்" என்பது தமிழ் மொழியில் தோன்றிய தமிழ் அகப்பொருள் இலக்கியத்தை உணர்த்தப் பயன்பட்டு வருகிறது.

## தமிழகப்படுத்த தழும்பன்

வழுதுணைத் தழும்பன் என்பான் தன் வாள்போர் ஆற்றலினாலேயே தமிழ்மொழி பேசப்படும் பூமி முழுவதையும் அகப்படுத்திக் கொண்டான் என்பது தோன்ற,

16. பரி. திர. 7 . 5
17. பரி.9:25 – 26

"---------------- வாய்வாட்

டமிழகப் படுத்த இமிழிசை முரசின் ...

பிடிமிதி வழுதுணைப பெரும்பெயர்த் தழும்பன்"[18]

என்று புனைந்துரைக்கப்பட்டிருககிறது.

## இமிழ்கடல் வேலித் தமிழகம்

தமிழகத்தின் கிழக்கு,மேறகு, தெற்கு என்ற மூன்று பகுதிகளிலும் கடலே எல்லையாக இருப்பதால், **"இமிழ்கடல் வேலித் தமிழகம்"** என்று கூறப்பட்டுள்ளது. இத்தகைய தமிழகம் சிறப்புறுமாறு இமயவரமபன் நெடுஞ்சேரலாதன் இமயத்திலே தன் விற்சின்னம் பொறித்து வந்தான். மேலும் ஆரிய மன்னர்களையும அடக்கி அவர்களிடமிருந்து கொண்ட திரைப்பொருளைப் பலருக்கு உதவிச் சிறப்புப் பெறறவன் இந்நெடுஞ்சேரலாதன் ஆவான்.[19] இவன் இவ்வாறு தன் வீரத்தாலும் வெற்றியாலும் தமிழ் பேசப்படும் பூமிப்பெருமையை மாற்றாருக்குப் புலப்படுத்தியவன் என்பது பாடலின் புனைந்துரையால் புலப்படுகிறது.

## இயற்கையின் சீற்றமுள்ள வழுதி

நீர், நெருப்பு, காற்று ஆகியவற்றின் சீற்றம் மிகுமாயின் இவ்வுலகில் அதனைப் பொறுப்பவர் யாருமில்லை. அவற்றையொத்த சினம் கொண்டு போர் செய்யும் வழுதி குளிர்தமிழ்நாடு பொதுவானது என்பதை ஏற்றுக் கொள்ளாதவனாய்ப் போரையேற்றுத் திரையை வேண்டுவானாயின் 'கொள்க' எனக் கூறிப்பசைவர் அச்சம் தீர்ந்தவர்களாயினர். ஈண்டுச் செழியன், செழியனைச் சார்ந்தோர்கள்(செழியன் படையினர், சான்றோர்) வெல்லக் கூடிய திறம் மிகுதியுடையவர்கள் என்பது புலனாகிறது. இங்குத் தமிழ்நாடு 'தண்டமிழ்' என்னும் சொல்லால் குறிக்கப்பட்டமையால் தமிழ் மொழியின் சிறப்பினையும் நாடு உடையதாக விளங்குகிறதென்னும் பொருள்படக் கூறப்பட்டுள்ளது.

"நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்
மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை
வளிமிகின் வலியு மில்லை யொளிமிக்

18. அகம். 227 : 13 - 17
19. பதிற். 2 : 1 - 5

கவற்றோ ரன்ன சினப்போர் வழுதி
**தண்டமிழ்** பொதுவெனப் பொறாஅன் போரெதிர்ந்து
கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே"[20]

என்னும் பாடலடிகள் கருதுதற்குரியன.

## பதிற்றுப்பத்தில் தண்டமிழ்

சிறிய இலைகளையுடைய உழிஞையைச் சூடி மிகுந்த தமிழ் வீரர்கள் உள்ள படையுடன் மலைகள் நிலை தளரும்படி முழுங்கும் (ஒசை எழுப்பும்) இடியேறு போல மிகுந்த கோபத்தோடு சென்று இரு பேரரசர்களைப் போரில் செல்வக் கடுங்கோ வாழியாதன் வென்றான். "தண்டமிழ்" என்பது இனிமையான தமிழ்மொழி பேசும் வீரர்களைக் குறிக்கும். இதனை,

"சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டி மிகைபடத் **தண்டமிழ்** செறித்துக்
குன்றுநிலை தளர்க்கு முருமிற் சீறி
ஒருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே"[21]

என்னும் பாடலடிகளின் மூலம் உணரலாம்.

## புறநானூற்றில் தமிழ்தலை மயங்கிய தலையாலங்கானம்

ஒலிக்கும் கடலால் சூழப்பட்ட இடத்தில் தலையாலங்கானத்தில் தமிழ்ப் படைகள் மோதின. அங்குள்ள அனைவரின் உயிர்களையும் ஒரு சேர அழிக்கும் வெற்றிச் சிறப்புடையவன் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், ஈண்டுப் போரில் படைகள் அழித்தன எனக் கூறாமல் தமிழ்ப்படைகள் போரில் வென்றன எனச் சுட்டப்பட்டுள்ளது. இது "தமிழ்தலை மயங்கிய தலையாலங்கானம்" என்னும் தொடரால் அறியப்படுகின்றது. இவ்வாறாகத் தமிழ் மறவரின் போர்ச்சிறப்பு விளக்கம் பெறுகின்றது என்பதனை,

20. புறம். 51 : 1-7
21. பதிற். 63 : 8 - 12

"இமிழகடல வளைஇய வீணடகன கிடக்கைத்
**தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து**
மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையும்
நின்னொடு தூக்கிய வென்வேற செழிய"[22]

என்னும் பாடலடிகளால் உணர முடிகின்றது.

## பாரதிதாசன் பாடல்களில் தமிழைப் பாடுதல்

தமிழைப் பழந்தமிழ், வண்டமிழ், தணடமிழ், நற்றமிழ், ஒண்டமிழ், பைந்தமிழ், செந்தமிழ் என்று போற்றிப் பாரதிதாசன் பேசியுள்ளாா.

### பழந்தமிழ்

தமிழா் வாழ்வின் பெருமையைச் சொல்லச் சான்றாக அமைந்த செந்தமிழ் எந்த நாளில் தோன்றியதோ எனப் புலவா்கள் கூறுவாா்கள் என்று பாடியுள்ளாா்.[23]

உழவுசெய்பவா்கள் ஏா் உழும்பொழுது முழங்கால் சேற்றில் நின்று கொண்டு **பழமையான தமிழில்** பாடினா் என்பாா்.[24]

முத்தமிழ் மாநாட்டில் எழுந்த போரில் ஈடு இணையில்லாத தமிழனின் பழந்தமிழ்ச் சான்றுகள் தந்தனா். அதைக் கண்ட பாா்ப்பனா்கள் வோ்த்தனா் என்று பாடியுள்ளாா்.[25]

### வண்டமிழ்

"சோழ, பாண்டிய மன்னா்கள் கன்னட, துளு, கவின் ஆந்திர நாடுகளை ஆண்டனா். அவா்கள் ஆண்டது **வண்டமிழ்** நாடா? வடவா் நாடா? கயல் கொடியா? புலிக்கொடியா? திண்ணமாக அறியமாட்டோம். பகைவா் அயலெனக் கூறினாலும் திராவிட நாட்டை மீட்போம். அதாவது தமிழ்மொழி பேசும் மக்கள் பகுதியை மீட்போம்" என எடுத்துரைக்கப்பட்டுள்ளது.[26]

22. புறம். 19 : 1 - 4
23. திருவாசகன் , ஆ., பாரதிதாசன் கவிதைகள் ப. 562
24. மேலது, ப. 657
25. மேலது, ப. 1912
26. மேலது, ப. 1978

அரசியலார் அலுவலகம், அறமன்றம் ஆகியவற்றில் அலுவல் பெற்றவர்களுக்குக் கிராமப் புரங்களில் பேசும் தமிழ்ப்பேச்சுப் பிடிக்கவில்லையென்கின்றனர். தமிழ்த்திருநாட்டில் பிறந்தோமென்ற எண்ணமும் இல்லை. அவ்வாறு சொல்பவர்கள் திருந்த வேண்டுமென்பதைக் குறிப்பிட்டுள்ளார்.[27]

கல்யாண சுந்தரர் இருபத்தைந்து ஆண்டுகள் தமிழ்த் தொண்டு செய்தவர், வலிமையான தமிழ் நாட்டில் அவர் செய்த தொண்டைப் பற்றிப் பின்வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

"மலிஇரு பத்தைந் தாண்டாய்
**வண்டமிழ்** நாட்டிலேநம்
கல்யாண சுந்தரர்தம்
தொண்டுகள் கண்டுவந்தேன்"[28]

## தண்டமிழ்

தன்னை நாடிய புலவர்களுக்கெல்லாம் முன்னாளில் கொடுத்த கொடையால்தான் இன்றுவரை **தண்டமிழ்** வாழ்கிறது.[29] "சாதியற்ற நல்ல வலிமை கொண்டவர்களின் தோள்களே குளிர்ந்த தமிழ் வாளினைத் தூக்கும் என என்னிடத்தில் சொன்ன அந்த உரைகள் இன்றும் என் காதில் ஒலிக்கின்றன. இந்தப் பேச்சுப் பாரதியாரின் உள்ளத்தில் இருந்து எழுந்ததாகும். சாதியை ஒழித்தால்தான் தமிழ் வளர்த்தல் நிகழும்."[30] யாழ் நூல் விபுலானந்தன் தாயைவிட்டு நீங்கினாலும் **தண்டமிழைத்** துறக்காத தூயவன் என அவரை வாழ்த்துகின்றார்.[31]

## நற்றமிழ்

தமிழ்மொழி தமிழர்களுக்கு நலம் தரும்.[32] தமிழகத்தில் அத்தமிழைத் தீயதொழில் (தமிழுக்குக் கேடு செய்யும் தொழில்) செய்யும் நரி போன்ற செயலுடையவர்களுக்குக் கற்பிப்பதைவிடக் கடிக்கின்ற நாய்க்குச் சொல்லித் தரலாமென்கிறார்.[33]

27. திரவாசகன்,ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 521
28. மேலது, ப. 537
29. மேலது, ப. 243
30. மேலது, ப. 593
31. மேலது, ப. 1905
32. மேலது, ப. 520
33. மேலது, ப. 533

"நலஙகணடா தமிழமொழியால

**நற்றமிழை** ஈடழிததல

நன்றோ?"[34]

அங்கையற்கண்ணியாகிய தமிழன்னை என்னையும் மதித்து என் கனவில் தோன்றி அடிகளார் வரவு பற்றியும் தமிழையும் பற்றிச் சொனனதால்தான் வந்தேன். என்னுடன் யானையில் வந்தருள் செய்யுங்கள் என ஊமையாயிருந்து பேசும்திறன் பெற்ற குருபரன் மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழ் பாட விரைந்து வரும் வழியில் திருமலை நாய்க்கன் கூறுவதாக அமைந்துள்ளது.[35]

"சொன்ன**நற் றமிழும்** பற்றிச்

சொன்னதால் வந்தேன்"

## ஒண்டமிழ்

"**ஒண்டமிழ்** மொழியின் முன்னேற்றம் ஒவ்வொன்றும் தமிழா உன் முன்னேற்றமாகும். தமிழனே நீ கண்திறந்து பார்ப்பாய். அதாவது தமிழ் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுவாய்" என்று கூறுவார்.[36]

ஈடில்லா மொழிபெயர்ப்புத் திறன் கொண்ட கந்தசாமி அவர்கள் மேலைநாட்டு முதுநூல்களை எல்லாம் மொழிபெயர்த்துத் தொண்டு செய்பவன். தமிழ்நூலுக்குச் சங்கநூற் சொல்லடைவு தந்தவன் பல நூல்கள் வாங்கிக் கற்பவன். அவன் செய்யும் செயல் ஒவ்வொன்றும் **ஒண்டமிழுக்கான** உரமாகும்.[37]

நல்லவை எல்லாவற்றிலும் நல்லது **ஒண்டமிழ்** மொழிக்காக உழைப்பதாகுமென மனத்தைத் தமிழிலேயே மயிலை-சீனி வேங்கடசாமி செலுத்தினார் என்று பாடியுள்ளார்.[38]

## பைந்தமிழ்

"செந்தமிழ் மொழியில் இசைப்பாடல்கள் இல்லையென்றால், பாழடைந்த கிணற்றில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்கிறேன். **பைந்தமிழில்** இசையில்லை என்று சொல்வதா? என் தாய்க்கு உடையில்லையென்று சொல்லலாமோ?" என்று பாடியுள்ளார்.[39]

34. திருவாசகன்,ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 520
35. மேலது, ப.279
36. மேலது, ப.513
37. மேலது, ப. 1904
38. மேலது, ப.1916
39. மேலது, ப. 536

உலகில் உள்ள விரிந்த வான், காற்றுவெளி எல்லா இடத்திலும் தோன்றிய பொருள்களில் அனைத்திலும் அசைவைச் செய்தாய். இயற்றமிழாம் **பைந்தமிழைப்** பேசச் செய்தாய். எல்லாவற்றையும் செய்யும் திறன் உருவாக்கும் திறன் தமிழுக்கு உண்டென்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளது.[40]

"பாலோடு நேர்தமிழ்" , "**பைந்தமிழ்**" என்று சிறப்பிக்கப்படும் தமிழ்மொழி எல்லா மொழிக்கும் அடிப்படை மொழி என்பதை அறிந்திருந்து ஆளுமை செய்பவர்கள் மேலோட்டமாகப் பேசினால் சாலோடு உள்ள நீர் எனச்சொல்வாய் கருங்குயிலே"[41] என்னும்போது தமிழ்மொழிக்கு ஊறு செய்யும் ஆட்சியைப் பயனறச் செய்யவேண்டுமென்ற எண்ணம் வெளிப்படுகின்றது.

## செந்தமிழ்

"**செந்தமிழ்** மொழியால் கம்பன் சிறப்படைந்தான். ஆங்கிலத்தால் அல்ல. பிறர் மொழி என்னும் மணிமுடி அணியைக் கழற்றி எறிந்து வாழ்க என வாழ்த்தி நாட்டை வாழவையுங்கள். நாட்டை அயலவரிடம் இருந்து பாதுகாக்க வேண்டுமானால் **செந்தமிழைப்** பாதுகாக்க வேண்டும்."[42]

"நம்மைப் பிடித்துவந்து ஆட்சி செய்தவர்களுக்கும் செந்தமிழைப் பயிற்றுவிக்கும் திறமைவாய்ந்தவர்கள் நம் பேராசிரியர்கள்"[43] என்பர்.

ஆங்கில மொழியைக் கற்றாலும் வேறு அயல்மொழியைக் கற்றாலும் எந்த நாளிலும் இனிமையான சுவையுடைய தமிழ்க் கனியைத் தொன்மை வாய்ந்த நாட்டின் செந்தமிழ்மொழி நூலை உயிரென மதிக்க வேண்டும்.[44]

## பாரதிதாசன் – தமிழ் பற்றிப் போற்றுதல் – தமிழ் அல்லாத மற்ற பொருள்களைப் பாடும்போது தமிழ் பற்றிப் போற்றுதல்

பாரதிதாசன் பாடல்களில், பிற பொருள்களைப் பாடும்பொழுதும் தமிழ் போற்றப்பட்டுள்ளமை உணரலாம்.

40. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 768
41. மேலது, ப. 792
42. மேலது, ப. 75
43. மேலது, ப. 1879
44. மேலது, ப. 534

**மனித வாழ்க்கை**

இலலற வாழ்கையில் தலைவியானவள் காலையில் எழுந்தவுடன் வாசல் தெளித்துக் கோலமிட்டாள.[45] அதன் பிறகு யாழினை எடுத்து மீட்டித் தமிழிசை பாடும் ஓசையைக் கேட்டுத தூங்கிக் கொணடிருந்த பிள்ளைகள் கணவன் ஆகியோர் விழித்தெழுந்து அவள் எதிரில் உட்கார்நதிருந்தனர். அக்காலை நேரத்தில் கேட்டு மகிழுமாறு பாடல் பாடினாள்.[46]

"பாவலர் தமிழிற் பழசசுவை சேர்த்தாள
**தீங்கிலாத் தமிழில்** தேனிசைக் கலவைபோல்"[47]

என்னும் பாடலடிகள் உணரத்தக்கன. தீமை சிறிதும் இல்லாத தமிழ்த்தேன் இசைக் கலவையைப் போல் தூங்கிய கணவன் பிள்ளைகள் ஆகியோரின் கருத்தைக் கலைத்தது என உவமையில் தமிழ் சுட்டப்பட்டுள்ளது.

**வீரம்**

"மனத்தில் ஒன்றை (திட்டத்தை) வைத்துக் கொண்டு செயல்படும் வஞ்சகரைக் கண்ட இடத்திலேயே எதிர்த்து நில். அவன் நம்மினத்தவனல்லன். பகைவரின் எல்லாச் செயலையும் மேற்கொண்டு அதிகாரம் செலுத்துவதெல்லாம் அவர்களுக்கா. அந்த நரிகளுக்கா அடிமைத் தனம் செய்கின்றவர்களோடு கொஞ்சும் நிலை வேங்கைப் புலிகளுக்கா (தமிழர்களுக்கா) தனி ஒருவனாகச் (ஒரினமாக) **செந்தமிழ்த்தாயை** அதாவது தமிழ்மொழி பேசும் மக்களை ஆட்சி செய்த தலைவனை வாளெடுத்துப் போருக்குச் செல்க"[48] எனத் தேனருவிப் பாடல் சுட்டுகின்றது. இவ்வாறு தமிழனின் வீரத்தைப் பற்றிக் கூறும்பொழுது தமிழ் தாயாக உருவகம் செய்யப்பட்டுள்ளது.

**மானம்**

எந்த இடத்தில் பிறந்தாலும் தமிழன் தமிழன்தான் (தமிழ் இனத்தவன்தான்). வேற்றினத்தவன் இங்கே பிறந்தாலும் அவன் அயலான். செந்நிற இரத்தத்தில் தமிழ்த்தன்மை நிரம்பியும் அயலானின் தன்மை கலக்காதும் தமிழன் வாழ வேண்டும். சிங்கம் வாழும் குகையில் நரிக்கு இடம் தந்து உரிமையை இழந்தோம். **ஆட்சி செய்த தமிழில்** ஆரியத்தைச் சேர்த்தார்கள். ஆயினும் தமிழர்களைக் கண்டு அஞ்சினர். அவர்களால்

45. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 286
46. மேலது, ப. 287
47. மேலது
48. மேலது, ப. 1047

எழுந்த உணர்வால் (தன்மான உணர்வால்) தமிழ்மொழியை ஆட்சியாக உடைய அரசு (தமிழர்கள்) வெற்றியடையும்.[49] இப்பாடலில் தன்மான உணர்வைச் சுட்டும்பொழுது தமிழ் மொழியின் முக்கியம் சுட்டப்பட்டுள்ளது.

மானத்தை நல்வாழ்க்கையெனக் கொண்டு தமிழ் மறவர்கள் வாழ்ந்தனர். அம்மற வேந்தர்கள் வழி வந்த தமிழ் மக்கள் பூனைகள் அல்லர். அவர்கள் புலிக்கு ஒப்பானவர்கள் என்று பாடியுள்ளார்.

## கொடை

கிளியே! உன்னைச் சிறைப்பிடித்து வந்து நாட்டில் உள்ள வீடுகள் தோறும் தினைக் கொல்லைக் குறவன் வைப்பான். அம்மனைகளில் தமிழுக்காகப் பொருளைக் கொடையாகக் கொடுப்பதுபோல் செல்வந்தர்கள் பொருள் கொடுத்து வாங்குவார்கள்.[50] என்னும்போது கொடுப்பவர்களின் கொடைத் தன்மையை விளக்கம் செய்யும் பொருட்டுத் தமிழ் சுட்டப்படுகின்றது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"தனக்கான பொருளைச் செல்வர்
**தமிழ்க்கீதல்** போல ஈவார்.!"

## கல்வி

"திப்பியை வடிகட்டிய தேனைப் போலச் சிப்பியிலிருந்து வந்த முத்தைப் போல மூன்று பெரிய வேந்தர்களின் வழியும் முத்தமிழின் உயிராயும் வந்த நீ அறம் சொல்லும் திருக்குறளைப் படிக்க வேண்டும் அதைப்பற்றி நாளை பார்த்துக் கொள்ளலாம். கல்வியைப் பயிற்றுவிக்கும் பருவத்தில் மூன்று தமிழையே உயிராகக் கொண்டவனே எங்களுக்கு அன்பு செய்ய வந்தாய்" - எனத் தாய் தந்தையர் இருவரும் தங்கள் மகனிடம் கூறுகின்றனர்[51]. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"முப்பெரு வேந்தர் வழிவந்தவனே,
**முத்தமி ழேஉ**யி ராய்வந் தவனே"

49. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1526
50. மேலது, ப. 439
51. மேலது, ப. 1576 - 1577

**பிறர்க்கென வாழ்தல்**

மக்கள் நல்லின்பம், கல்வி, எட்டுச் செல்வங்கள் ஆகியவற்றோடு இல்லாமை(வறுமை) இல்லாமல் எல்லோரும் எல்லாம் பெற்று வாழவேண்டும். இவ்வுலகில் அறிவுத் தமிழ் மூன்றும் துளிரெடுத்துச் செழித்து வளர வேண்டும். புகழ் வாழ்க்கையைக் கூற வேண்டும். புதல்வனைப் பெற்றெடுத்துப் புறந்தருதல் (நாட்டுக்குத் தருதல்) தாயின் கடமை எனவும் எல்லோரும் உழைக்க வேண்டும் எனவும் சுட்டப்பட்டுள்ளது.[52] இவ்வாறு தமக்காக மட்டும் உழையாமல் மக்கள் எல்லோரும் (பிறரும்) வாழ வேண்டுமென்ற எண்ணம் தோன்ற எடுத்துரைக்கப்பட்ட நிலையில், முத்தமிழ்(இயல், இசை, நாடகம்) படிப்படியாகச் செழித்து வளர வேண்டுமென்பது உணரப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"தோன்றத் **துளிர்ந்த தமிழ்**
மூன்றும் செழித்ததென்று
கொட்டுமுரசே"

**சங்க இலக்கியங்களும் தமிழ்த்தாய் வாழ்த்தும்**

தமிழைத் தாயாக-தெய்வமாக-வாழ்த்தும் போக்குப் பின்னாளில் தமிழகத்தில் ஏற்பட்டது. சங்க இலக்கியங்களில் இவ்வாறு தமிழைத் தாயாகப் போற்றும் வாழ்த்துப் போக்குக் காணப்படவில்லை.

**முன்னோர் தமிழ்த்தாய் வாழ்த்தும் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையின் தமிழ்த்தாய் வாழ்த்தும்**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் குறிப்பிடத் தகுந்தவர்களுள் மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை ஒருவராவார். இவர் தமிழ் நூல்களைக் கற்பிப்பதோடு அல்லாமல் இலக்கியம் இயற்றித் தமிழுக்குத் தொண்டு செய்தவர்.

தமிழின் பெருமையைப் பேசுவதற்கெனத் தமிழ்விடுதூது அமைந்தது போலத் தமிழைத் தெய்வமாக உயர்த்திக் கருணைப்பிரகாசர் கூறியுள்ளார். கடல் சூழ்ந்த நிலப்பகுதியிலுள்ள மொழிகளை எல்லாம் வென்றும் ஆரிய மொழியிலிருந்து வேறுபட்டும் உள்ள தமிழ் தெய்வமொழி எனக் கருணைப்பிரகாசரின் சீகாளத்திப் புராணத்தில் சுட்டப்பட்டுள்ளது,

52. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 252

"மறைமுதற் கிளந்த
அரைகடல் வரைப்பிற் பாடை அனைத்தும்வென் றாரியத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை யுண்ணினைந் தேத்தல் செய்வாம்"

என்னும் பாடலில் தமிழின் சிறப்புப் பேசப்பட்டுள்ளது. கால்டுவெல் போன்றோர்களுக்கு முன்பாகவே தமிழ் போற்றியுரைக்கப்பட்டுள்ளது.

பேராசிரியரின் தமிழ்த்தாய் வாழத்துப் பொருள் செறிந்த ஒன்றாகும்.

"நீராரும் கடலுடுதத நிலமடநதைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலுந தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே"

உலகின் முதன்மொழி தமிழ்மொழி என்பதை உணர்த்துவதற்காகவே இவர் தமிழ்மொழி வாழ்த்தைப் பாடினார். இவர் வடமொழியின் உதவியில்லாது தமிழ் தனித்து இயங்க முடியாதென்றவர்களின் கருத்தை எதிர்த்து 'மண்ணிடைச் சில இலக்கண வரம்பில்லா மொழி போல் எண்ண வேண்டா' என்று தனது மறுப்பைத் தெரிவித்தார்.

"பத்துப்பாட் டாதிமனம் பற்றினார் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே"

எனச் சுட்டித் தமிழ்மொழியில் அகப்பொருளிலக்கணம் உண்டு எனவும் வடமொழியில் அது இல்லை எனவும் சுட்டினார்.[53] இவருடைய தாக்கம் பாரதிதாசனுக்கு உண்டு.

## பாரதிதாசன் தமிழ்த்தாயை வாழ்த்துதல்

பாரதிதாசனும் தமிழைத் தாயாக உருவகித்துப் பாடியுள்ளார்.

"**தமிழே ஆதித் தாயே வாழ்க**
தமிழர்க் கெல்லாம் உயிரே வாழ்க
தமிழ்நாட் டுக்கும் பிறநாட் டுக்கும்

53. இராசேந்திரன், சே., தமிழ்க் கவிதைகளில் திராவிட இயக்கத்தின் தாக்கம், பக். 31 - 34

அமிழ்தாய் அமைந்த அம்மா வாழ்க !

ஊரில் தமிழன் மார்பைத் தட்டிப்

பாரில் தமிழன் நானே என்றும்

சீரைத் தந்த தமிழே வாழ்க

ஓரா உலகின் ஒளியே வாழ்க!"[54]

என்னும் பாடலடிகள் உணரத்தக்கன.

## செந்தமிழ்த் தாய்

செந்தமிழ்த்தாய் எனத் தமிழ்மொழியைத் தாயாக உருவகம் செய்கிறார். அத்தாய் தூயவளாகத் தனித்தன்மையோடு பிற மொழிக்கலப்பு அதாவது ஆங்கிலச் சொல், இந்திச் சொல், வடசொல் ஆகியனவற்றின் கலப்பில்லாதிருத்தல் வேண்டுமென்கிறார். அவ்வாறு கலப்பு ஏற்படுவதால் தமிழர்களின் தன்மானம் அவர்களைவிட்டு நீங்குமென்கிறார்.[55] மற்றும் "செந்தமிழ்த்தாய் தூய்மை இல்லாததால் வரும் துன்பத்தைத் தணிப்பது அரியது. மகிழ்ச்சியும் உண்டோ? தமிழ் மானம் அழிகிறது"[56] எனவும் சுட்டியுள்ளார்.

## தாயாக நாட்டை உருவகப்படுத்துதல்

இயற்கையில் உள்ள காடு, மலை, தென்றல், நிலம், இமயம் ஆகியனவற்றிற்குத் தாய் எனவும் கலை, செல்வம் என்பனவற்றிற்குத் தாய் எனவும் யோகத் தாய், வீரத்தாய், அமைதித் தாய், இன்பத்தாய், செல்வத்தாய், அன்புத்தாய் எனவும் மனிதருக்குத் தாய், வேந்தனுக்குத் தாய், சமயத்திற்குத் தாய், பாரதத்தாய் எனவும் தாயாகப் பல பொருள்களைப் பாரதிதாசன் உருவகப்படுத்தியுள்ளார்.[57]

## சங்க இலக்கியத்தில் மொழிக்கலப்பு

இந்தியாவில் ஆரியர்கள் நுழைந்த காலம் கி.மு.2000 என்று கூறுவர்.[58] தமிழகத்தில் ஆரியர்கள் நுழைந்த காலம் கி.மு.7 ஆம் நூற்றாண்டு என்பர்.[59] இவ்வாறு ஆரியர்கள் தமிழகத்தில் நுழைந்ததின் பின் மெல்லச் சமசுகிருத மொழிச் சொற்களும் தமிழுடன் கலக்கத் தொடங்கின என்றாலும் குறைவான இரண்டு விழுக்காட்டளவே சங்க காலத்தில் சமசுகிருதச் சொற்கள் கலந்துள்ளன என மறைமலையடிகள் கூறுவார்.[60]

54. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1089
55. மேலது, ப. 517
56. மேலது,
57. மேலது, ப. 86
58. முதலியார், ஏ.எல்., தமிழ் நாட்டு வரலாறு, ப. 10
59. இராசமாணிக்கனார், மா., தமிழ் மொழி இலக்கிய வரலாறு - சங்க காலம், ப. 80
60. சாரதா நம்பி ஆரூரன், தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ப. 80

அகலிகை, அங்குசம், அசசிரம், அசுரா, அஞ்சனம், அததிரி, அந்தி, அம்பா, அமரா், அமிா்தபானம், அமிா்து, அமிழ்தம், அரமியம், அரவிநதம், அருசசித்தல், அவுணா், ஆகுதி, ஆசான், ஆத்திரை, ஆதி, ஆரம், ஆராதனை, ஆவுதி, இந்திரன, இமயம், இயக்கன், இராமன், ஈமம், உத்தி, உரோகினி, உற்கம், எந்திரம், ஓணம், கங்கை, கடகம், கணம், கணிகை, கபிலம், கமலம், கரகம், கலாபம், கருவி, கவிதை, கவுதமன், கற்பகம், கன்னி, காமன், காரணம், குடாரி, குணம், குமரி, கோபம், கின்னரம், கௌரியா், சகடம், சடை, சண்பகம், சமம், சரணத்தாா், சருமம், சலதாரி, சலம், சாணம், சாபம், சரமரம், சாமன், சாரிகை, சாலேகம், சாவகா், சிகரம், சித்திரம், சிந்திக்க, சிமயம், சிமையம், சிரகம், சிரம், சுந்தி, சுருதி, சூருதி, சூதா், சேமம், சையம், சோபனம், தடாகம், தண்டம், தம்பலம், தமனியம், தருப்பை, தவசியா், தவம், காமம், திசை, திலகம், தூரியம், தெய்வம், தேசம், தேம், தேயம், நதி, நந்தி, நயனம், நாகம், நாடகம், நித்திலம், நிதி, நியமம், நீதி, நூபுரம், நேமி, படம், பதி, பதுமம், பாதகை, பிசாசா், பிண்டம், பிண்டி, பிரசம், பிருங்கலாதன், பூதம், போகம், மகம், மகரம், மஞ்சிகை, மண்டிலம், மத்தகம், மதானி, மது, மதுரை, மந்திரம், மாகதா், மாத்திரை, மாதவா், மாயம், மாா்ச்சனை, மிதுனம், முஞ்சம், முஞ்சை, முண்டகம், மிலேச்சா், மேகலை, யாமம், யூபம், ரதி, வச்சிய, வச்சிரம், வதுவை, வந்திக்க, வயந்தகம், வாகுவலயம், வாதி, விச்சை, விசயம், வீதி, வேதம், வேதாளிகா் முதலிய வடசொற்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுதல் குறிப்பிடத்தக்கதாகும் என்று இராசமாணிக்கனாா் கூறியுள்ளாா்.[61]

இவா் கூறுகின்ற சொற்களுள் ஆதி, கருவி, தேசம், தேம், தேயம், நாடகம், வதுவை ஆகிய சொற்கள் தொல்காப்பியத்தில் பயின்று வருவதால் அல்லது அச்சொற்களின் அடிச்சொற்களினின்றும் தோன்றிய சொற்கள் தமிழில் காணப்படுவதால் அவை தமிழ்ச்சொற்கள் அல்ல என்பதில் ஐயம் நிகழினும், பொதுவாக இராசமாணிக்கனாா் கருத்தை ஏற்றுக் கொள்ளலாம்.

## சங்ககாலத்திற்குப் பிறகு காலப்போக்கில் நிகழ்ந்த அளவிற்கு மிகுந்த மொழிக்கலப்பு

மிகப் பழங்காலத்தில் தொல்காப்பியா், "வடசொல்லை எழுத நோ்ந்தால் வட எழுத்து நீக்கப்பட்டுத் தமிழ் எழுத்தால் அச்சொல் எழுதப்படும்" எனக் கூறியுள்ளாா்.

61. இராசமாணிக்கனாா், மா., தமிழ் மொழி இலக்கிய வரலாறு - சங்க காலம், பக். 151 - 272

சங்க காலததில் தூய தமிழப் பாடல்களும் உரைநடைகளும் கையாளப்பட்டுள்ளன. அககாலத்தில் வடசொற்கள நூறறுககு இரண்டு சொல்லே கலந்துள்ளன என்றும் கி.மு. 3000 - கி.மு. 1000 காலததிற்குப் பிறகே வடசொற்கள் காலந்தோறும் பெரிய அளவில் கலக்கலாயின என்றும் மறைமலையடிகள கூறுவார். கி.பி ஆறாம் நூற்றாண்டுக்குப் பின்னெழுந்த அப்பர், சம்பந்தர் தேவாரங்களில் 20 விழுக்காடும் காணப்படுகின்றன. கி.பி 12-ஆம் நூற்றாண்டு முதல் உரை எழுதிய பார்ப்பனர்களான பேராசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், சேனாவரையர் ஆகியோர்தம் உரைகளில் வடமொழியைப் புகுத்தினர். வீரசோழியத்திற்கு உரை எழுதிய பெருந்தேவனார், புறப்பொருள் வெண்பாமாலைக்கு உரை எழுதிய சாமுண்டி தேவநாயகர் ஆகியோரைத் தொடர்ந்து சுப்பிரமணிய தீட்சிதர், சாமிநாத தேசிகர் ஆகியோர்தம் நூலான 'பிரயோக விவேகம்', 'இலக்கணக் கொத்து' முதலியவற்றில் வடமொழிக்கும் தமிழ்மொழிக்கும் இலக்கணம் ஒன்றே என்று வலியுறுத்திக் கூறினர். இந்நிலையை அடியோடு நீக்கி மறைமலையடிகளார் தனித்தமிழ் இயக்கம் செயல்பட்டது. வடமொழிக் கலப்பிற்குக் காரணமானவர்கள் பார்ப்பனர் எனப் பாவாணர், திருமலை முத்துசாமி, சோமசுந்தர பாரதியார், பரிதிமாற் கலைஞர், இராசமாணிக்கனார் முதலியோர் கூறியுள்ளனர். கால்டுவெலாரின் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் எனும் நூலில், பார்ப்பனர்கள், படித்துப்பட்டம் பெற்ற தமிழ்ப்பெரியோர்கள் என்றும் இவர்களின் பேச்சிலும், ஆராய்ந்து எழுதப்பட்ட தமிழ் உரைநடைகளிலுமே சமசுகிருதக் கலவை பெருமளவில் இடம் பெற்றுள்ளது என்றும் புராணச் சார்பான சமயங்கள், வழிபாட்டு முறைகள் ஆகியவற்றோடு சமசுகிருதச் சொற்களையும் பார்ப்பனர்கள் தமிழரிடம் புகுத்தினர் என்றும் இந்துசமயச் செல்வாக்கால், சமசுகிருத நெடுங்கணக்கு முறையும் சமசுகிருத ஒலி முறையும் தமிழ்நாட்டில் ஆட்சி புரியத் தொடங்கிய காலத்தில் தத்சம வகையைச் சேர்ந்த சமசுகிருதச் சொற்கள் தமிழ்நாட்டவரோடு தொடர்புகொண்டிருந்த பிராமண முனிவர்கள், அறிஞர்கள், வானநூல் வல்லுநர் ஆகியோர் மூலம் பெறப்பட்டவையாகும் என்றும் கூறியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.[62]

## பிற்காலத்தில் மொழிக்கலப்பும் தமிழுக்கு நேர்ந்த தீங்கும்

13, 14, 15 ஆம் நூற்றாண்டுகளில் தமிழில் மிகுந்த அளவு மொழிக்கலப்பு ஏற்பட்டது. இதைக் கண்ட மக்கள் பழந்தமிழ் இலக்கியங்களைப் படித்து ஆராய்ந்து அறிந்து கொள்கின்ற ஆர்வத்தால் தமிழில் கலப்புக் குறைந்தது. தமிழின் வளர்ச்சிக்குத்

62. தமிழமல்லன், க., தனித்தமிழ், பக். 4 - 31

தடையாக அமைநதவர்களுள குறிபபிடததகுந்தவா சுவாமிநாத தேசிகா ஆவார் என்றும தமிழ்மல்லன் குறிப்பிட்டுள்ளார்.[63]

மேலும், தமிழில் மொழிக்கலப்பு என்பது தேவையற்ற ஒன்றாகும் என்றும் புதிய கண்டுபிடிப்புகள் நிகழ்ந்தாலும் அவற்றைப் பற்றிப் பிறமொழியினின்று வருகின்ற சொற்களைத் தமிழ் மரபிற்கேற்பத் தமிழ்ச் சொல்லாக மாற்றினால் மொழியில் ஏற்படும் கலப்பையும் கடன் வாங்கலையும் தவிர்க்கலாம் என்றும் தமிழமல்லன் கூறியுள்ளார். தமிழைப் பொறுத்தவரையில் இயற்கையான முறையில் கலப்பு நிகழாமல், செயற்கையான முறையில், வழங்கி வந்த ஊர்களின் தமிழ்ப்பெயர்களும், மாந்தா பெயர்களும் பொருட்பெயர்களும் திட்டமிட்டு மாற்றப்பட்டதோடு அல்லாமல் நாளிதழ்களிலும் "ஸ்ரீமதி",'அகிம்சை', சுவாமிகள்', 'ஹைகோர்ட்', 'ஸ்ரீந்தி எதிர்ப்பு','பென்சன்', 'வருடம்' முதலிய சொற்கள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன என்றும் இவற்றையெல்லாம் கட்டாயமாகப் பயன்படுத்த வேண்டுமென்ற தேவையில்லை என்றும் ஆனால் தேவையில்லாமல் இவற்றைப் பயன்படுத்தித் தமிழுக்கு ஊறு செய்கின்றனர் என்றும் சுட்டிக்காட்டியுள்ளார்.[64]

## பாரதிதாசனின் தனித்தமிழ் ஈடுபாடும் அதற்கான பின்புலங்களும்

கால்டுவெல் மொழிநூல் கருத்துக்களாலும் மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை முதலிய அறிஞர்கள் தமிழ்த்தாயைத் தனித்தன்மையோடு போற்றிப் பாடியமையாலும் மறைமலையடிகளின் தனித்தமிழ் இயக்கத்தின் தாக்கத்தாலும் தமிழில் மொழிக்கலப்புச் செய்து எழுதலாகாது என்ற எண்ணவுறுதி பாரதிதாசனிடம்' தோன்றலானது எனலாம்.

## 'கால்டுவெல்' மொழிநூல் இன, பண்பாட்டு உணர்வினைத் தூண்டல்

தமிழ்மொழியின் சிறப்பினைப் போற்றிப் பல புலவர்கள் பாடல்கள் எழுதினர். அவர்களைப் போலக் கால்டுவெல் தமிழ்மொழியின் அமைப்பினையும் சிறப்பினையும் விளக்கியுள்ளார் என அவரே கூறியுள்ளார். 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்னும் மொழிநூல் தமிழ்மொழியின் சிறப்பு, பழமை, இலக்கணத் தன்மை ஆகியவற்றை விளக்குகின்றது. இதன் மூலம் தமிழரின் சிறப்பு உலகத்தில் பரவி இன உணர்வினையும் தூண்டும் தூண்டுகோலாக அமைந்தது.

63. தமிழமல்லன், க., தனித்தமிழ், பக். 50 - 56
64. மேலது, பக். 1 - 30

## தனித்தமிழ் உணர்வு

தமிழ்மொழி வடமொழித் தொடர்புடையது அன்று என்றும் அது தனித்தியங்க வல்லது என்றும் தமிழ் திராவிட மொழிகள் சமசுகிருதத்தோடு தொடர்புடையன அல்ல என்றும் தமிழ்மொழி தொன்மையானதென்றும் கால்டுவெல் தெளிவுபடுத்தினார்.

## திராவிடர் ஆதிகாலத்தவர் என்பதற்கான சான்றுகள்

1. தமிழில் இன்றுள்ள சொற்கள் நீர், மீன் ஆகியவை பழந்திராவிடச் சொற்கள். ஆதலால் திராவிடர் தொன்மையானவர் என்றும்

2. குமரிலபட்டர் 'திராவிட பாசா' எனக் கூறும் சொல்லாட்சியும் பாகவத புராணம், மாபாரதம் ஆகியன மூலமாக அறியப்படுகின்ற செய்திகளும் திராவிட மொழி ஆதிகாலத்தது என்பதை உறுதிசெய்வதாகும் என்றும்

3. தமிழ்ப் பழஞ்சொற்களின் தொகை இன்னது என்றும் அவர் விளக்கிக்காட்டியுள்ளார்.

கால்டுவெல்லின் மேற்காட்டிய கருத்துக்கள் பின்னாளில் தனித்தமிழ் இயக்கம் வேரூன்ற அடித்தளம் இட்டன எனலாம்.[65]

## மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை ஊட்டிய தமிழ் உணர்வு

தமிழ்மொழி கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு ஆகிய மொழிகளை உருவாக்கித் தானும் தலைநிமிர்ந்து நின்றுள்ளது. அம்மொழி சிறப்பித்துப் பாடிய சுந்தரம் பிள்ளையவர்கள்தன் செய்யுள் நாடகத்திற்கு மனோன்மணீயம் எனப் பெயரிட்டார். இந்நாடகம் தமிழ்நாட்டு வாழ்க்கையை மையமாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது.

## பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டில் வடமொழிக்கலப்பும் தனித்தமிழ் இயக்கம் தோன்றி வளர்ந்தமையும்

65. இராசேந்திரன், சே., தமிழ்க் கவிதைகளில் திராவிட இயக்கத்தின் தாக்கம். பக். 29–30

பத்தொன்பதாம் நூற்றாண்டில்(1916) மக்களிடையேயான செய்தித்தாள்கள், அழைப்பிதழ்கள் ஆகியவற்றிலும் அரசு அலுவலகங்களிலும் வடமொழிப் கலப்புகள் நிகழ்ந்தன. முத்தமிழான இயல், இசை, நாடகம் ஆகியவை வடமொழியின் ஆதிக்கத்தால் நலிவுற்ற நிலையிலிருந்தன. அக்கால கட்டத்தில் வாழ்ந்த மறைமலையடிகளார் மும்மொழி (தமிழ், ஆங்கிலம், வடமொழி) ஆற்றல் உடையவர். பிறமொழிக் கலப்பால் தமிழ்மொழி அழிதலைக் கண்டு தமிழைக் காத்தல் செய்தல் வேண்டி 1916-இல் தனித்தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்தார்[66].

## தனித்தமிழ் வளர்ச்சிக்கான பணிகள்

தமிழ்மொழி தனித்தியங்க சி.யு.போப், கால்டுவெல் வின்சுலோ முதலானோர்கள் எழுதிய ஆய்வுக்கட்டுரைகள், நூல்கள் ஆகியன காரணமாகின. தமிழுணர்வு அடிகளாருக்கு மட்டுமல்லாமல் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, வி.கோ, சூரிய நாராயண சாத்திரியார் ஆகியோர்க்கும் இருந்தது. ஆனால் தனித்தமிழ் இயக்கமாக வளர்த்த சிறப்பு மறைமலையடிகளாரையே சாரும். தனது தனித்தமிழ் இயக்கப்பங்களிப்பாகத் தமிழ்ச் சொற்களைக் கையாண்டதோடு மட்டுமல்லாமல் அனைத்துத் துறைகளிலும் தனித்தமிழ் இலக்கியங்களைப் படைத்தும், அறிவியல் சொற்களைத் தமிழாக்கம் செய்தும் பணியாற்றியுள்ளார். தனித்தமிழ் வளர்த்த தாய்மொழிக் கல்வியின் இன்றியமையாமையை எடுத்துரைத்துள்ளார்.

இவ்வியக்கம் தமிழின் மறுமலர்ச்சி, தமிழின மேம்பாடு, சைவ சமய வளர்ச்சி, பார்ப்பனர் ஆதிக்க ஒடுக்கம் ஆகியனவற்றையும் உள்ளடக்கியதாகும். இது மொழி பற்றிய இயக்கம் மட்டுமன்று வடமொழி வழிபாட்டை எதிர்த்துத் தமிழே ஆலய வழிபாட்டு மொழியாதல் வேண்டுமென்று தமிழ்ப் பற்றாளர் விரும்பியதால் இவ்வியக்கம் பார்ப்பனர் மறுப்பு இயக்கமாகவும் ஆயிற்று. இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் தமிழ்மொழிக் காவலர் மறைமலையடிகளும் தமிழினக் காவலர் ஈ.வே.ரா அவர்களும் இணைந்தனர்.

அடிகளாரின் இடைவிடாத முயற்சியால் தமிழ்க் கல்வியில் அறிவியல் நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டும் கலைச்சொல்லாக்கத்தில் தனித்தமிழ் மரபு பின்பற்றப்பட்டும் அயல்மொழிக்கலப்புக் குறைந்தது. இசைத் துறையிலும் மொழிக் கலப்புத் தேவை என்ற உணர்வேற்பட்டதால் தமிழிசை இயக்கம் தோன்றியது.

அயல்நாட்டினருடன் தொடர்பு கொள்ளும்போது பண்பாட்டுக்கலப்பு, மொழிக்கலப்பு ஆகியன ஏற்படுகின்றன. மொழிக்கலப்பால் தமிழ்ச் சொற்கள் வழக்கிழந்து பிறமொழிக்கு அடிமையாய் உரிமை இழப்பும், அரசியல் அடிமைத்தனமும் ஏற்பட்டன. மொழித்தூய்மை

66. தமிழமல்லன், க., தனித்தமிழ், பக். 60 - 65

மேற்கொள்ளாமையால் தமிழ் பேசுபவா குறைநதனா. தமிழா் பெருகி, தமிழினம் மேலோங்க வேண்டுமானால் மொழிததூய்மை இன்றியமையாதது என அடிகளாா் கூறுகின்றாா்.

இவ்வாறாக. மொழித் தூய்மையை இவா் மட்டுமல்லாது இவருக்கு முன்பாகச் சுப்பிரமணிய சிவா, பாரதியாா், வ.உ.சிதம்பரனாா் ஆகியோா் பாதுகாத்தனா். தனித்தமிழை விரும்பாதவா்கள் இந்த நடை பண்டிதா்க்கே உரியது என்று குறை கூறினா். திரு.வி.க, மு.வ, மு.வரதராசனின் உரைநடை தூய தமிழிலும் எளிய நடையிலும் அமைந்திருப்பதும் இவா்கள் வழியில் பல உரைநடை எழுத்தாளா் எளிய, இனிய தமிழில் எழுதி வருவதும் இக்கூற்றுப் பொருந்தாதென்பதை விளக்கும். சிறந்த கருத்துக்களையும் சொல் வளங்களையும் உடைய தமிழ்மொழி வடசொற்கலப்பால் தனித்தன்மையிழந்த அவலநிலையைக் கண்டு மறைமலையடிகளாா் மனம் வருந்தினாா். அவா் காலத்தில் இராமாயண, மகாபாரதக் கவிதைகள் மணிப்பவள நடையில் கூறப்பட்டன. அதனை அடிகளாா் மாற்றினாா். தூயதமிழில் சொற்பொழிவாற்றும் அடிகள் தாம் நிகழ்த்த விரும்பும் சொற்பொழிவின் பொருளை நன்கு எண்ணி அதனைப் பற்றிய கருத்துக்களை முறைப்படத் தொகுத்தும் வகுத்தும் எழுதிக் கொள்வாா். அவையே பின்பு நூல்வடிவில் வெளியிடப்பட்டன.

சென்னை புத்தகாலயப் பிரசார சங்கத்தாா் தமிழன்பா் மாநாட்டை நடத்த வெளியிட்ட அறிக்கையில் பிறமொழிச் சொற்கள் கலந்திருந்தன. அதன் காரணமாக அக்கூட்டத்தில் கலந்துகொள்ள அடிகள் மறுத்துவிட்டாா். தமிழன்பா் மாநாட்டில் அடிகள் கலந்து கொள்ளாதது பெருங்கிளா்ச்சியை ஏற்படுத்தித் தமிழுணா்வு தூண்டப்பெற்றது. இம்மாநாட்டிற்குப் பின்னரே கலைச் சொல்லாக்க இயக்கமும் இந்தி எதிா்ப்பு இயக்கமும், தமிழசை இயக்கமும் தோன்றி வளரலாயின.[67]

## சாமிநாதையா் முதலிய தமிழறிஞாின் வடமொழிப்பற்றும் தமிழில் மொழிக்கலப்பும்

"தமிழறிஞரான உ.வே.சா 'தைாியம்', 'புத்தக ரூபம்', 'வருடம்', 'உபஅத்யசக்ஷகா்' முதலிய எண்ணற்ற வடசொற்களைக் கையாளுகிறாா். கையாளுவதோடு மட்டுமல்லாமல் அச்சொற்களைத் திருத்தம் செய்யவோ, பிழையென்று நீக்கவோ கூடாதெனக் கூறுகிறாா். ஏனெனில் இச்சொற்கள் யமகம், திாிபு, சிலேடை போன்ற அணிகளுக்காக 800 ஆண்டுகளுக்கு முன்னரே பயன்படுத்தப்பட்டுள்ளன.

67. சாரதா நம்பி ஆரூரன், தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளா்ச்சியும், பக். 212 - 226

ஒருமுறை வ.சு. செங்கல்வராயர் இவரிடம் "நேற்றுத் திரு சகன்னாதன் அவர்கள் சொற்பொழிவைக் கேட்டேன், நன்றாயிருந்தது" என்று சொன்னவுடன் சீனம் கொண்டு "என்னையா சொற்பொழிவு? உபந்நியாசம், பிரசங்கம் என்று சொல்லாலென்ன?" என்றார்.

மறுமுறை உ.வே.சா வின் மாணவர் குமாரசாமி செட்டியார் தன் ஆசிரியரைக் கண்டு 'ஐயர்வாள், நலமா?' என்றாராம். ஐயர் சினந்து, 'என்ன நலம்! சௌக்கியமா சுகமா என்று சொல்லக் கூடாதா?' என்றாராம்.

மேற்கூறிய சான்றுகளை வ.சுப்பையா உ.வே.சாவின் வடமொழிப் பற்றினைக் கூற எடுத்துக் காட்டியுள்ளார்

சாமிநாதையர் முதலிய தமிழறிஞர் வடமொழிப் பற்றாலும் தமிழ்மொழியில் கலப்பு நேர்ந்தமை உணரலாம்." என்று சாரதா நம்பி ஆரூரன் கூறியுள்ளார்.[68]

## தனித்தமிழ் போற்றிய தமிழர்கள்

ம.பொ.சி யானவர், மறைமலையடிகள் தனித்தமிழ் பேசலாம், ஏனெனில் அவர் படித்த மக்களிடையே வாழ்ந்தவர். பாமர மக்களிடையே அவர் பழகவில்லை. ஆனால், அரசியல்வாதிக்ள தனித்தமிழ் பேசினால் அதற்கு வரவேற்பு இருக்காதெனக் கூறினார். ஆனால், திரு.வி.க, ப.சீவானந்தம், சி.என் அண்ணாதுரை முதலானோர் அரசியல் கூட்டங்களில் நல்ல தமிழில் நல்ல கருத்துக்களைப் பேச வேண்டுமெனத் திரு.வி.க. கூறினார்.

புதுச்சேரியில் திரு.வி.க. மேடையில் பேசினார. அக்கூட்டத்திற்கு வந்திருந்த பாரதியார் பார்த்து மகிழ்ச்சியுற்றதைப் பார்த்த பாரதிதாசன்,

"பொதுவினர்க்குச் சிலப்பதிகாரச் சுவையை
நடையழகைப் புகலும் போதில்
இதுவையா பேச்சென்பேன், பாரதியார்
கைகொட்டி எழுவார் வீழ்வார்"

எனப் புகழ்ந்து பாடினார்.

68. சாரதா நம்பி ஆரூரன், தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், பக். 57 - 60

திரு.வி.க வின சொற்பொழிவுகள தொகுக்கப்பட்டுத் தமிழ்த்தென்றல், இளமை விருந்து, உள்ளொலி என்று நூல்களாக வெளியிடப்பட்டன. இவர் வழி சீவானந்தம், சி.என்.அண்ணாதுரை, கி.ஆ.பெ. விசுவநாதம், சா.கணேசன், விபுலாநந்த அடிகள், மறை.திருநாவுககரசு, ஔவை சு. துரைசாமிப்பிளளை, ரா.பி. சேதுப்பிள்ளை, பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியார், திருவாசகமணி, கே.எம. பாலசுபபிரமணியம், குன்றக்குடி அடிகளார் முதலியோர் மேடைத் தமிழை வளாத்ததில குறிப்பிடததகுந்தவர்களாவர்.[69]

## பாரதிதாசனின் தனித்தமிழ் ஈடுபாடும் மொழிக்கலப்பு எதிர்ப்பும்

தமிழில் உள்ள சொற்களைப் பயன்படுத்தாமல், வடசொற்கள் பயன்படுத்துவதை அவர் வெறுத்தார். மறைமலை அடிகளாரின் தனித்தமிழ் இயக்கம் வளர்ச்சியடையப் பெரியாரின் தன்மான இயக்கம் பெரிதும் துணை செய்தது. தமிழுடன் சமசுகிருதக் கலப்பு ஏற்பட்டதால் தான் தமிழ்மொழி அதன் தனித்தன்மை இழந்துவிட்டது. தமிழ் மக்களின் அன்றாட வழக்கிலுள்ள நாளிதழ்களில் வடமொழிக் கலப்பில்லாமல் இல்லை. எல்லாவற்றிற்கும் தமிழில் சொற்கள் இருந்தும் வடமொழியைப் பயன்படுத்துகின்றனர். ஏனென்றால், தமிழை அழித்து மறையச் செய்வது அவர்களின் நோக்கமாகும் என்னும் பெரியாரின் சிந்தனைகளாலும், மறைமலையடிகளின் தனித்தமிழ் இயக்கத்தாலும், தன்மான இயக்கத் தோழர் பூவாளுர் அ.பொன்னம்பலனாரின் சந்திப்பினாலும் பாரதிதாசன் 1943 ஆம் ஆண்டிலிருந்து தனித்தமிழில் எழுதுவதைக் கையாண்டார். அயல்மொழிச் சொற்களைத் தவிர்த்துத் தூய தமிழ்ச் சொற்களைக் கையாண்டால் தமிழுக்கு ஏற்பட்டுள்ள இழிவு நிலை அகலும். இத்தகைய சிந்தனைகளைத் தனது பாடலில் சுட்டியுள்ளார். பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"தமிழிலேயே பேச வேண்டும் - அது
தனித்தமிழ் வளர்ச்சியைத் தூண்டும்
விவாக சுப முகூர்த்தமென
வெளிப்படுத்தும் மண அழைப்பில்
மேன்மை என்ன ?"

"வடமொழியும் பிழைத்தமிழும் பெருகாவிட்டால்
வருநாளில் தமிழழியும் வடமொழி மேலோங்குமெனும் கருத்தோங்கு"

69. சாரதா நம்பி ஆருரன், தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், பக். 226 - 227

தமிழை அதன் தனமையை நிலை தடுமாறச் செய்யும வடமொழியை எதிர்க்கிறார். குறிஞ்சித் திட்டில் வடமொழிக் கலப்போடு பேசுவதைத தவிர்த்துத் தமிழிலேயே பேச வேண்டுமென்ற தனது கருத்தை முன்வைத்துத் தனது மொழிப்பற்றை அதாவது தனித்தமிழ்ப் பற்றை வெளிப்படுத்துகிறார். வேற்றினக் குழு குறிஞ்சித்திட்டில் (தமிழ் நிலத்தில்) நுழைந்து நயவஞ்சகமான முறையில் மதம் பரப்புவதன்மூலம் வடமொழியையும் பரப்புதல் செய்கின்றனர் என்பதைத் தெளிவாகச் சுட்டுகின்றார்.[70]

## பாரதிதாசன் மொழிக்கலப்பை எதிர்த்தல்

இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் நாளிதழ்களின் பெயர்களில் மட்டுமில்லாது இதழ்களின் நடையிலும் வடமொழிக் கலப்பு மிகுந்திருந்தது. இவ்வாறு மிகுந்திருந்ததால் வடமொழி பயின்றார்க்கு மட்டுமே விளங்கும்படியிருந்தது. இவ்வகையில் அமைந்த சுதேசமித்திரன் ஆங்கில மொழிச் சொற்களை அப்படியே தமிழில் எழுதி வெளியிட்டதால், சுப்பிரமணிய சிவா “சுதேசமித்திரன் அறிவைப் பரப்புகிறதா (அ) ஆங்கில பாஷையைப் பரப்புகிறதா” என்று வினவித் தன் எதிர்ப்பைத் தெரிவித்ததைப் போல் பாரதியாரும், திரு.வி.கவும் இக்கலப்பு நடையை எதிர்த்தனர்.

மொழித்துறையில் ஈடுபட்டவர்கள் மொழிப்பயிற்சி உடையவராதல் வேண்டும் எனவும் இலக்கணமும் இலக்கியமும் தெரியாதென ஏடெழுதினால் கேடு வருமெனவும், கலைப்பண்பும், உயர்நினைப்பும் உடையவர்களே ஏடெழுதும் பணியைச் செய்ய வேண்டுமெனவும் பாரதிதாசன் விரும்பினார்.[71]

## பொதுமக்கள் வாழ்வில் வடசொற்கலப்பு

பொதுமக்கள் வாழ்வில் இடம்பெறும் விழா, சடங்கு முதலிய அழைப்பிதழ்களில் பிறமொழிச்சொற்கள் கலந்திருந்தன. எடுத்துக்காட்டாக, “எனது தாயார் இயற்கை எய்தியதை (சிவலோக பதவி அடைந்ததை) முன்னிட்டு இரவு கல்நாட்டி, (பாஷாணஸ்தாபனம் செய்து) மறுநாட்காலை ------ கரையில் நீர்க்கடன் (உத்தரகீரியை) நடக்கும் விவரம் அறியவும்” என எழுதுவதில்லை. அடைப்பிற்குள் உள்ள வடமொழிச் சொற்கள் நீக்கற்பாலன.

கடைத்தெருக்களிலுள்ள விளம்பரப் பலகைகளில் தமிழ்ப் பெயர் எழுத வேண்டுமெனவும் பிறமொழிப் பெயர் எழுதக் கூடாதென்றும் தம்முடைய எண்ணத்தைப் பின்வருமாறு வெளிப்படுத்தியுள்ளார்.

70. தங்கப்பிரகாசம்,ச., பாரதிதாசன் பாடல்களில் பெரியாரின் சிந்தனைகள், பக். 119 - 120
71. சாரதா நம்பி ஆரூரன், தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், பக். 218 - 229

"உணவுதரு விடுதியினைக்
'கிளப்' பென வேணடும் போலும்
துணிக கடைககுச சிலகுஷாப
எனும் பலகை தொங்குவதால்
சிறப்புப் போலும் !

மணக்க வரும் தெனறலிலே
குளிரா இல்லை ? தோப்பில்
நிழலா இல்லை ?
தணிப்பரிதாம் துன்பமிது !
தமிழகத்தின் தமிழ்த் தெருவில்
தமிழ்தா னில்லை"

வடமொழிப்பற்றுள்ள ஆட்சியாளர்கள் ஆட்சித்துறைத் தமிழில் வடமொழி, ஆங்கில மொழி பயன்படுத்தியதைப் பாரதிதாசன் எதிர்த்துள்ளார். இதனை,

"அரசியலார் அறிக்கையிலும
சுவடியிலும் தமிழ்ப்பெருமை
அழித்தி டக்கை
வரிசையெல்லாம் காட்டுவதோ?

"அரசியலார் அலுவலகம்
அறமன்றம் இங்கெல்லாம்
அலுவல் பெற்றீர்
உரையனைத்தும் ஆங்கிலமோ !
உணர்விலையோ? ஒழுக்கந்தான்
இதுவென் பீரோ?"

எனக் கூறியுள்ளார்.

"பிறமொழிக் கலப்பின்றி நம் தமிழ் மேம்பட முடியாதெனக் கூறுவோரை இடித்துத் தன் ஆற்றொழுக்கான பாடல்களைத் தூயதமிழில் வடித்தளித்து உயரிய இடத்தையும் நிலைநிறுத்தினார்" என்பது சான்றாகும் என மன்னர் மன்னன் கூறியுள்ளார்.[72]

72. சாரதா நம்பி ஆரூரன், தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், பக். 60 - 67

## திராவிடம் என்ற சொல்லினின்றும் தமிழ் தோன்றவில்லை என்னும் கருத்து

திராவிடம் என்ற சொல்லைத தமிழ என்ற சொல்லின் திரிபாகக் கொள்ளலாம் என்பர் கால்டுவெல். இவரால் இனவுணர்வும பண்பாட்டு உணர்வும் தூண்டப் பெற்றிருப்பினும் திராவிடம் என்ற சொல்லினின்றும் தமிழ் என்ற சொல் தோன்றியதாகக் கால்டுவெல் கூறிய கருத்தைப் பல தமிழறிஞர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. பாரதிதாசனும் ஏற்றுக் கொள்ளவில்லை. மேலும், திராவிடம் என்ற பெயரைத் தமிழுக்கு யார் வைத்தார் எனபது தெரியவில்லை. தமிழ் நாட்டோடு தொடர்புகொண்டு தமிழ் அறியாதவர் அதற்கு இப்பெயரைச் சூட்டினார்கள் என்று சொன்னாலும், திராவிடம் என்ற சொல்லுக்கு முற்பட்டது 'தமிழ்' என்ற இனிய சொல். தமிழ் அறியார் நாவில் 'தமிளாகி' பிறகு 'திரமிள்' ஆகி அதன்பின் 'திராவிடம்' ஆகி இருக்க வேண்டும் என்று சொல்வதே பயனுடையதாம். இதையே பாரதிதாசனாரும் 'தமிழின்' திரிபே 'திராவிடம்' எனக் கூறுகிறார்.[73] அதனை உணர்த்தும் பாடலடிகள் பின்வருமாறு:

"திராவிடம் என்று செப்பிய தேன் எனில்
'திருத்தமிழம்' எனும் செந்தமிழ்ப் பெயரை
வடவர் திரமிளம் என்று வழங்கினர்
திரமிளம், பிறகு திராவிடம் ஆனது
வேட்டியை வடவர் வேஷ்டி எனினும் அவ்
வேட்டி திரிந்த வேஷ்டியும் தமிழே
அதுபோல்,
திருத்தமிழகத்தைத் திராவிடம் என்றால்
இரண்டும் தமிழே என்பதில் ஐயமேன்?"[74]

பாரதிதாசன் தனது இசையமுது இரண்டாம் பகுதியின் நூல் முன்னுரையில் "இருபதாண்டுக்கு முன் எழுதப்பட்டவைகளையும் தேடி இதிற் சேர்த்திருக்கிறார் அலுவலகத்தார். இது படிப்பவர்க்கே தெரியும், வடசொல் கலந்திருப்பதால்" என எழுதியுள்ளார். அவரின் பாடல்களில் வடசொல் கலந்துள்ளமை பற்றிய எண்ணமும் அதனைத் தவிர்க்க வேண்டுமென்ற எண்ணமும் இவ்வாறு எழுதும் காரணங்கள் எனலாம்.

73. இராசேந்திரன், சே., தமிழ்க் கவிதைகளில் திராவிட இயக்கத்தின் தாக்கம், ப.3
74. திருவாசகன், ஆ.,பாரதிதாசன் கவிதைகள், ப. 1977

இவர்தம் பாடலில் 'ருசி' எனனும் சொல வந்துளளதாகப பொன்னம்பலனார் கூறியுள்ளார். அதனைத் திருத்தி வடிவமைத்துப பிறகு வெளியிட்ட பாடலின் வடிவம் பின்வருமாறு:

"கனியிடை ஏறிய சுளையும - முறறற
கழையிடை ஏறிய சாறும
பனிமலர் ஏறிய தேனும - காய்ச்சிப்
பாகிடை ஏறிய 'சுவையும்' "

"மனைமக்கள் தூங்கினார் நள்ளிரவில் விடைபெற்று
வழிநடைச் சிரமம இன்றி
மாபெரிய சிந்தனா லோகத்தை அணுகினேன்
வந்தனா என்னெதிரில் ஒருவர்"

இது, திருத்தி 1957 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. 'சிரமம்' என்ற சொல் 'தொல்லை' எனவும் 'சிந்தனா லோகம்' என்ற சொல் 'நினைவென்ற உலகம்' எனவும் திருத்தி அமைக்கப்பட்டன. ஆனால் அவர் எழுதிய அனைத்துப் படைப்புகளிலும் இவ்வாறு செய்துவிடவில்லை, மொழிநடையில் மாற்றம் ஏற்படுத்தி வாழ்ந்த காலத்தில் அவரோடு தொடர்புடைய தனித்தமிழ் அறிஞர் பெருஞ்சித்திரனார் அனைத்து வடசொற்களையும் களைந்துவிடலாமெனக் கூறியதைக் கேட்ட பாவேந்தர், தன்னுடைய படிப்படியான வளர்ச்சி எல்லோருக்கும் தெரியட்டுமெனக் கூறினார்.[75]

பாரதிதாசன் பாண்டியன் பரிசில் சிங்கம் முதலிய இருபத்தேழு சொற்களும் குடும்ப விளக்கில் அன்னம் முதலிய முப்பத்தேழு சொற்களும் குறிஞ்சித்திட்டில் விநோதை முதலிய எட்டுச் சொற்களும் கண்ணகி புரட்சிக் காவியத்தில் கவி முதலிய ஐந்து சொற்களும் மணிமேகலை வெண்பாவில் சங்கம் முதலிய எட்டுச் சொற்களும் அழகின் சிரிப்பில் மரகதம் முதலிய ஏழு சொற்களும் தமிழியக்கத்தில் சிங்கம் முதலிய ஆறு சொற்களும் ஆகிய வடசொற்கள் கலந்து வந்திருப்பதாகத் தமிழமல்லன் குறிப்பிட்டுள்ளார். தமிழமல்லன் செய்துள்ள கணக்குப்படி பாரதிதாசன் பாடல்களில் கலந்துள்ள வடசொற்கள் 0.3 விழுக்காடு என்பது உணரலாம். அதாவது ஏறக்குறைய முந்நூறு சொற்களுக்கு ஒரு சொல் வடசொல் கலந்து வந்திருப்பதாகக் கொள்ளலாம்.[76]

75. தமிழமல்லன், க., பாவேந்தரும் தனித்தமிழும், பக். 38-39
76. மேலது, பக். 57 - 59

## ஒப்பீடு

மறைமலையடிகள் செய்த கணக்கினபடி சங்க இலக்கியத்தில் வடசொற்கள் இரண்டு சதவிகிதம் பயின்று வந்துள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. பாரதிதாசன் பாடல்களில் காணப்படும் வடசொற்களைக் காட்டிலும் கூடுதலான சொறகள் சங்க இலக்கியங்களில் கலந்து வந்துள்ளதாக உணரலாம் என்றாலும் தமிழிலக்கிய வரலாற்றில் தனித்தமிழ் இயக்கம் தோன்றுவதற்கு முற்பட்ட கால இலக்கியங்களில் சங்க இலக்கியங்களில் மட்டுமே குறைவாக வடசொல் கலந்து வந்துள்ளதெனலாம். சங்க காலத்தில் அதாவது கி.மு. 7 ஆம் நூற்றாண்டில் ஆரியர்கள் தமிழகத்திற்கு வந்து தமிழர்களோடு கலந்த வேளையில் வரையறையில்லாமல் மிக்க வடசொற்களைத் தமிழிலக்கியத்தில் பயன்படுத்திவிடக் கூடாதென்ற எண்ணம் புலவர்கட்கு உட்கிடையாக அமைந்திருந்தமையாலே மற்ற எக்காலத்தையும் விடக் குறைவான வடசொற்கலப்பே தமிழில் நிகழ்ந்துள்ளதெனலாம். ஆனால், சங்க காலத்தில் தனித்தமிழ் இயக்கம் போன்ற எத்தகைய இயக்கத்தின் தாக்கமும் சங்கப் புலவர்கட்கு இருந்ததாகப் புலப்படவில்லை. வடசொற்களைக் கலந்துவிடக் கூடாதென்னும், கருத்துரைத்தமைக்கும் சான்று இல்லை. ஆனால் பாரதிதாசன் காலத்தில் தனித்தமிழ் தோன்றி வளர்ந்திருந்தது, மிக்க வடசொற்களைத் தமிழ்மொழியில் கலந்து எழுதுவதனால் தமிழ்மொழியில் மொழிக்கலப்புச் செய்யலாகாது என்ற எண்ணம் பாரதிதாசனிடம் ஓங்கியிருந்தமையால், சங்க காலத்தினும் குறைவாகவே அவர் பாடல்களில் வடமொழிக் கலப்பு காணப்படுகிறதெனலாம். தமிழ்மொழியில் மிகுதியான வடசொற்களைக் கலந்துவிடலாகாது என்ற கருத்தில் சங்கப் புலவர்களும் பாரதிதாசனும் கருத்தொருமித்தல் உணரக் கிடக்கின்றது

## அயல்மொழி எதிர்ப்பு

### சங்க இலக்கியத்தில் அயல்மொழி எதிர்ப்பு

சங்க காலத்தில் ஆங்கிலம், இந்தி முதலிய மொழிகள் தோன்றியிருக்கவில்லை. சமசுகிருத மொழிமட்டும் ஆரியர்கள் தமிழகத்தில் நுழைந்தமையால் சிறிதளவு கலந்திருந்தது. அது பேரளவில் கலந்து தமிழுக்கு மிகுந்த ஊறுபாடு பயவாமையின் சங்கப் புலவர்கள் யாரும் தனிப்படச் சமசுகிருத மொழியை எதிர்த்துக் கருத்தேதும் கூறவில்லை

## பாரதிதாசனின் அயல்மொழி எதிர்ப்பு

பாரதிதாசன சமசுகிருதம, ஆஙகிலம, இநதி ஆகிய அயல்மொழிகளைத தமிழ்நாட்டில் தமிழின முனனேறறம கருதி எதிரத்துளளாா

## சமசுகிருத மொழி எதிர்ப்பு

சமசுகிருதம் பல்வேறு இனமககள பேசி வநத மொழிகளின் தொகுப்பேயாகும் பழங்கால மொழிகளின் உற்பத்திக்குக காரணமானது எனபதறகு ஆதாரங்கள் காணப்படவில்லை இந்த மொழி கி.மு. 1500 ககுப பிறகு உருவானதாகும இம்மொழியில் புனிதத் தன்மை எதுவும் இல்லை. இதனின மூலம பாாப்பனாகள தஙகளது சமய-மதக் கோட்பாடுகளை உயர்த்திக் கொணடு தமிழர்களை இழிவுபடுத்தினர் என்று தங்கப்பிரகாசம் கூறியுள்ளார். பாரதிதாசன் கருத்தும் இதனோடு ஒத்துக காணப்படுகிறது பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"வடமொழிக் கொருபெயா வடமொழி நூல்களில்
இல்லவே இல்லை என்ன வியப்பு?
சமசுகிருதம் எனச் சாற்றுவதெல்லாம்
செம்மையும் ஒழுங்கும் செப்பும்"

"வேதம் சொன்ன வடமொழி முதலா
வெறுந்தமிழ் முதலா என்றான் பார்ப்பான்
ஓதுமறைக்கு முன்உயர் தமிழ்நான் மறை
ஓதிய மொழியே முதலெனச் சொன்னேன்"[77]

## ஆங்கில மொழி எதிர்ப்பு

இக்காலச் சூழலில் முன்னேற்றத்திற்குப் பெருந்துணை புரியும் மொழியாகிய ஆங்கிலத்தை அன்றாட வாழ்விலும், பள்ளிக் கல்லூரிகளிலும், அரசு அலுவலகங்களிலும் பயன்படுத்த வேண்டும். நாம் பயன்படுத்தும் மொழி தமிழ். ஆனால், ஆங்கிலம் வேண்டுமென்கிறார். இவ்வாங்கில மொழியைப் பற்றிய சிந்தனைகளில் 1925, 1931– ஆம் ஆண்டுகளில் பாரதிதாசனும் பெரியாரும் ஒருமித்த கருத்துடையவர்களாக இருந்தாலும் 1960-ஆம் ஆண்டுக் காலகட்டத்தில் பெரியாரின் சிந்தனையை எதிர்க்கிறார். அதாவது பெரியார் ஆங்கில மொழி தமிழ்நாட்டில் இருக்கட்டுமென்பதை எதிர்த்துக் குரல் கொடுக்கின்றார்.

77. தங்கப்பிரகாசம், ச., பாரதிதாசன் பாடல்களில் பெரியாரின் சிந்தனைகள், ப. 93

ஆங்கிலம் உலகமொழி என்று சொல்கின்றவர்கள், தமிழையும் அவ்வாறு பெருமுயற்சியெடுத்துச் செய்யலாம், அவ்வாறு செய்யாமல் ஆங்கிலத்தைத் தமிழ்மொழியென ஆக்க வேண்டுமெனச் சட்டம் செய்து தமிழால் உருப்படவில்லை என்கின்றனர். தமிழர்க்குத் தலைவர்களே தமிழை அழிக்கின்றனர் எனப் பாரதிதாசன் ஆங்கில மொழிக்கு எதிர்ப்புத் தெரிவிக்கின்றார், மேலும்,

"ஆங்கிலத்தால் நாடு
அழிந்தது பண்பாடு "

"அமிழ்த மேயாயினும் அயல்மொழி அயல்மொழி"
"எங்கும் எதிலுமே தமிழ் முதுாட்டு
இங்கிலீசை இந்தியை இடமிலா தோட்டு."

என்கிறார்[78].

## இந்தி எதிர்ப்புப்போராட்டம்

ஆங்கிலேயரை விரட்டி விட்ட பிறகு அவர்களது மொழியையும் அடியோடு நீக்குவதற்காக வேறோரு மொழியைப் பொதுமொழியாக்கக், காந்தியடிகள் இந்தியைத் தேர்ந்தெடுத்தார். ஆனால், எந்த 'அயல்மொழியையும் தமிழகத்தில் நுழையவிடக்கூடாதென எண்ணி இந்தியை விரட்டியடித்தனர். பெரியார் 1922-ஆம் ஆண்டில் இந்தி மொழியை வளர்ப்பதற்காகப் பள்ளியை ஏற்படுத்தினார். அதனால் வடவரின் நாகரிகம் மொழி வழியாகப் பரவுகிறதெனக் கருதி 1924 முதல் இந்தி எதிர்ப்பைத் தொடங்கினார்.

தமிழ் மொழிப்பற்றுடையவர்களான மறைமலையடிகள், நாவலர் சோமசுந்தர பாரதியார் முதலியோர் ஒருங்கிணைந்து தமிழ் மொழியைப் பாதுகாத்தனர்.

"27-02-1938-இல் காஞ்சிபுரத்தில் முதல் எதிர்ப்பு மாநாடு நடந்தது. மாநாட்டிற்கு அப்போது சட்டமன்ற உறுப்பினராக இருந்த கான் பகதூர் கலிபுல்லா சாகிபு தலைமை தாங்கினார். நாவலர் சோமசுந்தர பாரதியார், பேரறிஞர் அண்ணா, பாவேந்தர் பாரதிதாசன், உமாமகேசுவரன் பிள்ளை, சிதம்பரம், என். தண்டபாணி, ஆகியோர் மாநாட்டில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார்"

78.. தங்கப்பிரகாசம், ச., பாரதிதாசன் பாடல்களில் பெரியாரின் சிந்தனைகள், ப.180

இம்மாநாட்டில கலநது கொணட பாரதிதாசன இந்தி எதிரப்புப் பாடலில், பூமியில் முதன் முதலாகத் தோன்றிய செந்தமிழ் மொழிக்குக் கேடு நேர்ந்துள்ளது என்றும் அதைப் பார்த்துச் சும்மா இருக்கலாகாது என்றும் அதற்கு வரும் கேட்டினை அழிக்க, உடல்பொருள் ஆவி அனைத்தையும் தருதல் வேண்டும் என்றும் சாக்காடு என்பது உறக்கம் போன்றதாகும் என்றும் அதையெண்ணி அஞ்சுதல் பொருந்தாது எனறும் விள்க்கியுள்ளார்.

மற்றும் 'கனியிடை ஏறிய சுளையும்' என்ற பாடலும் இந்தி எதிர்ப்புப் போராட்டக் களத்தில் இயற்றப்பட்டதாகும்

"21-04-1938- இல் தமிழ்நாட்டுப் பள்ளிகளில் இந்தி கட்டாயப் பாடமாக்கப்பட்டது. இந்திப் பாடத்தில் தேர்ச்சி பெற்றால் மட்டுமே மேல் வகுப்பிற்கு மாற்றப்படுவார்கள் எனச் சட்டம் உருவாக்கப்பட்டது, இந்தியை எப்படியும் தமிழ்நாட்டை விட்டு விரட்ட வேண்டுமென்று இந்தி எதிர்ப்பு வாரியம் தொடங்கப்பட்டது. இதனைப் பாரதிதாசனார்,

> "இந்தி, தமிழ், ஆங்கிலம்
> இலக்கணங்கள் மூன்றினையும் கல்வியமைச்சே ஒன்றாய்
> எப்படித்தான் கற்பதினிக் கல்வியமைச்சே"

என்கிறார்.

சென்னை மாநில முதலமைச்சர் இராச கோபாலாச்சாரியாருக்கு, 25-10-37- இல் 'இந்தி கட்டாயப் பாடமா?', என்னும் மடலில், நாவலர் பாரதியார், தமிழ்மொழி தமிழ் நாகரிகம் ஆகியவைகளுக்கு இந்தித் திணிப்பால் பாதிப்பு நேரும் என்பதைக் குறித்திருந்தார். தமிழ்கட்டாயப் பாடமாகாத போது இந்தி மொழி கட்டாயப் பாடமாகவியலாது என்றும் இந்தி மொழியால் தமிழுக்கோ தமிழர் கலைக்கோ, தமிழ்ச் சமுதாயத்திற்கோ பயன் கிடையாது" என்றும் சுட்டியுள்ளார்.

1947–ஆம் ஆண்டு இந்தியா விடுதலையடைந்த நேரத்தில் காங்கிரசு ஆட்சியில் தமிழகத்தில் இந்தித் திணிப்புச் செய்யப்பட்டது. இதனை எதிர்த்து 1948-ஆம் ஆண்டு இரண்டாவது இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம் நடைபெற்றது.[79]

79. இராசேந்திரன், சே., தமிழ் கவிதைகளில் திராவிட இயக்கத்தின் தாக்கம், பக். 144 -148

## ஒப்பீடு

சங்க காலத்தில் முனனர்க் குறிப்பிட்டவாறு இரண்டு விழுக்காடு சமசுகிருத மொழி கலந்திருந்தமையாலும் கோயில் வழிபாட்டு மொழி, பயிற்றுமொழி முதலியவற்றில் சிக்கல் எதனையும் எழுபபாமையாலும் சமசுகிருதமொழியைச் சங்கப் புலவர்கள் எதிர்த்துக் கூறவில்லை. ஆனால், பாரதிதாசன் காலத்தில சமசுகிருதம், ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகள் தமிழ்நாட்டில் தமிழ்மொழியின் பயன்பாட்டிற்கு ஊறுவிளைத்த நிலையில், அவர் அவ்வயல் மொழிகளை எதிர்க்க நேர்ந்தது. மேலும் பயிற்றுமொழி, கோயில் வழிபாட்டு மொழி ஆகியவற்றிலும் தமிழுக்குத் தாய்நாட்டில் உரிய இடம் கிடைக்காமையால் இந்நிலைக்குக் காரணமான சமசுகிருதம், ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகளைப் பாரதிதாசன் எதிர்த்துக் கருத்துக் கூறியுள்ளார்.

## சங்க காலத்தில் பயிற்றுமொழி

சங்க காலத்தில் மருத்துவம், சோதிடம், இலக்கணம், இலக்கியம் முதலிய எத்துறையாயினும் பயிற்றுமொழியாகத் தமிழே இருந்தமை உணரலாம். எனவே தமிழ் பயிற்றுமொழியாக அமைய வேண்டும் என்பதை வலியுறுத்தும் தேவை சங்க காலத்தில் நிகழவில்லை.

## பாரதிதாசன் காலத்தில் பயிற்றுமொழிச்சிக்கல்

பாரதிதாசன் காலத்தில் இத்தகைய நிலை இல்லை. இந்தியாவில் ஆங்கிலம், பிரஞ்சு ஆகிய மொழிகள் கல்வி மொழியாக இருந்தன. இந்திய விடுதலைக்குப்பின் இந்தி கல்வி மொழியாவதற்குச் சூழ்நிலை உண்டாகியது. இந்நிலையில் தமிழ்மொழிமேல் ஈடுபாடு கொண்ட தமிழறிஞர்கள் தமிழிலேயே கல்வி பயிற்றுவிக்கப்பட வேண்டுமென்பதற்குக் குரல் கொடுத்தார்கள், மறைமலையடிகள் முதலியோர் தாய்மொழிக் கல்விக்காகக் குரல் கொடுத்துள்ளனர்.

## தமிழ்க்கல்விப் புறக்கணிப்பு

மறைமலையடிகள் காலததில் தமிழ்ககல்வியைப் புறக்கணித்து வடமொழியை ஊக்குவித்தனா். சென்னைப் பல்கலைக்கழகப் பாடத்திட்டத்தில் கட்டாயப் பாடமாக இருந்த தமிழ்மொழி 1911- இல் நீக்கப்பட்டது. அடிகளின் முயற்சியாலும், பிற தமிழறிஞர்களின் போராட்டத்தாலும் மீண்டும் 1930- இல் தமிழ்மொழி பட்டப்படிப்பில் கட்டாயப்பாடமாக்கப்பட்டது.

## தாய்மொழிக் கல்வியின் இன்றியமையாமை

தமிழ்நாட்டில் பிறந்து தாய்மொழி தெரியாதென வங்கப் பத்திரிக்கையில் நீலகண்டையர் எழுதினார். அதை எதிர்த்த பாரதியார்,

> "மிகவும் விரைவிலே தமிழின் ஒளி உலக முழுவதிலும்
> பரவாவிட்டால் என் பெயரை மாற்றி அழையுங்கள்.
> அதுவரையில் இங்குப் பண்டிதர்களாக இருப்போர்
> தமக்குத் தமிழ்ச்சொல் நேரே வராவிட்டால் வாயை
> மூடிக் கொண்டு வெறுமே இருக்க வேண்டும்
> தமிழைப் பிறா் இழிவாகக் கருதும்படியான வார்த்தைகள்
> சொல்லாதிருக்க வேண்டும். இவ்வளவுதான்
> என்னுடைய வேண்டுகோள்"

எனக் கடிந்தார்.

தமிழகத்தில் தமிழ்மொழி தாய்மொழியாக வைத்தால் கற்பனையாற்றல், சிந்தனையாற்றல் இவை இரண்டையும் உடையோர் புதியன கண்டுபிடித்து நாட்டை உயர்த்துவர் என அடிகளார் நினைத்தார்.

தாய்மொழிப் பற்றுக் குறைந்த தமிழர் வாழும் நாடு என்றும் அடிமைப்பட்டே இருக்குமென்பது திரு.வி.க வின் எண்ணம் ஆகும். நீலாம்பிகையார், ஈ.வே.ரா போன்றோரும் இதே எண்ணம் உடையவர்களாவார், சென்னைப் பல்கலைக் கழக ஏ.எல் முதலியார் பயிற்றுமொழியாகத் தமிழை ஏற்றுக் கொண்டாலும் பயிற்றுமொழி மாறுதலால் அறிவுத் திறம் குறைந்துவிடுமென அச்சுறுத்தினார்.

கோவையில் 1961-ஆம் ஆண்டு நான்கு கல்லூரிகளில் தமிழ்ப்பயிற்று மொழித்திட்டம் நடைமுறையில் வந்தது. அதனையொட்டிய மாநாட்டில் ம.பொ.சி, பேராசிரியர் அ. சீனிவாசராகவன், பா.சீவானந்தம், தெ.பொ.மீனாட்சி, சுந்தரனார், பூ.சா.கோ, பொறியியற் கல்லூரி முதல்வர், சீ.ஆர். தாமோதரன், மாவட்ட நீதிபதி எசு.மகராசன் முதலானோர் கலந்து கொண்டனர். இவர்களில் சீ.ஆர். தாமோதரன் தன்னுடைய கலைக்கதிரான தமிழ்த்திங்கள் ஏட்டில் அறிவியல் சொற்களைத் தமிழாக்கம் செய்ய முடியுமென்பதனை வெளியிட்டார்.

தமிழ்வழிக் கல்வியை வற்புறுத்தி மறைமலையடிகள், நீலாம்பிகையார், பாரதியார், திரு.வி.க., பாரதிதாசன் முதலிய தமிழ்ச்சான்றோர்களும், ம.பொ.சி முதலிய அரசியல்வாதிகளும் பாடுபட்டதன் விளைவாகத் தமிழ்நாட்டில் பயிற்சி மொழியாகவும் அரசாங்க அலுவலக மொழியாகவும் பயன்படும் சட்டம் கொண்டுவரப்பட்டது.

## தமிழில் மொழியாக்கம்

அறிவியல் நூல்களில் காணப்படும் சொற்களுக்கு நிகரான தமிழ்ச் சொற்களை அடிகளார் மொழியாக்கம் செய்தார்.

## தமிழில் கலைச்சொல்லாக்கம்

ச.சோமசுந்தர பாரதியார் புதிய கலைச்சொற்கள் போதுமான அளவில் உருவாக்காமையாலும் ஆங்கிலச் சொற்களை அப்படியே எடுத்துக் கையாளுதலாலும் தாய்மொழியில் உயர்தரக்கல்வி வளரவில்லை என்கிறார். பெரியார் அறிவுத் துறைகள் வேகமாக வளரும் இக்காலத்தில் புதிய கருவி, புதுக்கருத்துக்களைத் தமிழில் கூறும் போது நாம் கண்டுபிடிக்கும் அல்லது உண்டாக்கும் கலைச்சொல் நாம் கூறவேண்டிய கருத்தைத் தெளிவாக உச்சரிக்கக் கூடியதாக அமைதல் வேண்டுமென்றார்.

“தமிழில் கலைச் சொற்களை ஆக்குவார் ஆங்கிலம், தமிழ் இரண்டையும் நன்றாய் அறிந்தவராயும் சொல்லாராய்ச்சி உடையவராயும் தமிழ்ப்பற்று நிரம்பியவராகவும் இருத்தல் வேண்டும்” என்று வலியுறுத்தினார் பாவாணர். இவர் அடிச்சொல்(tele) என்பதிலிருந்து உருவான சில ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழில் என்ன சொல்ல முடியுமென்பவர்க்குக்

கீழககணட முறையில கூறுகின்றாா் அவை பினவருமாறு

Telecast - உருவொளி பரபபு

Telegram - தொலைவரி

Telegraph - தொலைவரி முறை

Tele mechanics - தொலை இயககிமுறை

Telepathy - தொலையுணாவு

Telephone - தொலைபேசி

Telephotography - தொலை நிழறபடமுறை

Telescope - தொலை நோக்கி

Teletypewriter - தொலைததட்டச்சு

Television - தொலைககாடசி

படியாத மக்களிடையே Start - முடுககு, switch - விசை, Lightning arrester - இடிதாங்கி, Twist drill - தமராணி போன்ற பழந்தமிழ்க் கலைச்சொற்கள் வழக்கிலுள்ளனவற்றையும் கலைச்சொல்லகராதியில் சேர்த்துக் கொள்வார்

1931, 1932-ஆகிய ஆண்டுகளில சென்னை அரசாங்கமும், 1936- ஆம் ஆண்டில் திருவாங்கூர் பல்கலைக் கழகமும் கலைசசொற்கள் அடங்கிய பட்டியல்களை வெளியிட்டன.

1940-ஆம் ஆண்டு கல்வித் தலைவராக திரு.இசுடேதம் இருந்த போது கலைச்சொல்லாக்கம் செய்யும் பொழுது சென்னை மாகாணம் தமிழ், தெலுங்கு, கன்னடம், பொதுவான கலைச்சொற்களை அமைக்க வேண்டும். அவற்றைச் சமசுகிருதச் சொற்களாக அமைத்தால் தான் முடியும். சில ஆங்கிலச் சொற்களாகவே இருக்கலாம்; வேண்டுமென்றால் இரண்டொன்று அவ்வம் மொழிகளில் இருக்கலாம் என்று திட்டமிட்டது.

இதை எதிர்த்துச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் வன்மையாகக் கண்டித்து மு.அ.முத்தைய செட்டியார் தொடங்க, டி.எம். நாராயணசாமிப் பிள்ளைத் தலைமையில் 10.10.1946-ஆம் ஆண்டுப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் ம.பொ.சி, மு.வ.முதலானோர் கலந்து கொண்டனர். இவ்வாறாகப் பலர் முயற்சி செய்ததின் விளைவாக “ நல்ல தமிழ்ச் சொற்களே வெளிவரும்” என்ற உறுதி மொழியை 1946-ஆம் ஆண்டு வழங்கித் தூய தமிழ்க் கலைச்சொற்களை உருவாக்கி வெளியிட்டது.

பயிற்றுமொழி தாயமொழியாகச செயலபடப பிறமொழிச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச்சொற்களை உருவாககித் தமிழில செய்தல் பொருநதுவதாகும்.

மறைமலையடிகள் முதலியோர் அவர்களுக்கென இருந்த தமிழ் ஈடுபாட்டினால் தமிழ்மொழியிலேயே தமிழ்நாட்டில கல்வி பயிற்றுவிக்க வேண்டுமென்பதற்குக் குரல் கொடுத்துள்ளனர்.[80]

பாரதிதாசன்,

“மக்கள தமிழைப் பரப்ப ஆசிரியரிலலை, வகுப்புகளில்லை. இங்குப் பொதுமொழியென இந்திக்கெனன வேலை கல்வியமைச்சே! இதை ஏற்றுக் கொள்ளலாமோ கல்வியமைச்சே! தகுந்த செயலை விட்டுவிட்டுத் தகாத செயல் செய்திடக் கொக்கரித்தல் நல்லதல்ல கல்வியமைச்சே”[81] எனச் சுட்டியுள்ளார்.

“தமிழுக்கு நீ செய்யும் கேடு, பெற்ற தாய்க்குச் செய்யும் மானக்கேடாகும். உன் சிந்தனையில் தமிழ்மறைக்காடு செழிக்கட்டும், சிறுகதை, புதினத்தோடு சிற்பச் செந்நூல் எனப் பலவற்றை அறுவடை செய்து அறியியல் ஏட்டை உருவாக்குக. சட்ட இயல், பொறியியல், புவியியல், உயிரியல், உடலியல், மருந்தியல் ஆகிய நூல்களைத் தயிரினில் வெண்ணெய் எடுப்பதுபோல் தேடு. உன் அறிவால் நாடு உயரும்”[82] என்றும் குறிப்பிட்டுள்ளார்.

“அறியினும் (தமிழ் விஞ்ஞானம் பற்றியவைகளை) வெளியிடமாட்டார்கள். அவைகளை அறையில் ஒழிக்கவே முயலுவார். ஆங்கிலத்தில் விஞ்ஞானம் உண்டு. தமிழில் விஞ்ஞானம் இல்லை. ஆதலால், தமிழ் அழியத்தக்கதாம். விஞ்ஞானம் பற்றி இதுவரை விளைந்த நூல்களை இவர்கள் (தமிழையழிப்பவர்) ஆதரித்தார்களா, இத்தனையென்று எண்ணியதுண்டா, நெஞ்சக் கிணற்றடியில் உள்ள மடமைக் கருத்தை மாய்ப்போம் என மார்பைத் தட்டும் பெரிய புலிகள் தமிழில் இல்லாத புதிய சொற்களைச் செய்வோம் என அணுவளவேனும் துணிவு வந்ததா, வரவில்லை. காரணம் வேறு இருக்கலாம். நாட்டுக்குழைத்த தலைவர்கள் கேட்டிற்குழைப்பதால் பெறுவது கெடுதியே”[83] என்றும் தமிழ் பயிற்றுமொழியாக வேண்டும் என்ற எண்ணத்தில் பாரதிதாசன் கூறியுள்ளார்.

80. சாரதா நம்பி ஆரூரன், தனித்தமிழ் இயக்கத்தின் தோறறமும் வளர்சசியும், பக். 211 - 219
81. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள் ப. 1861
82. மேலது, ப. 1861
83. மேலது, ப. 1844

## சங்க காலத்தில் வழிபாட்டு மொழி

சங்க காலத்தில் கோயிலில் தமிழே வழிபாட்டு மொழியாக இருந்திருக்க வேண்டும். திருவள்ளுவர் காலத்திறகுப்பின திருமூலா காலததிற்குமுன சமசுகிருதமொழி கோயிலில் வழிபாட்டு மொழியாகியுள்ளது. சங்க காலததில் தமிழே வழிபாட்டு மொழியாதலின் அதுபற்றிச் சமசுகிருதமொழி வழிபாட்டு மொழியாக அமையலாகாது என்று அக்காலத்தில் யாரும் கூறவில்லை.

## பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கோயிலில் வழிபாட்டு மொழி

19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழகத்தின் ஒவ்வொரு துறையிலும் கோயில்களிலும் வடமொழி ஆதிக்கம் பெற்றது. இராமலிங்க சுவாமிகள் காலத்தில் காஞ்சி காமகோடி பீடத்தின் தலைவரான சங்கராச்சாரிய சுவாமிகள் 'மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி சமசுகிருதமே எனக் கூற ' ஆயின், தமிழ் தந்தைமொழி' என இராமலிங்கர் கூறினர். வடமொழியின் செல்வாக்கைத் தடுத்துத் தமிழ்மொழியின் தனித்தன்மையைக் காத்த முதலாவதானவர் பரிதிமாற் கலைஞர். மொழித் தூய்மைக்காகப் பாடுபட்ட மறைமலையடிகள் பழந்தமிழ் மக்கள்தான் மொழியையும் சிவ வழிபாட்டையும் நிலைநிறுத்தி ஆரியரைத் திருத்தியவர்கள் எனலாம். தனித்தமிழைப் பேணுவதன் மூலமே தமிழர் நாகரிகம் கெடாது பாதுகாக்கலாம் எனவும் வலியுறுத்திக் கூறினார்.

தமிழ்ச் சான்றோர்கள் கண்ட உண்மைகளை வடமொழியில் சேர்த்துக் கொண்டு மூலங்களை அழித்துவிட்டு அவ்வுண்மைகளைக் குறியீடுகளாக அமைத்துக் கொண்டு மறைபொருளாகப் பயிற்றுவித்தனர்.

கோயில் நிருவாகத்தில் ஆரியர்கள் இடம் பெற்றமையாலும், ஆட்சியாளர்கள் வடமொழியை மதித்து வளர்த்ததாலும் வடமொழி ஓங்கியும் தமிழ்மொழி தாழ்ந்தும் போனது.

சிவபிரானைச் சூத்திர தெய்வமெனக் கூறித் தமிழையும் தமிழ் நூல்களையும் ஒழிப்பதற்காகத் தமிழில் கண்டவற்றை ஆரியமாக்கத் தக்க ஏற்பாடுகளைச் செய்தனர்.

தமிழரின் பெருமையைக் காப்பதற்காக மணவினை முதலியவற்றில் ஆரியப் பார்ப்பனரை ஒழிக்க வேண்டும். கோயில்களில் தமிழ்மறை ஓத வேண்டுமென மறைமலையடிகள் வலியுறுத்தினார். 1931-இல் நடந்த குடமுழுக்கு விழாவைத் தம்மைத்தாமே உயர்வாக நினைக்கும்

பார்ப்பனர்களை ஒதுக்கித்தாமே முன்னின்று நடத்தினார். மற்றும் அவ்விழாவில் தமிழ் மறைகளான தேவாரம், திருவாசகம் முதலியவற்றை ஓதி வடமொழி மந்திரங்களை நீக்கினார். இறைவனை வணங்குவதற்கு இடையில் தரகர் இல்லாது அவரவரே வணங்கி வழிபடுதல் ஆகியவற்றைச் செய்தார்.

இதனையே வழிமொழிந்து " தாய்மொழியாகிய தமிழிலன்றி வேறெம்மொழியில் கடவுளிடம் நெக்குருகி நமது எண்ணத்தை வெளியிட முடியும்?" எனக் குன்றக்குடி அடிகள் எழுதினார்.

## சடங்குகள்

திருச் செயேந்திர சரசுவதி சங்கராச்சாரிய சுவாமிகள் பிறப்பு இறப்புச் சடங்குகள் ஆன்மாவைப் புனிதப் படுத்துவதற்காக வடமொழியில் செய்யப்படுகின்றன என்றார். சங்கராச்சாரியரே மன நிம்மதியைச் சமசுகிருதம் அளிக்குமென்று தெளிவுறச் செய்தால் அதை எல்லா மக்களும் ஏற்றுக் கொள்ளலாமென்று கூறினார். இக்கருத்தை மறுத்துக் கடவுளைத் தமிழ் மொழியிலேயேதான் வழிபட வேண்டுமென வ.சுப்பையா பிள்ளை கூறினார்.

பாரதியார் அருச்சனை என்பதன் பொருள் இறைவனைப் புகழ்ந்து போற்றி வழிபட்டு வரங்கேட்பதாகும் எனத் தமிழ்வழிபாடு பற்றிக் கூறியுள்ளார். இவர்தம் பாடல்களில் கடவுளரைப் போற்றிப் பாடியிருப்பதால் அவரும் தமிழ் வழிபாட்டை விரும்பியுள்ளார் என ம.பொ.சி கூறுகிறார்.

## பாரதிதாசன் வழிபாட்டு மொழி தமிழாகக் கூறியமை

"தென்பகுதியில் ஓதப்படும் தேவாரம், திருவாய்மொழி ஆகிய தேன்மொழி இருக்க வேத பாராயணம் ஏன்?" எனப் பாரதிதாசன் கேட்கிறார். இதனை,

"தெற்கோதும் தேவாரம்
திருவாய்நன் மொழியான
தேனி ருக்கச்
செக்காடும் இரைச்சலென
வேதபா ராயணமேன்
திருக்கோ யில்பால்!"

எனக் கூறுகின்றார். தமிழர்கள் எல்லோரும் ஒன்றுபட்டு அயலவர் ஆட்சி, அயலவர் மொழியை எதிர்த்தால் எல்லா எதிர்ப்புகளும் ஒழிந்து போகும். ஆனால், ஒற்றுமையின்மையின் காரணமாகத்

தமிழர்கள் இன்றும் தாழ்ந்து போகின்றார்கள். எனவே, ஒற்றுமையுடன் வாழ வேண்டுமென்கிறார்.

"உறுதியுடன் தமிழரெல்லாம்
ஒன்றுபட்டால் எவ்வெதிர்ப்பும்
ஒழிந்து போகும்"

என்னும் பாடலடிகள் கருதத்தக்கவை.[84]

## இசைத்தமிழும் நாடகத்தமிழும்

## பண்டைக்காலமும் முத்தமிழும்

இயல், இசை, நாடகம் என்ற முப்பிரிவுகளைக் கொண்டது தமிழ்மொழி. இம்மூவகையில் இயற்றமிழ் பற்றிய நூல்களே மிகுதியாகக் கிடைக்கின்றன. இசைத்தமிழ் நூல்கள் சில கிடைக்கின்றன. நாடகத்தமிழ் நூல்களும் நிறையக் கிடைக்கவில்லை. இம்முத்தமிழுக்கும் உரிய நூலாகச் சிலப்பதிகாரம் உள்ளது.

இயற்றமிழ்ப் பாடலோடு இராகம், தாளம் முதலியவை கலத்தலால் இசைத்தமிழ் உருவாயிற்று. மிடற்றுப்பாடலோடு யாழ், குழல் ஆகிய கருவிகளின் ஒலியும் தாளமும் பொருந்த இசைவதால் இசை என்னும் பெயர் ஏற்பட்டது. இவ்விசைப் பாடல்களை நெஞ்சு, கழுத்து முதலிய எண்வகை இடங்களில் எடுத்தல், படுததல் முதலிய எண்வகைத் தொழில்களால் உருவாகிய பண்ணிலிருந்து திறம் பிறக்கின்றது. இத்தகைய இசை இலக்கணங்களையெல்லாம் முன்னோர்கள் கூறியுள்ளனர்.

## தொல்காப்பியத்தில் இசைத்தமிழ்

தொல்காப்பியர் இயல் இலக்கணத்தை அதாவது முந்தைய தமிழ் நூல்களைத் தொகுத்து எழுத்து, சொல், பொருள் என மூன்று வகைப்படுத்துக் கூறியுள்ளார்.

## செய்யுள்களில் பாவினம்

பாட்டிடைக் கலந்த பொருளையுடைய சிற்றிசையும், பேரிசையும் ஆகி இசைத்தமிழில் கூறப்படுவன. அதாவது பண்ணைத் தோற்றுவிக்கும் செய்யுட்கள் பண்ணத்தியாகும். இதனை உணர்த்தும் தொல்காப்பிய நூற்பா,

84. சாரதா நம்பி ஆரூரன், தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், பக். 170 - 180

"பாட்டிடைக் கலந்த பொருள் வாகிப
பாட்டின் இயல பண்ணத்தி இயல்பே"[85]

பண்ணத்தி என்பது பிசி போன்ற விடுகதைகளுக்குப் பொருந்தி வரும் என்பதனைத் தொல்காப்பியர்,

"அதுவே தானும் பிசியொடு மானும்"[86]

என்பார்.

## செய்யுள்களில் ஓசை

செய்யுள்களின் ஓசை வேறுபாடு வண்ணம் எனப்படும். அவ்வண்ணம் இருபது வகைப்படும் எனத் தொல்காப்பியர் கூறுவார்.[87]

வல்லிசை வண்ணத்தில் வல்லெழுத்து மிகும் என்பது,

"வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே"[88]

என்னும் நூற்பாவினாலும் அளபெடை வண்ணத்தில் எழுத்துக்கள் நீண்டு ஒலிக்கும் என்பது,

"அளபெடை வண்ணம் அளபெடை பயிலும்"[89]

என்னும் நூற்பாவினாலும் பெறப்படுகின்றன.

## செய்யுள்களில் எழுத்தின் அளவு

அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்து எழுத்துக்களும் ஒரு மாத்திரை அளவு ஒலிக்கும் குற்றெழுத்துகள் எனப்படுமென்றும்[90] ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழு எழுத்துக்களும் இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கும் நெட்டெழுத்துக்கள் என்றும்[91] தொல்காப்பியர் கூறுகின்றார்.

85. தொல். பொருள். இளம். செய், 166
86. மேலது, 167
87. மேலது, 196
88. மேலது, 200
89. மேலது, 203
90. மேலது, நூன்மரபு. 3
91. மேலது, நூன்மரபு. 4

எழுத்துக்கள் அளவு கடநது ஒலிததலும, ஒறறுககள இசையில நீண்டு ஒலித்தலும உண்டென்பதை இசையொடு பொருந்திய யாழ நூலில உணடு எனபதைப் புலவர்கள் கூறுவர். இதனைத் தொல்காப்பியர்

"அளபிறந துயிரததலும ஒற்றிசை நீடலும
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்"[92]

என்பார்.

## சங்க காலத்தில் இசை

அகத்தியம் என்னும் முத்தமிழ் இலக்கணத்தில் இசை இலக்கணம் விரிவாக உள்ளதெனக் கூறப்படுகிறது. முதுநாரை, முதுகுருகு, இசை நுணுக்கம் முதலான இசை இலக்கண நூல்கள் சங்க காலத்தில் தோன்றியன எனக் களவியல் உரையாசிரியர் குறிப்பிடுகின்றார். ஆனால் இவை கிடைக்கவில்லை. சங்க காலத்தில் இசைக் கலையை வளர்த்து மக்களை மகிழ்விக்கும் பணியைப் பாணர், பாடினியர் செய்தனர். இவர்களின் இசைத்திறனைப் பற்றியும் கையாண்ட இசைக்கருவிகள் பற்றியும் ஆற்றுப்படை நூல்களில் காணக்கிடக்கின்றன.[93]

## கடவுளை வாழ்த்திப் பண் இசைத்தல்

தலைவன் பிரிவால் வருந்தும் தலைவியிடம் பாணன் ஆறுதல் கூறவியலாமல், "எம்பெருமாட்டியின் துன்பம் உடலை(மெய்யை) வருத்தாமல் இருப்பதற்காக என் கையில் நல்யாழ் எடுத்துச் செவ்வழிப் பண்ணிசைத்துக் கடவுளை வாழ்த்திப் பாடினேன்" எனக் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. இவ்வாறு கூறுவதிலிருந்து கடவுள் வழிபாடு செய்யும்பொழுது யாழிசைத்து வாழ்த்தியமை புலப்படுகின்றது. இதனை உணர்த்தும் பாடலடிகள் பின்வருமாறு:

"செவ்வழி நல்யா ழிசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்ந்நிறுத்தி"[94]

92. மேலது, 33
93. சுந்தரம், வீ.பா.கா., தொல்காப்பியத்தில் இசைக்குறிப்புகள், பக். 51 - 71
94. அகம். 20 : 16,-17

## பதிற்றுப்பத்தில் இசைக்குறிப்புகள்

இனனிசை தொடுககும பாலையாழ வலல பாணன, வேநதன் களம் வென்ற போர்க்களத்தை வாழத்திப் பாடிக் குதிரைகளைப் பெறறான் என்பதை உணர்த்தும் பாடலடிகள் பின்வருமாறு:

"தீநதொடை நரம்பின பாலை வலலோன்"[95]

"மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டுகளம வாழ்த்தும்
அகலவன் பெறுக"[96]

அக்காலத்துப் பாணர்கள் மட்டுமனறிப் பாடினியும் ஆடுசிறையுள்ள கின்னரப் பறவையினை வெல்லுமளவிற்கு யாழ் நரம்பு இசையுடன் இணைந்து செல்லுமளவிற்குப் பாடிப் பலபிடியானைகளை அரசனிடமிருந்து பெற்றனள் என்பது,

"ஆடுசிதை யறுத்த நரம்புசே ரின்குரற்
பாடு விறலியர் பல்பிடி பெறுக"[97]

"பாடினி வேந்தே"[98]

என்னும் பாடலடிகளில் சுட்டப்பட்டுள்ளன.

திருவிழாவில் முழவு முழக்கப்படுவதை மக்கள் கூட்டம் கேட்டது என்பது,

"----------வெள் ளத்துச்
சிறைகொள் பூசலிற் புகன்ற வாயம்
முழவிமிழ் மூதூர் விழவுக்காணூஉப் பெயரும்"[99]

என்ற பாடலடிகளால் தெரிய வருகின்றது.

போர்க்களத்தில் முழங்கும் முரசு, நிலத்திலுள்ளவர்கள் வருந்துமளவிற்கு இல்லாமல் வெற்றி தருமளவிற்கு முழங்கும்.

95. பதிற். 65 : 14
96. மேலது, 43 : 26 - 28
97. மேலது, 43 : 21 - 22
98. மேலது, 14 : 17
99. மேலது, 30 : 18 - 20

"நிலனதிர் பிரங்கல வாகி வலனேர்பு
வியன்பணை முழங்கும் வேனமூ சமுழவம்"[100]

என்னும் பாடலடிகளால் உணரலாம்.

அருவி. பறையென்னும் கருவியிலிருந்து இமுமென்னும் ஒலியுண்டாவதை ஒத்து வீழ்வது தேவர்கள் வாழும் உலகம் வரை கேட்கும் என்று,

"மாடோ ருறையு முலகமுங் கேட்ப
இமுமென விழிதரும் பறைகுர லருவி"[101]

என்னும் அடிகளால் உணர்த்தப்பட்டுள்ளது.

## தமிழிசை நலிவுற்றமையும் அதற்குரிய எதிர்ப்பும்

தமிழிசை தொன்மையானது. கடைச்சங்க நூலான பரிபாடலில் பல பாடல்களுக்குப் பாடினார் பெயரும் பண்ணின் பெயரும், இசை வகுத்தார் பெயரும் குறிக்கப்பட்டுள்ளன. உரையாசிரியர் காலத்தில் பண்டை இசைமரபு ஓரளவு மறையலாயிற்று குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசைகளையும் சட்சமம், இரிடபம், காந்தாரம் என மாற்றி அவற்றை சரிகமபதநி என்று உணர்த்தும் நிலை பிற்காலத்தில் ஏற்பட்டது.

ஆரியர் வருகையால் தமிழிசை தடம் புரண்டது. ஆரியர் திட்டமிட்டு இன்றைய இந்தியாவில் நிலவும் இசைமுறைகள் யாவும் சாமவேதத்திலிருந்து பிறந்தன என்று கூறி இசையையே சமசுகிருதமயமாக்கத் தலைப்பட்டனர். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் முத்துசாமி தீட்சிதர், தியாகையர், பட்டணம் சுப்பிரமணிய அய்யர் முதலியவர்களின் பாடல்களைப் பாடுபவர்களே சிறப்பான பாடகர்களாகக் கருதப்பட்டனர்.

கணபதி இராமநீசமான மெவரு, மரியாத காதுரா போன்ற பழைய பாடல்களையே பாடினர். இந்நிலை கண்டு வருந்திய பாரதியார் " தமிழ்நாட்டு மக்களுக்கு இரும்புக்காதாக இருப்பதால், திரும்பத் திரும்ப ஏழெட்டுப் பாட்டுக்களை வருடக்கணக்காகக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்" என்று குறைப்பட்டார்.

100. பதிற். 31 : 29-30
101. மேலது, 70 : 23-24

தமிழில பாடல்கள பாடப பட வேணடும எனறு விழைநத பாரதிதாசன,

"தமிழிசையைப பிறமொழியால இசைததல வேணடா
தமிழிசை பாராட்டிடுவீர்"

என்று வேண்டினார்

தமிழில் போதிய அளவில பாடலகள இலலையென்பதை உடன்படாத பாரதிதாசன், " செந்தமிழில் இசைப்பாடல் இல்லையென மானமின்றிச் செப்புகின்றீர் ! பைந்தமிழில் இசையின்றேல் பாழுங்கிணற்றில வீழநது உயிரை விடுதலின்றி எநதமிழில் இசையில்லை, எந்தாய்க்கே உடையில்லை என்பதுண்டோ? என்று வினாககளை அடுக்கினார். பாபநாசம சிவன் பாடல்கள், காவடிச்சிந்து, திருப்புகழ் போன்ற பல தமிழிசைப் பாடல்கள் உள்ளன." தமிழ் மொழியில் தமிழ்ப் பாடல் மிகவுணடு, தமிழ்க்கவிஞர் பல்லோர் உள்ளார் என்று உண்மை நிலையைப் பாரதிதாசன் பாடகர்களுக்குச் சுட்டிக்காட்டினார்.

தமிழ் நாட்டுப் பாடகர்கள் தமிழ் பாடித் தமிழ் மானம் காத்தல் வேண்டும் என்றும், வியத்தகு செந்தமிழாலே வெல்லத்துத் தென்பாங்கில் பாடல் எழுத வேண்டும் என்றும் பாரதிதாசன் வேண்டுகோள் விடுத்தார். இசையமுது இருதொகுதிகள், தேனருவி முதலானவை பாரதிதாசனின் இசைப்பாடல் நூல்களாகும். பல்லவி, அனுபல்லவி, சரணம் என்பதை எடுப்பு, உடனெடுப்பு, தொடுப்பு, முடிப்பு என்ற பிரிவுகளுடன் அமைத்தார்.

'ராகம்' என்பது அராகம் என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபென்றும், சுரம், தாளம், பாணி என்பவை தமிழ்ச்சொற்களே என்றும் கூறி விளக்கினார். அண்ணாமலை அரசர் முயற்சியால் 1941 - இல் அண்ணாமலை நகரில் தமிழிசை மாநாடு கூட்டப்பட்டது.

தமிழிசை இயக்கத்திற்கு ஆதரவு பெருகிற்று. எதிர்ப்புக்கள் அடங்கின. புகழ் பெற்ற இசைவாணர்கள் தமிழில் பாடத் தொடங்கினார்கள். தமிழ் நாட்டில் தமிழில் பாட வேண்டும் என்ற உணர்வுக்கு உருக்கொடுக்கும் வகையில் சென்னையில் தமிழிசைச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டது. தமிழிசைச் சங்கத்தின் சார்பில் தமிழிசைப் பண்களை ஆய்வு செய்யும் 'பண்ணாராய்ச்சிக் கூட்டம்' நடைபெறுகிறது.

இசைத்தமிழை ஏற்றமுறச் செய்த பெருமை அரசர் அண்ணாமலை அவர்களையே சாரும். தமிழிசை கற்பிப்பதற்குப் பள்ளிகள் நிறுவுதல், அரிய தமிழிசைப்பாடல்களைத் திரட்டுதல், தமிழிசைப் பாட நூல்கள் வெளியிடல் முதலியவை தமிழிசை வளர்ச்சித் திட்டங்களாகும்.[102]

## பாரதிதாசன் பாடல்களில் இசைத்தமிழ்

பாரதிதாசன் காலத்தில் இசைத்தமிழ் குன்றி நலிவடைந்தது. அவர் காலத்தில் மீண்டும் இசைத்தமிழ் வளர்ச்சிக்கு பல முயற்சிகள் எடுக்கப்பட்டு வந்துள்ளன. பாரதிதாசன் அதற்கு மிகவும் பாடுபட்டுள்ளார். விசய நகர அரசர்கள் காலத்திலிருந்தே தெலுங்கு, வடமொழி ஆகியவைகளின் இசையைக் கர்நாடக இசை என உயர்வு படுத்தியும் தமிழிசையை இழிவுபடுத்தியும் வந்த நிலையைக் கண்டு, பாவேந்தர் துடித்தெழுந்தார். "செந்தமிழில் இசைப்பாடல் இல்லையென்று சொல்வது எம் (தமிழ்த்) தாய்க்கு ஆடை இல்லையென்று சொல்வதாகும். உங்கள் தமிழையும் நீங்கள் அறியவில்லை. தமிழறிவும் உங்களுக்கு இல்லை. இப்படிப்பட்ட நீங்கள் கிணற்றில் வீழ்ந்து உயிரை விடுங்கள்" என்கிறார்.

இசைமாநாடுகள், வானொலிகள் ஆகியவைகளிலும் தெலுங்கு, வடமொழி ஆகியவற்றின் ஆதிக்கம் நிலைபெறத் தொடங்கியதை எதிர்த்து அண்ணாமலை அரசர், பொருளியல் அறிஞர் சண்முகம் போன்றோர் தமிழிசை இயக்கத்தை உருவாக்கினர். அவ்வியக்கத்தில் தமிழிசையைத் தமிழ்மொழியால் இசையுங்கள். பிறமொழியால் இசைக்காதீர்கள் என்றும் தமிழுக்குப் பகையாக உள்ளவர்கள் தமிழுக்காதரவு தரவில்லையென்றும் கூறியுள்ளார்.

தமிழிசை இயக்கத்துக்கு எதிர் முயற்சிகளில் பார்ப்பனர்கள் கலந்துகொண்டு, அதற்குத் தொண்டு செய்வதை விரும்பாத அவர்

> "தமிழிசை பாட்டு இயற்றுபவர்
> தமிழர்களாய் இருந்தால் தான் தமிழ்த் தென்பாங்கில்
> அமைப்பு பெறும். பார்ப்பனனும்
> தமிழறிவுக்கு அயலானும் அமைக்கும் பாடல்

102. சாரதா நம்பி ஆரூரன், தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், பக். 227 - 232

அமுதொத்த தமிழின் மேல்
எட்டியையும் வேம்பினையும் அறைத்துப் பூசித்
தமிழர்க்கே தமிழ் என்றால்
தனிக் கசப்பு என்றாகி விடும் தானும் சாகும்".

எனக் கூறியுள்ளார்.

தெலுங்கிசையை எதிர்த்து "தெலுங்கு இசைப்பதற்கு மறுப்புத் தெரிவியுங்கள். தமிழை மட்டும் பாட வையுங்கள். அனைவரும் திரண்டெழுந்து தமிழில் பாடல், தமிழிசை இல்லையென்பவர்களின் வாலை வெட்டுங்கள். இசைக்கு மொழி இல்லையென்ற விலங்குகளை இழியுங்கள்" எனக் கூறியுள்ளார்.

வள்ளலார், வேத நாயகனார், பாரதியார் ஆகியோர்களைப் பின்பற்றி இசையமுது, தேனருவி போன்ற நூல்களையும் குயில் இதழ்களில் 1958-இல் இசைப்பாடலையும் எழுதியுள்ளார். வேதநாயகனார் பாடலில் "மனமே ஈசனின் நாடி", எனத் தொடங்கும் பாடலை எடுத்துக்காட்டி இதுபோல் பார்ப்பனர்கள் எழுத இயலாத அளவிற்குச் சிறப்பினை உடையதெனவும் கூறியுள்ளார்.

பொருளற்ற பாடல்களைப் புத்தமுது எனக் கைத்தாளமிடுவது இருளில் சித்திரம் காண்பது போல் அவற்றில் இன்பமேற்படாதெனக் கூறுவதிலிருந்து பொருள்புரிவோடு கேட்கப்படும் பாடல்களே சிறந்தன எனவும், தமிழ்ச்சீர்களைக் கொண்டு செய்யப்படும் தமிழ் என் மனம், வானம், குளிர்நீர், நிலவு, தமிழர் குலம் ஆகியவற்றை நல்லதாக்கியது எனவும் சுட்டியுள்ளார்.

"அறிஞர் அண்ணா சொல்வது போல், "தமிழ் மக்களின் வாழ்வில் எல்லாம் தமிழில் நடைபெற வேண்டும் என்பதே இயற்கைக்கு ஒத்ததாக இருக்க முடியும். அந்த முறையில் தோன்றி வளர்ந்ததுதான் தமிழிசை இயக்கம். பாட்டு, இசை என்றால் அது இனிமையான ஒலியாக மட்டும் இருந்து விட்டால் போதாது. என்ன பாடப்படுகிறது? பாட்டின் பொருள் என்ன ? என்பதை மக்கள் புரிந்து கொள்ள வேண்டும்".

திரு. தண்டபாணி தேசிகர் நல் தமிழிசைப் பாடகர். அவரை "தேசிகர் பாட்டுச் செவிக்கமுது" எனப் பாராட்டுவார்.

1917-ஆம் ஆண்டு ஆபிரகாம் என்பவரின் "கருணாமிர்த சாகரம்" என்ற நூல்

தமிழிசை மறுமலாசசிககு விததாக அமைநதது 1929-இல சிதமபரம அண்ணாமலை அரசா இசைககல்வி நிறுவியதறகு 1936-இல பலகலைககழக ஆடசி மனறக குழு எதிர்ப்புத தெரிவிததது அண்ணாமலைப் பல்கலைக கழகததில 1941-ஆம ஆணடு தமிழிசை ஆய்வுக்குழு நிறுவப்பட்டது அதே ஆண்டில் சென்னை தூய மேரி மணடபததில நிகழ்ந்த மாநாடு தமிழிசை இயக்கத்திற்கு வழிகாட்டியாகவும் அமைந்தது. இதில பாவேந்தர் தன் வருத்தத்தை 'கன்னல் நிகர் தமிழிசையைக் கேளேனோ என வெளிபபடுததியதோடு தியாகராச கீர்த்தனைகளையும் மொழி பெயர்த்தார்.

'ஆகாசவாணி' என்பதை மாறறி வானொலி எனப் பெயரிட நடந்த போராட்டத்தில் பாவேந்தர் கலந்து கொண்டு வானொலிகளில் செநதமிழப பாட்டு ஒலித்தால் தேன் கலந்த ஒலிபோல் இருக்கும். அதைக் கேட்ட நான் மட்டுமல்லாமல் நாடும் நானிலமும் மகிழும். அதைச் செய்யாமல், வேறு மொழிப்பாடல்களை ஒளிபரபபி எனனையும் நாட்டையும் அழச்செய்வதா வானொலியின் வேலை"என்று கூறியுள்ளார்.[103]

## முத்தமிழ் பற்றிப் பாரதிதாசன்

ஏழைமக்களின் வாழ்வில் முத்தமிழ் சிறந்து விளங்குகின்றது. காடை பிடிக்கும் குறவன் பாடப் பாடக் குறத்தி ஆடிக் கொண்டேயிருந்தாள். அதனுடன் ஒருபுறம் பறை ஓசை முழங்க அதற்கேற்றவாறு ஆடினாள். புதுப் புதுக் கண்ணசைவு, இடுப்பசைவு ஆகியவைகளுடன் ஆடினாள்.[104]

## இயற்றமிழ்

பாரதிதாசன்,

"இயற்றமிழ் எவரும் வளர்க்காமல் தானே இப்பெரிய நிலத்தை ஆட்சி செய்தது. நீ தமிழின்பால் வளர்ந்தாய் இயற்கையிலே வளர்ந்தாய். அம்மா என்றழைத்தல், காகா எனச் சொல்லுதல் ஆகியவை இயற்கையிலே செறிவுற்று விளங்குகின்றன. படித்தல், பேசுதல் ஆகியன இயல்தமிழ் என்றும் பாடும் பாடல் இசைத்தமிழ் என்றும் நடித்தல், கூத்தாடுதல் ஆகியன இரண்டும் சேர்ந்ததை நாடகத் தமிழ் என்றும் கூறுவர். இயல், இசை, நாடகம் ஆகிய மூன்றும் சேர்ந்தது முத்தமிழாகும். முத்தமிழ் என்பது புத்தொளிதரும் அமுதமாகு"மென்கிறார். பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

103. சன்முகசுந்தரம், சு., பாவேந்தரின் தமிழ்ப் போராட்டங்கள், பக். 76 - 81
104. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், பக். 227-228

"படிப்பும பேச்சும் **இயற்றமிழ்**
பாடும் பாட்டே **இசைத்தமிழ்**
நடிப்பும் கூத்தும் சேர்நததே
**நாடகத் தமிழ்** என்பார்கள்.
முடிக்கும் மூன்றும் முத்தமிழே
முத்தமிழ் என்பது புத்தமுதே
முடித்த வண்ணம் நம் தமிழே
முத்தமிழ் என்று சொல்வார்கள்."[105]

இவ்வாறாக இயல், இசை, நாடகம் என்ற மூன்று நிலைகளில் தமிழில் உள்ளவை முத்தமிழேயாம் எனக் கூறியுள்ளார்.

## தமிழிசை

வேற்றிசையைத் தமிழிசையாக மகிழுவோரைப் பாரதிதாசன் கோடிட்டுக் காட்டுகிறார். மக்கள் தமிழிசை அரங்கில், தமிழிசையைக் கேட்டு மகிழ்வது போல அங்குப் பாடும் தெலுங்கிசையைக் கேட்டுத் தமிழ்மொழியென மகிழ்வார்கள். மேலும் சமசுகிருதம் பாடினால் தமிழிசையிலிருந்து மாறுபட்டது என்று கூறுவர். மாநாட்டில் உள்ளவர்களோ தமிழிசைதான் எனச் சொல்வார்கள்.[106]

வாய்ப்பாட்டுப் பாடுபவர்களில் பெரும் பாலானோர் வண்டமிழுக்குத் தீமை செய்தனர். ஆனால், படக்காட்சிகளைப் பார்த்தால் பொன்னைப் போல் மிக வாய்ப்பாகத் தமிழ் பேசுகிறார்கள், பாடுகிறார்கள். அப்படிப்பட்டவர்களை வாழுமாறு பாரதிதாசன் வாழ்த்துகிறார்.[107]

## நாடகத் தோற்றம் வளர்ச்சி

பலவகைப்பட்ட கலைகளுள் நாடகமும் ஒன்று. மனிதன் போலச் செய்யும் பண்புடையவனாதலால் மனிதன் தான் கண்ட உயிரினங்கள், இயற்கைப் பொருள்கள் ஆகியவற்றைச் சுட்ட, மொழியின் துணையில்லாக் காலத்துத் தன் உடல் உறுப்பின் செயல்

105. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1089
106. மேலது, ப.551
107. மேலது, ப.537

வகையால் மட்டுமே வெளிப்படுத்தியதின் செம்மை வடிவமே கூத்தாக மலர்ந்தது. அருவி மற்றும் பறவைகள் விலங்குகள் ஆகியவற்றின் ஓசையைப் போல் ஒலிக்கக் கற்றுக் கொண்டு பொருளற்ற முறையில் கண்ட இம்மொழிக் கருவியை முழுமையாகத் தன் எண்ணத்தை வெளியிடும் வகையில் மாற்றம் செய்ததால பேச்சுப் பிறந்தது. அப்பேச்சு, இனிமையைக் கலந்த இசைக்கு வழிவகுத்தது. இவ்வாறாகத் தோன்றிய இசையும் கூத்தும் இணைந்து கூத்து வளர்ச்சியடைந்தது. மக்கள் கூடி வாழ்ந்த வாழ்க்கையில் வெற்றியினை வெளிப்படுத்தும் பொழுது கூட்டமாகக் கைகோர்த்து ஆடினார்கள் இவற்றின வளர்ச்சி நிலையால் துணங்கைக் கூத்து வள்ளிக்கூத்து என்பன அவற்றின் வளர்ச்சியால் தோன்றியவையெனலாம். இதனின் வளர்ச்சியாக மீன்பிடி தொழில், உழவுத் தொழில் முதலிய தொழிற்பாடல்கள் உருவாகின. இவ்வாறு தொழில்களின் அடிப்படையில் பிரியத் தொடங்கியதில் "கூத்தர்" என்ற பிரிவும் உண்டாயிற்று.

கூட்டு மனித வாழ்க்கையில் ஓய்வு நேரத்தில் பார்த்து மகிழும் இக்கூத்து, மனித வாழ்வில் இடம்பெறும் பொருள் கலந்த நிகழ்ச்சிகள் சின்னஞ்சிறு கதைகளாகக் கூத்துப் பொருள் வடிவம் தாங்கும் போது நாடகமாக மாற்றமடைகிறது.

டாக்டர் இரா. குமரவேலன் முதலிய நாடகத் திறனாய்வாளர்கள் தமிழர்கள் நாடகம் எழுதவில்லையென்ற கருத்தை மறுத்து, தெ.பொ.மீ அவர்கள் சங்க இலக்கியப் பாடல்களில் நாடகக்கூறு அமைந்துள்ளது என்பர். நாடகக் காப்பியமான சிலப்பதிகாரத்தில் காணும் கலை வளர்ச்சியில் கூத்துப் பெற்றுள்ள ஒப்புயர்வற்ற இடம் கூத்தின் வளர்ச்சியை மட்டும் தெரிவிக்கவில்லை. அதன் 'வளர்ச்சி பெற்ற வளர்ச்சி' யாகச் சிலப்பதிகாரத்தையும் எண்ண வேண்டியுள்ளது. கூடி ஆடிய ஆட்டத்தில் கற்பனைக் கதை மாந்தர்களைப் படைப்பதும், வழிபடுவதும், துன்பம் நீங்கி இன்பம் பெற எண்ணுவதும், ஆய்ச்சியர் குரவையில் வெளிப்படு கருத்தாக விளங்குகின்றன.

தமிழ்க் காப்பியங்களில் இரட்டைக் காப்பியங்களின் பின்னர் வந்த பெருங்கதை, உலக வரலாறு, பெருவன நல்லூர்ப்பாசண்டம் ஆகிய நூல்களிலும் சிந்தாமணியில் திருத்தக்கதேவர் 'கூத்து' என்று கூறியதையும் நச்சினார்க்கினியர் 'நாடகம்' என உரைப்பர். இதனால் கூத்து வளர்நிலை பெற்று நாடக உயர்வை முறையாக அடைவதை இவ்வுரைக் குறிப்பு உணர்த்தும்.

தொலகாபபியம, சிலபபதிகாரம, இறையனாாகளவியல, யாப்பருங்கலம் முதலிய பழைய நூற்களுககு உரையெழுதிய உரையாசிரியாகள கூதது இசை நாடக நூல்கள பலவற்றைக் கூறியுள்ளனர். கலை மலிநத காலமான பிறகாலச் சோழா காலத்தில் நாடகக் கலை நன்கு வளாச்சியுறறிருந்தது

பிற மொழியினரும மதததினரும ஆடசிக்கு வநதபின் தமிழ்ககலைகள், குறிப்பாகத் தமிழ் நாடகம் நலிவுறத தொடஙகின. பதினேழாம நூறறாணடில் குச்சுபபுடி நாடக வகை எழுந்தது. பதினெட்டாம் நூறறாணடின முதல் கவிதை நாடகமாககினார். தொடக்க காலத்தில் எழுந்த கவிதை நாடகங்களில இயலபான கவிதை நடை உள்ளது. இன்றைய படைப்புகளில் அது குறைந்துள்ளது.

பண்டைய சங்க இலக்கியத்து வீரம், கொடை, காதல் வாழ்க்கை ஆகியனவற்றைக் கவிதை நாடகங்கள் வெளிப்படுத்துகின்றன. இன்று மு.வ. முதலியோரின் நெறியை நாடக ஆசிரியர்கள் பின்பற்றுகிறார்கள். அதாவது தமிழில் பெயரிடுதல் முதலியவற்றைத் தங்கள் நாடகங்களில் வெளிப்படுத்துகிறார்கள்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பரிதிமாற் கலைஞர் தமிழ்நாடக இலக்கியம் ‘ரூபாவதி’ யையும் இலக்கணம் நாடகவியலையும் படைத்துத் தனித்தன்மை தமிழுக்கு உண்டென்பதை வெளிப்படுத்தினார். இலக்கியப் புலமை பெற்ற சங்கரதாசு சுவாமிகள் திருவிளையாடற் புராணம், கந்த புராணம், இராமாயணம் ஆகியவற்றை நாடகமாக்கினார்.

மக்களிடையே காணும் மத நம்பிக்கையையும், தெய்வ பக்தியையும் போன்று, புராண இதிகாச நாடகங்களைச் சுவாமிகள், முத்தமிழாகரம், கவிராயர் ஆகியோர் நாடகம் எழுதி நடிகர்களை உருவாக்கினார். இந்நிலையின் வளர்ச்சியாக இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசங்கள் நன்முறையில் சிறந்த நாடகங்களாக அமைந்து பெருஞ்செல்வாக்குடன் பரவக் காரணமாக நாடகக் கலைஞர் கன்னையா இருந்தார்.

19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் காங்கிரசு சபையின் பணியினையும் அதனால் ஏற்பட்ட பயனையும் கோபாலாச்சாரியர் என்ற ஐந்தங்க நாடகத்தில் எழுதினார். தேசபக்தர் சுப்பிரமணிய சிவா பாரத வீரர்கள் வரலாற்றை நாடகமாக்கி நாடெங்கும் நடத்தினார். பின்னர்க் காந்திய இயக்கக் காலத்தில் தேசிய உணர்வூட்டும் நாடகங்கள் எழுந்தன.[108]

108. வீராசாமி, தா., வே., தமிழ் நாடக வரலாற்றில் பாரதிதாசன், பக். 1 - 68

## சங்க இலக்கியமும் கூத்தும்

சங்கப்புலவர் பெயாகளுள கூதது என்ற சொல இடமபெறும் பெயர்கள், மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூததனாா, மதுரைக் காருலா வியஙகூத்தனார், மதுரைத் தமிழ்க் கூத்தன் நாகன் தேவனாா, மதுரைக கூததனாா, மதுரைத தமிழக்கூத்தனார், முதுகூத்தனார், வேமபத்தூர்க் கணணன் கூததன எனபவைாகும

## புறநானூற்றில் கூத்து பற்றிய செய்திகள்

பாண்டியன் நெடுஞ்செழியனின் நாட்டில், வலிமையுடைய பரதவர்கள் வெம்மையான மதுவையுண்டு குரவைக் கூத்தின் தாளததிற்கேற்றவாறு ஆடினர் என மாங்குடி மருதனார் சுட்டியுள்ளார். இதனை,

"--------- வன்பரதவர்
வெப்புடைய மட்டுண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து
தூவற் கலித்த தேம்பாய் புன்னை
மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்"[109]

என்னும் 'பாடலடிகள் உணாத்துகின்றன.

சோழன் நலங்கிள்ளியின் நாட்டில் கூத்து ஆடும் களம் எப்படியிருந்ததென்பதைக் கூறுகிறார். வேலிப்புறத்திலுள்ள விலங்குகளுக்கு நன்மை கருதி அக்கரும்புத் தோட்டத்திலுள்ளவர்கள் கரும்புக் கழையைப் பிடுங்கி எறிய அது தாமரைக் குளத்தில் விழுந்து சிதறியது கூத்தர் ஆடுகளத்தைப் போலிருந்தது[110] என ஒப்புமைப்படுத்திக் கூறியுள்ளார்.

109. புறம். 34
110. மேலது, 28

## அக நானூற்றில் கூத்துப் பற்றிய செய்திகள்

பெரிய மலையடிவாரத்தில குறத்தி குறிஞ்சிப்பண் இசைத்துப் பாடினாள். அதனைக் கேட்டுத் தினைப்புனத்தில் தினையைத் தின்ன நுழைந்த மறக்களிறு மெய்மறந்து நின்றது என வரும் அகநானூற்றுச் செய்தியின்மூலம் விலங்குகளும் கேட்டு மயங்கக்கூடிய அளவில் இசைக்கருவியை இசைத்துப் பாடும் திறன் பெற்றிருந்தனர் என்பது புலனாகிறது.

> "ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி
> பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்
> குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
> படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
> மறம்புகல் மழகளி றுறங்கும் நாடன்"[111]

என்னும் பாடலடிகள் கருதத்தக்கவை.

அசைகின்ற மூங்கில்கள் வண்டுகளால் துளைக்கப்பட்ட துளைகளில் கோடைக்காற்றுத் தோற்றுவிக்கும் ஓசையை இசையாகவும், கொட்டும் அருவியின் குளிர்ந்த நீர் எழுப்பும் ஓசையை முழுவின் முழக்கமாகவும் கலைமான்களின் கூட்டம் எழுப்பும் கடுங்குரல் தூம்பு (பெருவங்கியம் என்னும் துளைக்கருவி) ஒலிக்கும் ஓசையை இசையாகவும் மலைச்சாரலின் பூக்களில் வண்டுகளின் சத்தம் யாழிசையாகவும் ஒலிக்க மூங்கில் வளர்கின்ற மலைகளில் ஆடுகின்ற மயில்கள் விழாக்காலத்தில் கூத்தாடும் விறலியர்கள் போல ஆடும் நாட்டினையுடைய தலைவன்[112] என்று கூறப்பட்டுள்ளது.

மேற்கூறியவற்றைக் காணும்போது கூத்துக் கலையின்போது இசைக்கக் கூடிய மூங்கில் குழல், முழவின் முழக்கம் ஏற்படுத்தக் கூடிய கொட்டும் அருவி, கலைமான்களின் கூட்டம் எழுப்பும் தூம்பு ஓசை, மலைச்சாரல் பூக்களின் வண்டு ஓசை யாழிசை என்னும்போது கூத்தின்கண் ஒலிக்கக்கூடிய இசைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டுக் கூத்துக்கலை நிகழ்ந்தது என எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ஆடும் மயில்கள் கூத்தருக்கு அதாவது விறலியருக்கு ஒப்பிடப்பட்டுள்ளதால் ஆட்டக்கலை வல்லுநர்கள் அக்காலத்தில் இருந்தமையும் புலப்படுகின்றது. மலைவளம் பற்றிப் பாடும் புலவர் கூத்துக் கலை பற்றி எடுத்துரைப்பதால் அக்காலத்தில் கூத்துக்கலை சிறப்பிடம் பெற்றமையை உணர முடிகின்றது.

111. அகம். 102 : 5 - 9
112. மேலது, 82 : 1 - 10

## பட்டினப்பாலையில் கூத்துப் பற்றிய செய்தி

பூக்கள் நிறைந்து காணப்படும் பெரிய நீர்த்துறையில் தங்கள் துணைவருடன் மகிழ்ந்திருந்த பெண்கள் தங்கள் பட்டாடையை நீக்கி நூலாடையை அணிந்து கள்ளுண்ணுதல் போன்ற தாழ்வான செயல்களை நீக்கி ஆண்களின் கண்ணியைப் (தலையில் அணிந்துள்ள மாலையை) பெண்கள் சூடியும் நெடிய பட்டினத்து மாளிகை விளக்குகளை நோக்கியுள்ள படகுகளை எண்ணியும் பாடல் கேட்டும் நாடகம் பாரதும வெண்ணிலவின் பயன் துய்த்தும் கண்கள் மூடும் கடைச் சாமத்தில் காவிரியாற்றின் மணம வீசும் தூய கடற்கரை மணலில் மக்கள் படுத்துறங்கினார்கள். பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"கொடுந்திமில் பரதவர் குரூஉச்சுடரெண்ணவும்
பாட லோர்த்து நாடக நயந்தும்"[113]

## மதுரைக் காஞ்சியில் கூத்துப் பற்றிய செய்தி

மக்கள் ஒரு பக்கம் கார் காலத்தில் மலரும் குறிஞ்சிப்பூச் சூடி முருகனை வழிபட்டும், மற்றொரு பக்கம் மன்றுதோறும் மகளிர் கைகோர்த்துக் குரவைக் கூத்தாடியும், பாடியும் நன்னன் என்பவனின் பிறந்த நாள் விழாவில் (நன்னாளில்) மகிழ்ந்து ஆரவாரத்துடன் காணப்படும்பொழுது முன்யாமம் சென்று விடும். இவ்வாறாக விழாக் கொண்டாட்ட நிகழ்ச்சியில் மக்கள் மகிழ ஆடியும் பாடியும் குரவைக் கூத்தாடினர் எனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் அடிகள் கருதத்தக்கவை.

"மன்றுதொறு நின்ற குரவை சேரிதொறும்
உரையும் பாட்டு மாட்டும் விரைஇ "[114]

## பாரதிதாசனும் நாடகமும்

இளமையிற் பெற்ற நாடக நடிப்புத்திறனும், திருப்புளி ஐயா போன்றவர்களிடம் கற்ற தமிழ்க்கல்வியும், 'சிந்தாமணி' எனப் பள்ளி நாடகம் எழுதியதும், 'பாலாமணி போன்ற திரைப்படங்களுக்கு உரையாடல் எழுதிப் பெற்ற திரை உலகப்பட்டறிவும், இந்தி எதிர்ப்பியக்கம் ஊட்டிய உணர்வும் பாரதிதாசனை நாடகங்களும் எழுதச் செய்தன. தன்மான இயக்க

113. பட். 112 - 113
114. மேலது, மது. 616 - 620

வளர்ச்சிக்குத் தன் முதல் நாடகத்தைப் படைத்தார்

பாரதிதாசன் நாடகங்களைத் தொகுத்துக் காணும்போது உரைநடை நாடகம், கவிதை நாடகம் எனப் பகுக்க முடிகிறது. இவ்விரு வகையிலும் நாடகம் என்ற முழு அமைப்புடையனவும், குறுநாடகமாக விளங்குவனவும் உள்ளன. அளவின் பெருக்கம் பெருமையையோ, அளவின் சுருக்கம் சிறுமையையோ காட்டவில்லை.

கவிஞரின் நாடகங்களில் கவிதை நாடகங்களைக் காட்டிலும் உரைநடை நாடகங்களே எண்ணிக்கையில் மிகுதி.

தம் வாழ்வில் பெரும் பகுதியைச் சீர்திருத்த இயக்கத்திற்காகவே செலவழித்த கவிஞரின் நாடகங்களின் பெரும்பகுதி அக்குறிக்கோளைப் பரப்பும் கொள்கை விளக்கங்களாகவே பொலிகின்றன.

பழங்காலப் புராணக் கதைகளைப் புதிய நோக்கில் பார்ப்பது,

பழங்காலத் தமிழ்க்கலை, பண்பாட்டின் பெருமையை விவரிப்பது,

பழந்தமிழ்ப் பாடல்களில் சிதறிக் கிடக்கும் தமிழ்ப் புலவர்களின் வாழ்க்கையைத் தொகுப்பது,

சீர்திருத்த எண்ணங்கொண்டு வாழ்வில் அறிவியக்கங் கண்டு போராட முனைவது,

பெண் கல்வியைப் போற்றிப் பெண் உயர்வை நாடுவது,

மூடநம்பிக்கை எவ்வடிவில் இருப்பினும் அதனைக் களைவது,

தமிழர் வாழ்வைத் தகர்க்கும் பகை எவ்வடிவில் வரினும் அதை எதிர்ப்பது,

ஏற்றத்தாழ்வற்ற பொதுமைச் சமுதாயம் காண உழைப்பது.

என்ற கொள்கைகளுக்காகவே தம் நாடகங்களைப் படைத்துச் சென்றுள்ளவர் பாரதிதாசன்.

நகைச்சுவையை நன்கு பயன்படுத்தினாலும் சமுதாயக் குறைகளை மக்கள்

உணரவே அதனைக் கையாண்டுள்ளார்.

நாடகங்களிடையே பல இசைப் பாடல்களைத் தொடக்க காலத்தில் பயன்படுத்தினாலும் அவற்றைக் கால வளர்ச்சிக் கேற்பக் குறைத்துக் கொண்டார்.

தான் வாழ்ந்த கால வளர்ச்சியின் முழுப்போக்கையும் நன்குணர்ந்து தான் நல்லன என உணர்ந்ததை விடாது பரப்பி வந்தார். மொழி, சீர்திருத்தம், கலைவளர்ச்சி என்ற முத்துறைகளே அவர் நாடகங்களில் முன்னணியில் நிற்கின்றன.[115]

சிறப்பு மிக்க நற்கொள்கைகளைப் படமாக எடுத்து வெளியிடல் வேண்டும். ஆனால் மேனாட்டார்கள் விருப்பமோ பணம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டதாகும். பாரத நாட்டுப் படங்களில் பழமை நீக்கி நலம் சேர்ப்பதற்காக ஆய்ந்து பார்த்து நாடகம் அமைப்பதினால் அவர்கள் முன்னேற்றமடைகின்றார்கள்.

ஒரு நாட்டிலுள்ள தீமைகளை நீக்கி நன்மை ஏற்படுத்தி உயர்ந்த வாழ்க்கை வாழப் பிறநாட்டார்கள் நாடகங்கள் செய்வார்கள். ஆனால், தமிழர்களோ எல்லோரும் முன்னேற்றம் விரும்புகின்ற இந்நாளில் மூளி நல்லதங்கை தன்னேழு பிள்ளைகளைக் கிணற்றில் போட்டதைப் படமாக்கிக் காட்டுகிறார்கள். அந்நாடகத்தில் உள்ள தமிழ்ச் சொற்கள் காதை மூடிக் கொள்ளுமளவிற்குத் தாழ்ந்த நிலையில் பேசப்படுகின்றன. [116]

பாடல்களில் தமிழ்மொழி இயல், இசை, நாடகத் தமிழ்களில் தமிழின் நலிவும் அதனால் ஏற்படும் இழிநிலையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

## ஒப்பீடு

சங்க காலத்தில் தமிழ் முத்தமிழாக வளர்க்கப்பட்டு இருந்தது. இயற்றமிழோடு இசைத்தமிழ், நாடகத்தமிழ் ஆகியனவும் சேர்த்துக் கருதப்பட்டுள்ளன. அதாவது இயற்றமிழ்ப் புலவர்கள் இசைத்தமிழோடு நாடகத் தமிழையும் நன்கறிந்து இயற்றமிழ்ப் புனைவுகளைச் செய்து வந்தனர். சங்க நூல்களிலும் சிலப்பதிகாரத்திலும் இயற்றமிழ்ப் புலவர்களின் இசை,

115. வீராசாமி, தா.வே., தமிழ் நாடக வரலாற்றில் பாரதிதாசன், பக். 40 - 68
116. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 564

நாடகத தமிழ் அறிவையும ஆளுமையினையும உரை முடிகினறது ஆனால், அயலவா ஆட்சியினால் இசைததமிழும நாடகததமிழும பாதிபபுககுளளாகின. தமிழகத்தில் பரவி வந்த சமண பௌதத சமயங்கள துறவறததைப பெரிதும நாடி வந்தமையாலும் கலைகளை மிகவும் போற்றியுரைககாமையாலும் இசைததமிழும் நாடகததமிழும சங்க காலத்திற்குப் பின் வளர்ச்சி குன்றத் தொடங்கின போறறிக் காககாமையால இசைத்தமிழ் நூல்களும் நாடகத்தமிழ் நூல்களும் அயலவா ஆட்சி தமிழகத்தில் ஏற்பட்ட பினனால் அழியத் தொடங்கின. இறையனார் களவியல் உரையும[117] சிலப்பதிகார அடியாாக்கு நலலாா் உரையும்[118] சான்றுகளாக அமைகின்றன.

பாரதிதாசன் காலத்தில் இசைத்தமிழும் நாடகத தமிழும் மிகவும் நலிவுற்றதோடு சமசுகிருத இசைக்கருத்துகளும் தெலுங்கிசைக் கருத்துகளும் ஏற்றமாகக் கூறப்பட்டன. அதாவது பாடகர்கள் அவற்றைப் பெருமைப்படுத்திப் பாடி வந்தனர். பாரதிதாசன் இந்நிலையில் இசைத்தமிழ் , நாடகத்தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டுத் தமிழரிடையே பரப்பப்பட்ட சமசுகிருத, தெலுங்கிசை பற்றிய கருத்துக்களைக் கடிந்துரைத்துள்ளார். சங்க காலத்தில் இசைத்தமிழும் நாடகத்தமிழும் ஏற்றம் பெற்றிருந்தமையால் இசைத் தமிழ், நாடகத்தமிழ் வளர்ச்சி வேண்டுமென்று குரல் கொடுக்கவில்லை. பாரதிதாசன் காலத்தில் நிலைமை முற்றும் மாறுபட்டிருந்தமையால் அவர் முத்தமிழ் வளர்ச்சிக்கும் தமிழில் தனிப்பட்ட இசை, நாடக வளர்ச்சிக்கும் குரல் கொடுத்தும் பாடுபட்டுள்ளார். சங்க இலக்கியங்களில் காணப்படும் நாடகப்பாங்கு கருதத்தக்கதாக உள்ளது என்றாலும் அன்று இருந்த நாடக நூல்கள் தொகுத்து வைக்கப்படவில்லை என்பது புலனாகிறது. தமிழர்கள் தங்கள் பாணியின் அமைத்திருந்த நாடக நூல்கள் பேணிக்காத்து வைக்கப்படவில்லை என்பதை உணரலாம். நாடக நூல்கள் இருந்ததாகச் சிலப்பதிகாரம் குறிப்பிடினும் இன்று அந்நூல்கள் இல்லை என்பதை உணரலாம். சங்க காலத்திற்குப் பிறகு இசைத்தமிழ் போலவே நாடகத் தமிழும் நூல்களும் போற்றிக்காக்கப்படவில்லை. இயற்றமிழ் மட்டுமே காக்கப்பட்டுள்ளது.

பாரதிதாசன் காலத்தில் இழப்பினை ஈடுசெய்யும் நிலையிலும், பாரதிதாசன் தன்காலக் கருத்துக்களைப் பரப்பும் கருவியாக அமைக்கும் நிலையிலும் பல நாடக நூல்களைப் புனைந்துள்ளார் என்பது புலப்படுகிறது.

118. சாமிநாதையரவர்கள், டாக்டர் வே., சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும், பக். 8 - 12

117. நக்கீரன், களவியல் என்ற இறையனார் அகப்பொருள், பக். 5–6

## தொகுப்புரை

சங்க இலக்கியத்தில் தமிழ போற்றப்பட்டுள்ள தன்மை என்பது, பாரதிதாசன் தமிழைப் போற்றியுள்ள தனமையோடு ஒப்பிடடு ஆராயப்பட்டுள்ளது. தமிழைத் தாயாகப் போற்றுதல் சங்க இலக்கியத்தில் காணப்படுவதில்லை என்பதும் பாரதிதாசன் தமிழைத் தாயாகப் பாடுவதும் அதற்கான காலப் பின்னணியும் ஆராயப்பட்டுள்ளன. சங்க இலக்கியத்தில் நிகழ்ந்துள்ள சமசுகிருத மொழிக்கலப்பும் பாரதிதாசன் பாடல்களில் நிகழ்ந்துள்ள மொழிக்கலப்பும் ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளன. பாரதிதாசன் தனித்தமிழைப் போற்றியுரைத்தமை மொழிக்கலப்பை எதிர்த்தமை ஆகியவை பற்றியும் ஆராயப்பட்டுள்ளது. பாரதிதாசன் சமசுகிருதம், ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகளை எதிர்த்தமைக்கான காரணம் விளக்கிக்காட்டப்பட்டுள்ளது. சங்க காலத்தில் பயிற்றுமொழிச்சிக்கல் தோன்றாமையும் பாரதிதாசன் காலத்தில் தமிழ் பயிற்றுமொழியாக வேண்டும் என வலியுறுத்தியமையும் ஆராயப்பட்டுள்ளன. சங்க காலத்தைப் போலத் தமிழ் பாரதிதாசன் காலத்தில் கோயில் வழிபாட்டு மொழியாக இல்லாமையின் அது கோயிலில் வழிபாட்டு மொழியாதற்குப் பாரதிதாசன் குரல் கொடுத்தமைபற்றி ஆராயப்பட்டுள்ளது. சங்க காலத்தில் தமிழ் முத்தமிழ் என்று ஒருங்கிணைந்த நிலையில் போற்றப்பட்டமையும் பாரதிதாசன் காலத்தில் இசைத்தமிழ், நாடகத்தமிழ் வளர்ச்சியின்றிப் போற்றப்படாமல் இருந்தமையும் பாரதிதாசன் இவற்றின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டமையும் விளக்கிக்காட்டப்பட்டுள்ளன.

# இலக்கியம்

பாரதிதாசன் பாடல்கள் இலக்கிய நோக்கில் பல அறிஞர்களால் பலவாறு முன்பே ஆராயப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்களும் பல கோணங்களில் முனபே ஆராயப்பட்டுள்ளன. இந்நிலையில் பரவலாக ஆராயப்பட்ட கோணங்கள் தவிர்க்கப்படடுப புதிய கோணங்களில் இக்கட்டுரையில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. பாரதிதாசன் பாடல்களும அகப்புறப் பாடல்களும் அகத்துறை நோக்கிலும் புறத்துறை நோக்கிலும் அகப்பொருள் மெய்ப்பாட்டு நோக்கிலும் ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளன. மேலும் தொனி, இரசம். ஔசித்தியம் ஆகிய கோட்பாடுகளின் அடிப்படையிலும் பாரதிதாசன் பாடல்களும் சங்கப் பாடல்களும ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளன.

## அகத்துறை

சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் அமைந்து வரும சில அகத்துறைகளில் காணப்படும் கருத்து ஒற்றுமை ஆராயப்பட்டுள்ளது. அவ்வகத்துறைகள பின்வருமாறு

1. தலைமகன் பாங்கற்குக் களவு பற்றி உரைத்தது.
2. வரைவிடை ஆற்றாது தோழிக்குத் தலைமகள் சொல்லியது.
3. பிரிவிடைத் தலைவி வருந்தியது.
4. பிரிவிடை மெலிந்த கிழத்தி சொல்லியது.
5. வரையாது பிரிந்த விடத்து, 'அவர் பிரிந்தது நின்னை வரைந்து கோடல் காரணமாகத்தான் எனத் தோழி தலைமகட்குக் கூறியது'.
6. தலைவி இயற்பட மொழிந்தது
7. தோழி வரைவு கடாயது.
8. பொருள்வயிற் பிரிவில் தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.
9. வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகற்கு உரைத்தது.
10. தலைவி வாயில் மறுத்தது.

ஈண்டுக் கொடுக்கப்பட்ட துறைகளுள் இரண்டாவது மூன்றாவது நான்காவது துறைகள் பிரிவு வேளையில் தலைவி வருந்துகின்ற நிலையில் கூறுவது என்னும் ஒருமைப்பாடு உடையனவாகும்.

தலைமகன் பாங்கற்குக் களவு பற்றி உரைத்தது என்னும் துறையில் அமைந்த சங்க இலக்கியப் பாடலும் பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை. அப்பாடல்கள் பின்வருமாறு

**சங்க இலக்கியப் பாடல்:**

"எலுவ சிறாஅர் ஏமுறு நண்ப
புலவர் தோழ கேளா யத்தை
மாக்கடல் நடுவண் எண்ணாட் பக்கத்துப்
பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்கும் சிறுநுதல்
புதுக்கோள் யானையிற் பிணித்தற்றால் எம்மே"[1].

**பாரதிதாசன் பாடல்:**

"வாட்டம் ஏன் என்று கேட்ட பாங்கனே,
கேட்க! எட்டாம் பிறை கடலில் கிளைத்தல் போல்
கரிய கூந்தல் அருகில் தோன்றிய
ஒருத்தியின் நெற்றி பிணித்தது - என்
கருத்தோ கடிது பிடிபட்ட யானையே."[2]

மேற்கூறிய பாடல்களில் கரிய கடலில் தோன்றிய எட்டாம்பிறை போல், கரிய கூந்தலில் தோன்றிய ஒருத்தியின் நெற்றியால் காட்டிலிருந்து புதியதாகப் பிடிக்கப்பட்ட யானையைப் போல் என் மனம் பிணிக்கப்பட்டது எனப் பொருள் அமைந்துள்ளது.

கரிய கடலில் தோன்றிய எட்டாம் பிறை போன்றது. கரிய கூந்தலின் பக்கத்தில் தோன்றிய நெற்றி என்பதில் எட்டாம் பிறை உவமை. நெற்றி என்பது பொருள். வெண்மைப் பண்பும் வடிவமும் பொதுத் தன்மையாக உள்ளன. இன்ன பொருள் இன்ன காரணத்தால் இன்னதை ஒத்திருக்கும் என்று காரணம் புலப்படக் கூறுவது

1. குறு. 129
2. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1626

ஏதுவுவமையாகும காட்டிலிருந்து புதியதாகப பிடிக்கப்பட்ட யானை உவமை. தலைவனது மனம் பொருள் யானை பிணிக்கப்பட்டது என்பதை ஒத்துத் தலைவனின மனம் தலைவியால் பிணிககப்படடமை உளளது எனபது புலப்படக கூறுவதாகும்.

வரைவிடை ஆற்றாது தோழிககுத் தலைமகள் சொல்லியது என்னும் துறையில் அமைந்த சஙக இலக்கியப் பாடலும் பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை. அப்பாடல்களை பின்வருமாறு:

**சங்க இலக்கியப் பாடல்:**

"உறைபதி யன்றித் துறைகெழு சிறுகுடி

கானலஞ் சேர்ப்பன கொடுமை எற்றி

ஆனாத் துயரமொடு வருந்திப் பானாள்

துஞ்சா துறைநரொ டுசாவாத்

துயிற்கண் மாக்களொடு நெட்டிரா வுடைத்தே"[3]

**பாரதிதாசன் பாடல்:**

"எனை,

மணக்கத்தான் பணத்தைத்தான்

குவிக்கத்தான் புறப்பட்டான்

மறப்பானோ தோழிப் பெண்ணே

என் அத்தான் - மனம்

மாற மாட்டான்.

நல்ல,

3. குறு.145

குணததில்தான் செயலிற்றான
அனைப்பில்தான் மிகுநதிட்டான்
குறறமிலலான் தோழிப் பெண்ணே
என் அத்தான் - ஒரு
கோவைப் பழத்தைக்
கிளிவிடுமா தின்னத்தான் !

என்,

சீரைத்தான் கோரித்தான்
தேரிற்றான் ஏறித்தான்
திரும்புகின்றான் தோழிப்பெண்ணே
என் அத்தான் - அவன்
விரும்புவதும்
உலகத்திலே என்னைத்தான் !

என்,

பேரைத்தான் எண்ணித்தான்
ஊரைத்தான் நோக்கித்தான்
பெயர்கின்றான் தோழிப் பெண்ணே
என் அத்தான் - நீ
துயரத்தில் ஏன்
தள்ளிக் கொண்டாய் உன்னைத்தான்"?[4]

மேற்கூறிய பாடல்களில் "கடற்கரைச் சோலையினையுடைய தலைவனைப பிரிந்த தலைவி வருத்தத்தினால் நடு இரவில் தூங்காமல் இருந்தாள்" என்னும் போதும், "தலைவன் தலைவியை மணந்து கொள்ளப் பணத்தைத் தேடப் புறப்பட்டான் என்றும், அதனால் நம்மை மறக்கமாட்டான்" என்றும் கூறும் போதும் தலைவன், தலைவி ஆகிய இருவரும் ஒருவரையொருவர் மறக்காமல் ஒத்த அன்புடன இருப்பவர்கள் என்னும் போதும் பிரிவுக் கொடுமையினால் தனிமையில் வருந்தித் துன்புறும் வருத்த மிகுதியுடையவர்கள் அவர்கள் என்பது சுட்டப்பட்டுள்ளது.

4. பாரதிதாசன், பாரதிதாசன கவிதைகள், ப 421

வரையாது பிரிந்த விடதது, 'அவர் பிரிந்தது நினனை வரைநது கோடல காரணமாகத்தான் எனத் தோழி தலைமகட்குக் கூறியது என்னும துறையில் அமைநத சங்க இலக்கியப் பாடலும் பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை. அப்பாடலகள பின்வருமாறு:

**சங்க இலக்கியப் பாடல்:**

"காந்தளங் கொழுமுகை காவல் செல்லாது
வண்டுவாய் திறக்கும் பொழுதிற் பண்டும்
தாமறி செம்மைச் சான்றோர்க் கணட
கடனறி மாக்கள் போல் இடன்விட்
டிதழ்தளை யவிழ்ந்த ஏகல் வெறபன்
நன்னர் நெஞ்சத்தன் தோழி நின்னிலை
யான்றனக் குரைத்தனெ னாகத்
தானா ணினனி.். தாகா வாறே".[5]

**பாரதிதாசன் பாடல்:**

"காந்தளின் இதழ்க்கதவு திறக்கும் வரைக்கும்
காத்திராது வண்டு பாத்திரம் காட்டத்
தக்கோர் வருகை கண்டெதிர் கொண்ட
மிக்கோர் போல மெல்லிதழ் திறந்தது.
அத்தகு சிறந்த மலையுடை அன்னவென்
நல்ல நெஞ்சம் உடையவன் என்க.
பெருமணம் புரியாது பிரிந்ததை உன்னிக்
கதறும் உன்நிலை கழறினேன்
மணக்கவே என்றான் மற்றவன் நாணியே".[6]

5. குறு 265
6 பாரதிதாசன், குயில கிழமை இதழ, 26-07-60, ப. 1

மேற்கூறிய பாடல்களில் "காநதள் மலரின அரும்புகள் மலரும் வரை வண்டுகள் காத்திராது அவற்றினை நெருஙகும் பொழுது, தகுதியுடைய பெரியோர்களைக் கண்டு வரவேற்கும் நன்மக்களைப் போல அரும்பு மலர்ந்து நிற்கும் பெரிய மலையையுடைய தலைவனிடம் களவொழுக்கத்தின்கண் உன் இன்னல் நிலையைக கூறினேன். அதைக் கேட்ட அவன் நாணமுற்றுத் திருமணம் செய்து கொள்கிறேன் என்றான்." எனக் கருத்துக் காணப்படுகிறது.

தகுதியுடைய பெரியோர்களைக் கண்டு வரவேற்கும நனமக்களைப் போலக காந்தள் மலரின் அரும்புகளை வண்டுகள் நெருங்கும்பொழுது மலரும் என்பதில் நன்மக்கள உவமை.காந்தள் மலர்கள் மலரும் என்பது பொருள். நன்மை செய்யக் கூடிய குணம என்ற பண்பு பொதுத் தன்மையாக அமைந்துள்ளது. இது பணபு வகை உவமமாகும். பிரிவிடைத் தலைவி வருந்தியது என்னும் துறையில் அமைந்த சங்க இலக்கியப் பாடலும பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை அப்பாடல்கள் பின்வருமாறு:

**சங்க இலக்கியப் பாடல்:**

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி
யார.். தறிந்திசி னோரே சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"[7]

**பாரதிதாசன் பாடல்:**

"வாழு மாந்தர்க்கு வான் மழை போன்றது
மணாளர்வந் தெனக்குத் தருவதோர் இன்பம்!
தோழியே அவரின்றி நான்படும் தொல்லை
சொல்லிக் காட்டல் இலேசில் இல்லை.

7. குறு. 18

சிறுகொம்பு பெரும்பழம

தாங்குவது போலேஎன்

சிறிய உயிர் பெருங் காதல்

தாங்குவ தாலே

மறத்தமிழன், விரைவில்

வராவிடில் உடலில்

மளுக்கென்று முறியும்என்

ஆவி மண்மேலே

பிறர் செய்த தீமையை

மறந்திடுதல் மறதி

பெற இயலாததை

மறப்பதும் மறதி

'இறந்து போவாளே

யான்போக வேண்டுமே'

என்பதில் மறதியா

அது என்றன் இறுதி!"[8]

மேற்கூறிய பாடல்களில் தலைவியின் வருத்தமிகுதி சுட்டப்பட்டுள்ளது. அதாவது சிறிய கிளையில் பெரிய பழம் தொங்குவது போலச் சிறிய உயிரானது பெரிய காமநோயைத் தாங்கியுள்ளது எனச் சுட்டப்பட்டுள்ளது. சங்கப் பாடலில் தலைவனால் தலைவியின் துன்பம் நீங்கும் என்பது குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளது. ஆனால், பாரதிதாசன் பாடலில். "மறத்தமிழன் விரைவில் வராவிட்டால் என் உடலில் உயிர் மளுக்கென்று நீங்கும்" என்று வெளிப்படையாகக் கூறப்பட்டமை உணரலாம்.

8. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 42

பிரிவிடை மெலிந்த கிழததி சொல்லியது என்னும துறையில் அமைநத சங்க இலக்கியப் பாடலும், பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோககத்தககவை அப்பாடல்களா பின்வருமாறு·

**சங்க இலக்கியப் பாடல்:**

"செல்வார அல்லரென றியானிகழ்ந தனனே
ஒல்வாள் அல்லளென் றவரிகழ்ந் தனரே
ஆயிடை, இருபே ராண்மை செய்த பூசல
நல்லராக் கதுவி யாங்கென்
அல்லல் நெஞ்சம் அலமலக் குறுமே".[9]

**பாரதிதாசன் பாடல்:**

"சொல்லார் என்றுநான் நினைத்திருந்தேன் - செல்லென்று
சொல்லாள் என்று தாம் நினைத தகன்றாா
அல்லல் உடையதென் உள்ளம்
அதுவன்றி மயக்கம் கொள்ளும்
பொல்லாத எங்கள் ஊக்கம் விளைத்த போர்
நல்ல பாம்பு கௌவிய தாயிற்றே"[10]

மேற்கூறிய பாடல்களில் தலைவன் பிரிந்து செல்லமாட்டான் என நினைத்துத தலைவி இருந்ததாகவும் தலைவன், தலைவியிடம் பிரிவைக் கூறினால் அவள் அதறகு உடன்படமாட்டாள் என நினைத்து விட்டுப்பிரிந்தான் எனவும் இவ்வாறாக இருவரிடையேயும ஏற்பட்ட போரின் காரணமாகத் தன் நெஞ்சம் நல்ல பாம்பு கடித்ததால் ஏற்பட்ட துன்பத்திற்கு வருந்தினாற்போலத் தலைவி வருந்திக் கூறுவதாகச் சுட்டப்பட்டுள்ளது

9. குறு. 43
10.பாரதிதாசன், இசையமுது, ப. 17

தலைவனைப் பிரிந்த தலைவியின் நெஞ்சமானது நல்ல பாம்பு கடித்தால ஏற்படும் துன்பத்தை அனுபவிப்பவர் நெஞ்சத்திற்கும் தலைவன் தலைவியரின் பிரிவானது நல்ல பாம்பின் நஞ்சிற்கும் ஒப்புமை கூறப்பட்டுள்ளன. அதாவது தலைவிக்குத் தலைவனின பிரிவால் ஏற்பட்ட துன்பமானது நல்ல பாம்பு கடித்ததால் துன்புறும் மனிதனின் நிலையைப போலுள்ளது என உவமை கூறப்பட்டுள்ளது.

இவ்வுவமை சங்க இலக்கியப் பாடலில், நல்ல பாமபு கடித்ததால் ஏற்படும துன்பத்தைப் போலத் தலைவியின் நெஞ்சம் துன்புறும் எனத் தலைவியின் வருத்த நிலை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

அதற்கிணையாகப் பாரதிதாசன் தன் பாடலில் தலைவியின் நெஞ்சம் "நலல பாம்பு கௌவியதாயிற்றே " எனக் கூறும்பொழுது நல்ல பாம்பு கடித்த அந்த நிமிடததில இறப்பின் பிடியில் இருக்கும் மனித மனம் தான் பிழைக்கப் போவதில்லை எனத் தவிக்கும துயரநிலைமை தலைவியானவள் தலைவனைக் காணமாட்டாமல் தவிக்கும் நிலைக்கு ஒப்புமைப் படுத்தப்பட்டுள்ளமை காணலாம்.

நஞ்சேறியவர் நஞ்சு நீங்கினால் உயிர் பிழைப்பர். தலைவியானவள், தலைவன் பிரிவு நீங்கினால் மகிழ்வாள் என்னும் பொருள்பட மேற்கூறிய இருபாடல்களிலும் உவமை கூறப்பட்டுள்ளது.

தலைவி இயற்பட மொழிந்தது என்னும் துறையில் அமைந்த சங்க இலக்கியப் பாடலும் பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை. அப்பாடல்கள் பின்வருமாறு :

**சங்க இலக்கியப் பாடல்:**

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"[11]

11. குறு. 3

**பாரதிதாசன் பாடல்**

"அவன் மேல் தானே நானே

ஆசை வைத் தேன் மானே!

(அவன் மேல தானே... ............. . .')

கவலை மாட்டை ஓட்டிச் சென்றான்

கண்ணை அதோ காட்டிச் சென்றான்

(அவன் மேல் தானே.......................!)

முல்லை மலர் ஏந்தி வந்து

முன் அதற்கு முத்தந் தந்து

அல்லல் எல்லாம் கண்ணிற் காட்டி

அகன்றி டுவான் உள்ளம் நொந்து

(அவன் மேல்தானே.........................!)

ஆடச் சென்றால் அங்கிருப்பான்

அருமை கண்டால் அவன் சிரிப்பான்

கூடைப் பூவை என் எதிரில்

கொண்டு வந்து கடை விரிப்பான்

(அவன் மேல்தானே.........................!)

புதிய புதிய வெளியீடு

போட்ட விலை மதிப் போடு

மிதிவண் டியில் வாங்கி வந்த

மிகக் கொடுத்தல் அவன் பாடு"

(அவன் மேல்தானே..........................!)

வழுக்கியது குளத்துப் படி

வந்தணைத் தான் அதே நொடி

மழையும் பயிரும் அவனும் நானும்

மறப்ப தென்றால் அது எப்படி? "[12]

(அவன் மேல்தானே..........................!)

மேற்கூறிய பாடல்களில் தலைவனின் அன்பு பெரியதெனச் சுட்டப்பட்டுள்ளது. "தலைவனது நட்பானது நிலத்தை விடவும், வானத்தைவிடவும் கடல் நீர் ஆழத்தைவிடவும பெரியதாகிச் சிறந்ததாகும்" எனத் தலைவி தலைவனை இயல்பு நிலையிலிருந்து உயர்த்திக் கூறுவதாகச் சங்க இலக்கியப் பாடல் அமைந்துள்ளது. இதனையே பாரதிதாசனார், "நான் ஆடப் போனால் அங்கிருப்பான். என்னருமை கண்டு அவன் சிரிப்பான். கூடைப் பூவை வந்து கடை விரிப்பான். புதிய புதிய புத்தகங்களை அதிகமாக வாங்கி வந்து தருவான்" என இக்காலத்திற்கேற்றவாறு சுட்டியுள்ளமை ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

வரைவுகடாதல் என்னும் துறையில் அமைந்த சங்க இலக்கியப் பாடலும் பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை. அப்பாடல்கள் பின்வருமாறு:

12.. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 424

**சங்க இலக்கியப் பாடல்:**

"மென்தோள் நெகிழ்த்த செல்லல் வேலன்
வென்றி நெடுவேள் என்னும் அன்னையும்
அதுவென உணரும் ஆயின் ஆயிடைக்
கூழை இரும்பிடிக் கைகரந் தன்ன
கேழிருந் துறுகற் கெழுமலை நாடன்
வல்லே வருக தோழிநம்
இல்லோர் பெருநகை காணிய சிறிதே."[13]

**பாரதிதாசன் பாடல்:**

"முருகனால் வந்த நோயாம்! உனக்கிது
முருகனால் வந்த நோயாம்!
கருதிக் கருதிக் கண்ணான வெற்பனை
உருகும்உன் உடம்பில் வந்த இந்நோய்

முருகனால் வந்த நோயாம்!............

ஏதுங்கெட்ட பூசாரி தன்னை
இட்டு வந்தாள் நமைஈன்ற அன்னை
ஓர்தட்டு நிறையக் கொட்டினாள் பொன்னை
உளறினான் அதை வாங்கிய பின்னை

முருகனால் வந்த நோயாம்! .........

கழற்சிக் காய்களாற் கணக்கொன்று போட்டான்
காரணங்கள் சொல்லவும் மாட்டான்
கொழுத்த ஆட்டை அறுத்துப் படைத்தால்
கொடுமை தீருமென் றானந்தக் கோட்டான்

முருகனால் வந்த நோயாம்!......"[14]

13. குறு. 111
14. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1060

மேற்கூறிய பாடல்களில் தோழி, "மென்மையான தோளை மெலிவித்த வருத்தம்,வேலினையுடைய வேலவனால் வந்த நோய் எனத்தாய் நினைத்து நம்மில்லத்தில் நகைப்பிற்கு இடமான செயல்களைச் செய்கிறாள்" என்னும்போதும், தலைவிக்கு உடலை உருக்கும் இந்த நோய் முருகனால் வந்தது என்றும், நமை ஈன்ற தாய் ஒன்றுமில்லாத பூசாரியை அழைத்து வந்து ஓர் தட்டு நிறையப் பொன்னை வைத்தாள் என்றும் அதை வாங்கிக் கொண்டு அவனும் உளறினான்" என்றும் கூறும்போதும் தலைவியின் நோய்க்குக் காரணமானவன் தலைவனே என்னும் பொருள் விளங்கக் கூறப்பட்டுள்ளது.

பொருள்வயிற் பிரிவில் தலைவியைத் தோழி ஆற்றுவித்தது என்னும் துறையில் அமைந்த சங்க இலக்கியப் பாடலும் பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை.

**சங்க இலக்கியப் பாடல்:**

"உள்ளார் கொல்லோ தோழி கள்வர்தம்
பொன்புனை பகழி செப்பங் கொண்மார்
உகிர்நுதி புரட்டும் ஓசை போலச்
செங்காற் பல்லி தன்றுணை பயிரும்
அங்காற் கள்ளியங் காடிறந் தோரே"[15]

**பாரதிதாசன் பாடல்:**

"நினையாரோ தோழி?
தினையேனும் எனை
நினையாரோ தோழி?
நினைவா ராயின் எனை யாள வருவார்!
நினைக்கிலார்! இனியேனும்என் நெஞ்சம் களிக்க
நினையாரோ தோழி!

15.. குறு. 16

தீவேடன் அன்பின் இரும்புமுனை தீட்டும் - ஒலிபோல்

செங்காற் பல்லி துணையினை அழைப்பது கேட்டும்

ஆய அக் கள்ளிக்காட்டு வழிச்செல்பவர் மீட்டும்

அணுகாரோ அணுகாவிடில் அதுவென் நெஞ்சை வாட்டும்

நினையாரோ தோழி!"[16]

மேற்கூறிய பாடல்களில் பொருள்தேடும் பொருட்டுத் தலைவனைப் பிரிந்த தலைவி தன்னைப் பிரிந்த நினைவில்லையா என வருந்தும்பொழுது தோழி, தீய தொழிலையுடைய கள்வர் அம்பின் முனையைச் செம்மை செய்யும்பொழுது எழும் ஒலியைப் போலச் செங்காற் பல்லி தன் துணையை அழைக்கும் ஒலி கேட்கும் கள்ளிக் காட்டின் வழியாகச் செல்லும்பொழுது தலைவர் நம்மை நினைப்பார் எனக் கூறுகிறாள்.

"அன்புறு தகுவன இறைச்சியிற் சுட்டலும்

வன்புறை யாகும் வருந்திய பொழுதே"[17]

என்னும் நூற்பாவில் தலைவி வருந்தும் வேளையில், தலைவன் பிரிந்து சென்ற பாதையில் காணப்படும் தம் துணையிடம் அன்பு செய்யும் உயிரினங்களைத் தேர்ந்து சொல்லுவது, தோழி தலைவியை ஆற்றுவித்தலாக அமையும் என்பதைத் தொல்காப்பியர் கூறியுள்ளார். தன் துணையை அழைக்கும் பல்லி, " அன்புறு தகுவன " என்ற பிரிவில் பொருந்தி வருவதாகும் என்பது ஈண்டுக் கருதத்தக்கது.

வினைமுற்று மீளும் தலைவன் தேர்ப்பாகற்கு உரைத்தது என்னும் துறையில் அமைந்த சங்க இலக்கியப்பாடலும் பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை. அப்பாடல்கள் பின்வருமாறு:

**சங்க இலக்கியப் பாடல்:**

"சாயிறைப் பணைத்தோள் அவ்வரி யல்குல்

சேயிழை மாதரை யுள்ளி நோய்விட

16. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1000
17. தொல். பொருள். இளம். பொருளி. 35

முள்ளிட ரூர்மதி வலவநின

புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே". [18]

**பாரதிதாசன் பாடல்:**

"கடிய ஓட்டடா தேரைப் - பாகனே

கடிய ஓட்டடா !

கொடியெலாம் முல்லை அரும்பின! பொன்போல்

கொன்றை மலர்ந்தன மென் மேல்!

கடகட வென்றே இடித்து மின்னி எழுமோர்

கார்காலம் தொடங்கியது பார் பார்

கடிய ஓட்டடா! ---

கால் விரைந்து குட்டியொடு பெண்மான்

களர் நிலத்தில் சென்றதை ஆண்மான்

ஏல்வதா என் அன்பினால் மீட்க

ஏகும் அதுபோலென் துணைவியைக் காக்க

கடிய ஓட்டடா ! ---

எப்போது வருவான் எப்போது வருவான்

என்றிராப் பகல் எதிர்பார்க்கும் இன்பத்தேன்

கைப் புறத்தை இறுகத் தழுவத் தான்

கண்ணினும் மனத்திலும் ஆவலை வைத்தேன்

கடிய ஓட்டடா ! -----"[19]

18. ஐங். 481
19. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1063

மேற்கூறிய பாடல்களில் தலைவன் தன் தலைவியை " நுண்ணிய கோடுகள அமைந்த மூங்கில் தோளினையும் சிவந்த அணிகலன்களையும் உடையவளை நினைத்தும தன் காதல் நோயும் அகலும்படியும் விரைவாகத தேரைச செலுத்துமாறு கூறும் பகுதி நோக்கத்தக்கது. "தலைவன் எப்போது வருவான் என இராப்பகல் நினைத்து எதிர்ப்பார்த்திருக்கும் இன்பத் தேன் போன்றவளை நான் இறுகத் தழுவக் கண்ணிலும மனத்திலும் ஆவலை வைத்தேன் " எனத் தலைவன் கூறும் போதும் தலைவன் தன்னுடைய தலைவியுடன் உள்ள அன்பு மிகுதியைச் சுட்டிக் காட்டி, "நாங்கள் இப்பொழுதே ஒனறு சேரவேண்டும். ஆதலின் உடனடியாகத் தேரைச் செலுத்துக" எனத் தேர்ப்பாகனுக்குக் கட்டளையிடும்போதும் ஒப்புமை காணப்படுகின்றது.

தலைவி வாயில் மறுப்பு என்னும் துறையில் அமைந்த சங்க இலக்கியப பாடலும் பாரதிதாசன் பாடலும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை.

**சங்க இலக்கியப் பாடல்:**

"அறுசில் கால வஞ்சிறைத் தும்பி
நூற்றிதழ் தாமரைப் பூச்சினை சீக்கும்
காம்புகண் டன்ன தூம்புடை வேழத்துத்
துறைநணி யூரனை யுள்ளியென்
னிறையே ரெல்வளை நெகிழ்போ டும்மே"[20]

**பாரதிதாசன் பாடல்:**

" அவளிப்படி நடந்தாளோ ?
அவளிப்படி விழித்தாளோ !
இவளிடத்தில் காட்டாதீர்!
இவளிடத்தில் விழிக்காதீர் !

20. ஐங். 20

அவள் பூசிய கலவைதானோ ?

அவள் தந்தை அடைகாயோ ?

இவளிடத்தில் வீசாதீர் !

இவளிடத்தில் சிரிக்காதீர் !

அவள் சூட்டிய மலர்தானோ ?

அவள் கடித்த கன்னப் புண்ணோ !

இவளிடத்தில் நீட்டாதீர் !

இவள் மனத்தைக் கலக்காதீர் !

அவள் கொடுத்த தலைக் கொழுப்பா !

அவள் கொடுத்த ஆணவமா !

இவளிடத்தில் செல்லாதே

இவளை ஒன்றும் பண்ணாது !

அவளிடமே போவீரே !

அழலிடமே சாவீரே !

இவளிடத்தில் வரவேண்டாம்

இவள் தோளை நத்தாதீர்

எவளிடத்தில் எது சொல்லும் ?

அவளிடத்தில் அது செல்லும்

குவளை அத்தான் அவள் கண்கள்

குவளை நீரும் இங்கில்லை !

அவளிதழ்தான் இருக்குமங்கே

அவலுமில்லை மெல்லுதற்கே !

சவலை போகும் பிள்ளை இங்கே

தனிஇன்பக் கொள்ளை அங்கே

கவலை யெல்லாம் அவளி டத்தில்

கண்ணீர்தான் இவ்விடத்தில்

தவளை போலக் குதிக்காதீர்

தலைவாயில் மிதிக்காதீர்!''[21]

சங்கப் பாடலில், தலைவனை இடையறாது நினைப்பதனால் தலைவி தன்னுடைய உடல் மெலிந்து ஒளிபொருந்திய வளையல்கள் கழலுகின்றன. தலைவனை நினைப்பதனால் வளையல் கழலுகிறது எனக் காட்டப்படுவதால் அவனை நினைப்பதால் பயனில்லை என்ற உள்ளுறைப் பொருள் தோன்றுகிறது.

பாரதிதாசன் பாடலில், தலைவி " அவளிடம் சென்று உங்கள் விருப்பம் போலிருங்கள். என்னிடம் வரவேண்டாம். என் தோளைத் தழுவாதீர். என்னிடம் எதுவும் செல்லாது. அவள் குவளை. அதனால் நீர் அங்குள்ளது. இங்கில்லை. அவளிதழ் அங்குள்ளது. இங்கு மெல்வதற்கும் அவலில்லை. இங்குச் சவலை போகும் பிள்ளை உள்ளது. அங்கு மகிழ்ச்சி நிறைந்திருக்கிறது. உங்கள் நினைவெல்லாம் அங்குள்ளது. கண்ணீர் மட்டும் இங்குள்ளது. தவளை போல் துள்ளாதீர்கள். தலை வாசலை மிதிக்காதீர்கள் " எனக் கூறுகிறாள்.

மேற்கூறிய இரண்டு பாடல்களிலும் தலைவனை வாயில் மறுக்கும் பொருள் காணப்படுகிறது. சங்கப் பாடலில் வளையல் கழலுதல் காட்டப்பட்டுள்ளது. பாரதிதாசன் பாடலில் சவலை போகும் பிள்ளை உவமையாகத் தலைவியைச் சுட்டுவதாகக் கொள்ளலாம்.

21. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், பக். 430-431

# புறத்துறை

சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன பாடல்களிலும் அமைந்துவரும் சில புறத்திணை, துறைகளில் காணப்படும் கருத்தொற்றுமை ஆராயபபட்டுள்ளது

## வெட்சி

வெட்சித் திணை பற்றித் தொல்காப்பியர் விளக்கியுளளார். அத்திணைக கூறுகள் பாரதிதாசன் பாடலிலும் சங்க இலக்கியத்திலும பயினறு வருகின்றன.

புறத்திணை ஏழனுள வெட்சித திணை முதல் திணையாக அமைகிறது இவ்வெட்சித் திணையினைத் தொல்காப்பியா,

> "வேந்து விடுமுனைஞர் வேற்றுப்புலக் களவின்
> ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்."[22]

என்று கூறியுள்ளார்.

அரசனால் ஏவப்பெற்ற, நாட்டின் முனையிலுள்ள ஊரார், அயல்நாட்டின்கண் உள்ள பசுக்கூட்டத்தைக் கவர்ந்து கொணர்ந்து பாதுகாததலைச செய்வதாகும இவ்வெட்சித்திணை படை இயங்கரவம் முதலிய முப்பத்தைந்து துறைகளையும உடையதாக விளங்குகிறது. இம்முப்பத்தைந்து துறைகளில் மறம் கடைக்கூட்டிய துடிநிலை, தலைத்தாள நெடுமொழி தன்னொடு புணர்த்தல் ஆகிய துறைகள் சங்க இலக்கியத்திலும் பாரதிதாசன் பாடலிலும் பொருள் ஒற்றுமைப்படப் புனையப்படுகின்றன.

### மறம் கடைக்கூட்டிய துடிநிலை

மறத்தொழிலை முடிக்கும்பொழுது துடிகொட்டும மறத்தினைப் பற்றிக கூறுதலாகும். இதனைப் பற்றிய கருத்தினை, "பரலுடைய மருங்கின்"[23] என்று தொடங்கிவரும சங்க இலக்கியப் பாடலில் காணலாம். இப்பாடலில் சிவந்த, பூவையுடைய கண்ணியுடனே அழகிய மயிலினது பீலியைச் சூட்டிப் பெயரை எழுதி நட்டுவைத்த கல்லையும் கன்றுடனே பசுவையும் மீட்டுக் கொண்டுவந்து மறவரை வென்ற நெடிய வீரன் இறந்தான் என்ற

22. தொல். பொருள இளம புற. 2
23. புறம் 264

கருத்துப் பாடலில் விளக்கப்பட்டுள்ளது பாரதிதாசன் பாடல்களிலும் இடம்பெறும் பினவரும பாடலடிகள் கருதத்தக்கவை

"வெட்சி புனைந்துவர அதோ! அதோ! அதோ!
வில்வான் அம்பு மழை பொழிகவே
கட்சி இரண்டு நெருப்புக் கக்கின
கழன்றன தலைகள்! கழன்றன வாள்கள்!
கரந்தை சூடுவீர ...

ஒருமகன் தனிநின் றசைதத நெடுவாள
ஒழித்தது பகைவனை ஆயினும், பிறரால
திருமகன் குடர் சரிததிட அத் திருமகன
செத்தான், தன்புகழ் வைத்தான் வாழதது்க.
கரந்தை சூடுவீர்... ".[24]

மேற்கூறிய இரண்டு பாடல்களிலும வீரம் பொருநதிய வீரனின் வீரத்தைப பற்றிய சிறப்புக்களைக் கூறியதோடு மட்டும அலலாமல, அவவீரனின இறந்த செய்தியும சுட்டப்பட்டுள்ளது.

## தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தல்

தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தல என்பது கரந்தை மறவன தன்னுடைய ஆற்றலைக் கொண்டு வஞ்சின மொழிகளை இணைத்துச் சொல்லல் ஆகும. இதனை "பெருநீர் மேவல்" என்று தொடங்கிவரும் பாடலில் கூறப்படடுள்ள "வடிகட்டப்பட்ட கள்ளில் பூக்களையிட்டு முதிர்வித்த சாடியிலுள்ள கள்ளை வாழ்த்தி, நீர்த் துறையிலிருககும புதல்களைப் பொருந்திக் கம்பு உண்டு முட்டைகளை இடும் மருத நிலத்து ஊர்களைவிட, மிகக் கூரிய நெடிய வேல் தைத்து நிற்கும் மார்புடன் மடல் நிறைந்த வலிய பனைமரம போல் நிற்கும் போர் வீரர்க்கு மறமுடைய புகழே பெரியதாகும்."[25] என்னும் கருத்து எண்ணத்தக்கதாகும்.

அதாவது தன்னுடைய போர் ஆற்றலால் மறப் புகழையன்றிப் பிற செல்வங்களை விரும்பாத தன்மையைச் சுட்டுவதாகும்.

24 பாரதிதாசன், தேனருவி, ப. 50
25. புறம். 297 : 5 - 10

பாரதிதாசன் பாடல்களில் அமையும பினவரும பாடலடிகள் நோக்கததககவை.

"தெரிந்து தெரிந்து விரைந்து வந்து
செறிந்தீர் மறககுடிப் பழஞ்சீர் தோன்ற,
விரைந்து கொடிய சாககாடு தின்ற
உயிரையும் மீட்போம் என்றே நன்று
கரந்தை சூடுவீர் "[26]

பாரதிதாசன் பாடல்களிலும் கரந்தை மறவன தன் பழமையான மறக்குடிப பெருமை தோன்றுமாறு கொடியதான இறப்பையும் கொண்ட உடலின் உயிரையும் மீட்டு வருவதாகத் தன்னுடைய பேராற்றலைக் கொணடு வஞ்சின மொழிகளை இணைததுச சொல்வதாகச் சுட்டப்பட்டுள்ளது.

## வஞ்சி

வஞ்சித் திணை பற்றித் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். அத்திணைக கூறுகள் பாரதிதாசன் பாடல்களிலும் சங்க இலக்கியப் பாடல்களிலும் பயினறு வருகின்றன.

புறத்திணை வைப்பில் இரண்டாவது திணையாக அமைவது வஞ்சித் திணை இத்திணைக்கு,

"எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்(று) அடல்குறித் தன்றே"[27]

என்று வரையறை தருகின்றார். குறைவில்லாத மண்ணை விரும்பிய அரசனை எதிர் அரசன் அவனை எதிர்த்து அஞ்சுமாறு போர் செய்தலாகும். இவ்வஞ்சித் திணை கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம் முதலிய பதின்மூன்று துறைகளை உடையதாகும். இப்பதின்மூன்று துறைகளில் இயங்குபடை அரவம், பொருளின்று உய்த்த பேராண் பக்கம் ஆகிய துறைகள் சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் பொருள் ஒற்றுமைப்படப் புனையப்படுகின்றன.

26. பாரதிதாசன், தேனருவி, ப 59
27. தொல். பொருள். இளம். புற. 6

## இயங்கு படை அரவம்

போர்ப்படை போருக்குப்புறப்பட்டுச் செல்லும்பொழுது எழுகின்ற முரசு முழக்கம், யானை, தேர் இவற்றின் பேரொலியாகும். "வினைமாட்சிய விரைபுரவியொடு" எனத் தொடங்கும சங்க இலக்கியப் பாடலில், "விரைவாகச் செயல் செய்ய விரைந்த முகில் நிறத்தையுடைய பரிசையைப் பரப்பி முனையிடம் கலங்கச் சென்று விளைகின்ற கழனியைக் கொள்ளையிட்டு அம்மனையிடத்து மரமே விறகாகவும் காவல் செய்யும் பொய்கைகளில் களிற்றைப் படிவித்து விளக்கமுண்டாகி இடப்பட்ட நாட்டில் சுடுநெருப்பினது ஒளி ஞாயிற்றினது செக்கர் நிறம்போலத் தோன்றியதால் ஞாயிறு ஒளிவிடாது சென்று விடும்"[28] எனச் சுட்டப்பட்டுள்ளது.

விரைந்த குதிரையுடன் செல்லுதல் என்னும்போது குதிரையின் ஒலியும், முகில் நிறத்தையுடைய பரிசையைப் பரப்புதல் என்னும்போது பரிசையைப் பரப்பும் ஒலியும், முனையிடம் கலங்கச் செல்லுதல் என்னும்போது போர்க்கருவிகளின் ஒலியும் இவையெல்லாம சேர்ந்து போரொலியை எழுப்பும் தன்மை காணப்படுகின்றது.

பாரதிதாசன் பாடலின் பின்வரும் பகுதி கருதத்தக்கதாகும்.

"வீரமுர சியம்ப, மிகு
வெற்றி யானை முழங்க
ஆர்த்த வாசரும் ஏந்து படை
மேற் சினந்தே கிளம்ப,
நீள் குடை விரிந்தெழ - ஒளி
வாள் உறை பெயர்ந்தெழ,
தோளுயர்ந்த மறவோர்கள் சினம்
தோன்றவே கிளம்ப,
மறவேந்தன் வஞ்சி சூடினான்" [29]

பாரதிதாசன் பாடலடியிலும் போருக்குப் புறப்பட்டுச் செல்லும் பொழுது எழுகின்ற பேரொலி காணக்கிடக்கின்றது.

28 புறம். 16
29. பாரதிதாசன, தேனருவி, ப. 78

## பொருளின்று உய்த்த பேராண் பக்கம்

பகைவரைப் பொருளாகக் கருதாது செலுத்தின பேராண்மை அதாவது எதிர்த்து வரும் படையை ஒருவன் தாங்கிய பெருமையாகும்.

"வேந்தற்(கு) ஏந்திய" என்று தொடங்கிவரும் சங்கபபாடலில், போர்ககளததில போர் செய்யும் பொழுது வீரன் ஒருவன் பகைவருடன் போா செய்யும நேரம் வரை காத்திருக்காமல், விரைந்து சென்று தனக்கு முன்னே வரும் பெரும்படையை எதிர்நின்று விலக்கி அங்கே போர் செய்யும் ஆண் தன்மையுடையவன்[30] எனச் சுட்டப்பட்டுள்ளது.

இதனைப் பாரதிதாசனார் "மறவேந்தன் வஞ்சி சூடினான்" எனத் தொடஙகும பாடலில்,

"மறவேந்தன் வஞ்சி சூடினான் - எங்கள்
மறவேந்தன் வஞ்சி சூடினான்
இனமா எருதென எழுந்தெங்கள்
மறவேந்தன் வஞ்சி சூடினான்..."[31].

எனக் கூறுகின்றார்.

மேற்கூறிய சங்க இலக்கியப் பாடலடிகளில் போர்க்களத்தில் போர் செய்யும பொழுது போர் செய்யக் காலந்தாழ்க்காது எதிர்க்கக் கூடிய பேராண்மை உடையவன என அவனது பேராண்மை சிறப்பிக்கப்பட்டுள்ளது.

அவ்வாறே பாரதிதாசன் பாடலடிகளிலும் வீரத்தன்மை மிகுந்த வேந்தன மிகப்பெரிய எருதென எழுந்து வஞ்சி சூடினான் என்னும் போது வீரம் சிறப்பித்துக கூறப்பட்டுள்ளது.

இவ்வாறாகச் சங்க இலக்கியப் பாடலிலும் பாரதிதாசன் பாடலிலும் வீரத தன்மை பற்றிக் கூறுவது ஒன்றுபட்டுள்ளது.

## தும்பை

தும்பைத் திணை பற்றித் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். அத்திணைக கூறுகள் பாரதிதாசன் பாடலிலும் சங்க இலக்கியத்திலும் பயின்று வருகின்றன.

30. புறம் 292 . 5 - 8
31. பாரதிதாசன், தேனருவி, ப. 78

தும்பைத் திணை என்பது தனது வலிமை பொருளாகக் கருதிவந்த அரசனை எதிர்த்துச் சென்று அவன் தலைமையை அழிக்கும் சிறபபுடையதாகும் என்பதனை.

"மைந்துபொரு ளாக வந்த வேந்தனைச்
சென்று தலை அழிக்குஞ் சிறப்பிற் றென்ப"[32]

என்று வரையறை தருகின்றார் இத்திணை பன்னிரண்டு துறைகளையுடையதாகும்.

## தானைப் படைநிலை

இப்பன்னிரண்டு துறைகளில் தானைப் படைநிலை என்னும் துறை சங்க இலக்கியத்திலும் பாரதிதாசன் பாடலிலும் பொருள் ஒற்றுமைப்படப் புனையப்படுகினறது. பகைவரை அஞ்சச் செய்யும் ஆள்படை தானையாகும். இத்தகைய படை சங்க இலக்கியத்தில காணப்படுதல் உணரலாம்.

"நெடுவயி னொளிறு" [33] எனத் தொடங்கும் பாடலில், "அகன்ற வானில் மின்னல் பரந்துள்ளதைப் போலப் புலித்தோலால் செய்யப்பட்ட உறையில் உள்ள வாளை விரும்பும் வீரர்கள் தங்கள் வலக்கையில் ஏந்தி அரிய அரண்களை அழிக்கும் படையும் கடத்தற்கரிய பகைவரை வெற்றி கொள்ளும் பெரிய படைகளுக்குத் தலைவன்" எனச் சுட்டப்பட்டுள்ளது.

பின்வரும் பாரதிதாசன் பாடல் பகுதியில் தானைப் படைநிலை என்ற துறை அமைந்து வந்துள்ளமை உணரலாம்.

"வடக்கிருந்த வாயிலிலே கதிரை வேலன்
வந்தெதிர்த்த பெரும்படைமேற் படையை ஏவி
அடுத்து நின்ற வேழமன்னன் வாள்வீச் சுக்கள்
அத்தனைக்கும் விடைகூறித் தன்வீச் சுக்கும்
கொடுத்தவிடை பெற்றபடி இருந்தான்! சாவு
கொற்றவர்கள் இருவர் பால் மாறி மாறி
நொடிக்குநொடி நெருங்கிற்று! வெற்றி மங்கை
நூறுமுறை ஏமாந்தாள் ஆளைத்தேடி"[34]

32. தொல். பொருள். இளம். புற. 11
33. புறம். 88
34. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள். ப. 312

கதிர்நாட்டரசனை வேழநாட்டரசன் எதிர்த்துப் போர் செய்தான அப்போரின கதிர்நாட்டரசன் வேழநாட்டரசனின் பெரும்படையை எதிர்த்துத் தன் படையை ஏவுகின்றான என்னும் கருத்து அமைந்துள்ளது.

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள தானைப் படை பற்றிய செய்திகளும் பாரதிதாசன், பாடல்களில் காணப்படும் தானைப் படைச் செய்திகளும் ஒப்புமையாகக் காணப்படுகின்றன.

**வாகை**

வாகைத் திணை பற்றித் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். அத்திணைக கூறுகள் பாரதிதாசன் பாடலிலும் சங்க இலக்கியத்திலும் பயின்று வருகின்றன.

வலியும் வருத்தமும் இன்றி, இயல்பாகிய ஒழுக்கத்தானே. தம்முடைய கூறுபாடுகளை, இருவகைப்பட மிகுதிப்படுத்தல் என்று கூறுவர்.[35] இவ்வாகை பதினெட்டுத துறைகளை உள்ளடக்கியதாகும். இப்பதினெட்டுத் துறைகளில் அரும்பகை தாங்கும ஆற்றல் என்னும் துறை சங்க இலக்கியத்திலும் பாரதிதாசன் பாடலிலும் பொருள ஒற்றுமைப்படப் புனையப்படுகின்றது.

## அரும்பகை தாங்கும் ஆற்றல்

போரில் வெல்லுதற்கு அரிய பகைவரைத் தருக்கும் ஆற்றலாகும். இதுபற்றிய கருத்தினைச் சங்க இலக்கியப் பாடலில் காணலாம். "கெடுக சிந்தை"[36] என்று தொடங்கிவரும சங்கப் பாடலில்,

"இவளது சிந்தை கெடுக. இவளது துணிவு அச்சம் தரக்கூடியதாக உள்ளது. இவள் மறக்குடியில் பிறந்த மகளிர் என்பது தகும். முன்னாளில் நடந்த போரில இவள் தந்தை யானை கொன்று தானும் இறந்தான். அதன் பிறகு நடந்த போரில இவளது கணவன் பெரிய நிரைகளைக் கவர்ந்து செல்லும் பகைவருடன் நின்று போர் செய்து இறந்தான். இன்று ஒலிக்கும் போர்ப்பறை கேட்டுத் தன் விருப்பத்தோடு ஒரே மகனின் கையில் வேல் கொடுத்துத் தனக்கு இவனில்லாது போயினும் போர்க்களம் நோக்கிச் செல்வதற்குரியன் என்று அனுப்பி வைக்கிறாள்" என்ற கருத்து விளக்கப்பட்டுள்ளது.

35. தொல். பொருள் இளம். புற 19
36. புறம். 279

இதனை உணர்த்தும் பாரதிதாசன் பாடலில பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கவை

"அருந்திய பால்முலை
அறுத் தெறிநத தாய்
அறத்துணை பூண்ட
மறத் தமிழ் நாடு !
வருபகைக் களிற்றின் நெற்றியிற் புதைத்தவேல
வாங்காது வந்ததன் தீங்கான மைந்தன்.
தெரிந்திருக்கும் தமிழர்தம் வீரம்
இடையிலே மறத் திருக்கவும் கூடும்
சரிந்த பகைவர்களால் தமிழகம் தீண்டுமுன்
தாய்மார் மக்களை அனுப்புக தாக்கவே".

பாரதிதாசனும் இவ்வாறே தன்னுடைய பாடலில் முதிய மறககுடியில் பிறந்த மடவாள் மறக்குடியில் பிறந்த முன்னோர் போரில் இறந்துவிடடனர் என நடுகல்லைக் காட்டிக் கையில் வேல் கொடுத்துத் தன் புதல்வனைப் "போர்க்குச் செல்க" என அனுப்பி வைத்தாள்.[37]

மேற்கூறிய இரு பாடல்களிலும் வெல்லுவதற்கு அரிய பகைவரைத் தடுக்கும் ஆற்றல் மிக்க மறக்குடியில் பிறந்த பெண்ணின் வீர உணர்வு சுட்டப்பட்டுள்ளது.

## காஞ்சி

காஞ்சித் திணை பற்றித் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். அத்திணைக் கூறுகள் பாரதிதாசன் பாடல்களிலும் சங்க இலக்கியப் பாடல்களிலும் பயின்று வருகின்றன நிலையாமை உணர்த்துவது காஞ்சித் திணை என்பதனைத் தொல்காப்பியர்,

"பாங்கருஞ் சிறப்பின் பன்னெறி யானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே"[38]

என்று உணர்த்துவார்.

37. பாரதிதாசன், குயில் கிழமை இதழ். 2-12-58. ப. 16
38. தொல். பொருள். இளம். புற. 17

இவ்வுலகத்தில் வாழும் மனிதர்களின் இளமை நிலையற்றது. யாக்கை நிலையற்றது. செல்வம் நிலையற்றது என நிலையாமையைப் பற்றிக் கூறுவதே காஞ்சித் திணையாகும்.

## இன்னது பிழைப்பின் இதுவாகியர் எனத் துன்னரும் சிறப்பின் வஞ்சினம்

காஞ்சித்திணை இருபது துறைகளை உள்ளடக்கியதாகும். இவ்விருபது துறைகளில் இன்னது பிழைப்பின் இதுவாகியர் எனத் துன்னரும் சிறப்பின் வஞ்சினம் என்னும் துறை சங்க இலக்கியத்திலும் பாரதிதாசன் பாடலிலும் பொருள் ஒற்றுமைப்படப் புனையப்படுகின்றது.

போர் மறவன் போர்க்களத்தில் இன்னது (செய்யப் போகின்றேன் என முன்னரே சொல்லுதல்) செய்யத் தவிர்ந்தால் இவ்வாறு நடக்கட்டும் எனக் கூறும் அல்லது சூளுரைக்கும் சிறப்பினையுடையது வஞ்சின மொழி எனத் தொல்காப்பியம் கூறுகின்றது.

இத்தகைய வஞ்சின மொழி சங்க இலக்கியத்தில் காணப்படுதல் உணரலாம். "நகுதக் கனரே"[39] எனத் தொடங்கும் பாடலில், "மிகு வலிமைக்கு அஞ்சாமல் எதிர்த்துத் செய்யும் போரின்கண் அவர்களைச் சிதறுமாறு வெற்றி முரசத்தோடு வெற்றியை ஒருங்கே பெறவில்லையென்றால், என் குடைக்கீழ் வாழ்பவர்கள் தாங்கள் சென்றடையும் நிழல் இல்லாத கொடியன் எம்முடைய வேந்தனென்று கருதிக் கண்ணீரைப் பரப்பக் குடிமக்கள் பழிதூற்றும் கொடுங்கோலையுடையேனாகுக" எனச் சுட்டப்பட்டுள்ளது.

இதனையே பாரதிதாசனும்,

"தோளில்இலகு காஞ்சி யாளன், மறவர்படை
சூழக் குடைவிடுத்த பின்னே - "கதிர்
மேலைப் புறம்மறையும் முன்னே - தீயன்
மாளச்செய் வேன்அன்றி மற்றவர்க்கா ளாவேன்"
என்றனன் வஞ்சினம் என்னே!"[40]

என்று கூறுகின்றார்.

39. புறம். 72
40. பாரதிதாசன், தேனருவி, ப. 89

தோள்வலிமை கொண்ட காஞ்சி மறவன், "போரினகண பொழுது சாயும முன் அவர்களைத் தோற்கடிப்பேன். அப்படிச் செய்யவில்லையென்றால் மற்றவர்களின பழிச்சொல்லுக்கு ஆளாவேன் என்று வஞ்சினம் மொழிந்தான" எனச் சுட்டப்பட்டுள்ளது.

இவ்வாறாக மேற்கூறிய இருபாடல்களும் "வெற்றியடைந்தே தீருவேன். இல்லையென்றால் பிறர் பழிக்கு ஆளாவேன்" என உறுதிமொழியைக் கூறுவதாக அமைந்துள்ளன. அதாவது போர் மறவனின் பெருமித உணர்வு புலப்படுத்தப்படுகின்றது

## பாடாண் திணை

பாடப்படுபவரின் ஒழுகலாறுகளைப் புலவர்கள் புகழ்ந்து பாடுவது பாடாண திணையாகும் ஒரு குறிப்பிட்ட மன்னனுக்குரிய அல்லது தலைவனுக்குரிய கல்வி, வீரம், செல்வம், கொடை ஆகியவற்றின் சிறப்புக்கள் பேசப்படுவனவாகும். இதனைப் பற்றிய "எயின்முகஞ் சிதையம்"[41] என்று தொடங்கி வரும் சங்க இலக்கியப் பாடலில், "பகைவரின மதிலிடம் அழியுமாறு ஏவலை உடையதனால் நாட்டுக்குக் காவலைத் தந்த தொடி அணிந்த மருப்பினைக் கொண்ட யானையையும் சிவந்த பிடரியினையுடைய குதிரைப் படையையும் பொன்னால் செய்த கழலையும் வேலைப் பாடமைந்த கண்ணியையும் அணிந்த சேர மன்னனே! பரிசு பெறும் மக்களுக்குச் செல்வததைத் தருபவன்" என்ற கருத்து விளக்கப்பட்டுள்ளது.

இது பாடாண் திணை வகையைச் சார்ந்ததாகும்.

பாரதிதாசன் பாடலில் இடம்பெறும் பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கவை

"பழநாள்பாண் டியன்உன்றன் மூதாதைக்குப்
பரிசளித்தான் இந்நாட்டை ! அதைக்குறிக்கும்
முழுநீளப் பட்டயமும் உடைபூண் வாளும்
மூடியஅப் பேழையும்போ யிற்றே அந்தோ!"[42]

சங்க இலக்கியப் பாடலில் சேர மன்னனின வீரம், கொடைச் சிறப்புச சுட்டப்பட்டுள்ளன. அதைப் போலவே பாரதிதாசன் பாடலிலும் பாண்டிய மன்னன், (கதிர்நாட்டு மன்னனின்) மூதாதையர்களுக்குப் பேழையைப் பரிசளித்த கொடைச் சிறப்பும் அதனை வென்ற முழு நீளப் பட்டயம், உடைபூண் வாள் ஆகியனவற்றைக் கொணட பேழை என்னும் வீரச்சிறப்பும் ஆகிய பாடாண் திணைக் கூறுகள் அமைந்துள்ளன.

41. பதிற். 38 - 5 - 9
42. பாரதிதாசன், பாணடியன் பரிசு, ப. 12

# அக மெய்ப்பாடுகள்

அகப் பொருளுக்கெனத் தொல்காப்பியர் கூறியுள்ள மெய்ப்பாடுகளுள் சில, சங்க இலக்கியப் பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் பயின்று வந்துள்ளன.

## அகப்பொருள் சார்ந்த ஆறாவது மெய்ப்பாட்டு வகை

அகப்பொருள் சார்ந்த ஆறாவது மெய்ப்பாட்டு வகைகளுள் இறுதியாக உரைக்கப்பட்டதே கையறவு உரைத்தல் என்பதாகும்.

## கையறவு உரைத்தல்

தொல்காப்பியர், " புறஞ்செயச் சிதைத்தல் " எனத் தொடங்கி வரும நூற்பாவில் கூறப்பட்டுள்ள மெய்ப்பாடுகளுள் ஒன்று கையறவு உரைத்தலாகும்.

காதலின் நிலையை எடுத்துரைக்கும் பொழுது தங்களின் செயலற்ற தன்மையைச் சொல்லுதலாகும். சங்க இலககியத்தில்,

> " இன்றை யளவை சென்றைக் கென்றி
> கையுங் காலும் ஓய்வன அழுங்கத்
> தீயுறு தளிரின் நடுங்கி
> யாவதும் இலையான் செயற்குரி யதுவே"[43]

> "கையற வந்த தைவரல் ஊதையொடு
> இன்னா உறையுட் டாகும்"[44]

என்னும் பாடலடிகளின் மூலம் இதனை உணரலாம்.

"கையுங் காலும் ஓய்வன அழுங்க" என்றும், "கையற வந்த தைவரல் ஊதை" என்றும் வந்துள்ள தொடர்கள் கையறவுரைத்தலைக் காட்டுவனவாகும்.

43. குறு. 383
44. மேலது, 55 : 3-4

பாரதிதாசனின்,

> "தேய்ந்த புரிககயி றாயிறறென் உளளம் '
> ஏய்ந்த யானை இப்புறம் ஒருமுனை இழுகக
> இன்னும் ஒன்று மறுமுனை இழுககத தறியில்
> தேய்ந்த புரிக்கயி றாயிற்றென உள்ளம்"
>
> "சேயிழை வருந்துவாள் போ போ" - "பொருள்
> தேடவந் தாய்நீ இவ்வழி வா வா" -
> ஆயஇரு கொள்கை இருபுறம் இழுக்க
> அடையா இன்னல் அடைவத னாலே
> தேய்ந்த புரிக்கயி றாயிற்றென் உள்ளம்"[45]

என்னும் பாடலடிகள் கருதத்தக்கன. சங்க இலக்கியப்பாடலில் கூறியவாறே, செயலறற நிலை எடுத்துரைக்கப்பட்டுள்ளன. கயிற்றின் செயல்பாடு ஒரு புறமிருந்தால் பயன் கிடைக்கும இருமுனையிலும் இழுபட்டால் கயிறானது நைந்துவிடுவதோடு செயல்பாட்டினால் பயனும் இருக்காது. அதுபோலவே, தலைவனது மனதில் (எண்ணத்தில்) ஒருபுறம் தலைவியினது நினைவும் மறுபுறம் பொருளினது நினைவும் இருந்து கொண்டு மாறிமாறி வருத்துவதால அவன் அடையத் தகாத இன்னலுற்றுச் (செயலற்றுப் போகும்படி) செயலினைச் செய்ய இயலாத மனநிலையில் மிக வருந்தினான்

## இன்பத்தை வெறுத்தல் முதலாகக் கூறப்பட்ட மெய்ப்பாடுகள்

பிரிவு வேளையில் தோன்றும் மெய்ப்பாடுகளாகத் தொல்காப்பியர் "இன்பத்தை வெறுத்தல்" எனத் தொடங்கி வரும் நூற்பாவில் கூறப்பட்டுள்ள மெய்ப்பாடுகளுள் இன்பத்தை வெறுத்தல், பசியட நிற்றல், துன்பத்துப் புலம்பல், பசலை பாய்தல் ஆகிய நானகும அமைந்து வருவனவாகும்.




45. திருவாசகன், ஆ., பாரதிதாசன கவிதைகளா, ப. 1061

## இன்பத்தை வெறுத்தல்:

காதல் காரணமாகத் தம்மை ஒப்பனை செய்து கொள்வதையும் நிலவு, தென்றல் போல்வனவற்றையும் வெறுத்தலாகும். இம்மெய்ப்பாடு மனம் அழிந்த நிலையில தோன்றும் மெய்ப்பாடுகளில் முதலாவதாக வருவதாகும்.

சங்க இலக்கியத்தில்,

"பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்
விளையா(டு) ஆயமொ(டு) அயர்வோள்"[46]

என வருமடிகள் கருதத்தக்கவை. பிரிவு வேளையில், தலைவி பாலுண்ணாமையும் பந்து விளையாடாமையும் இன்பத்தை வெறுத்தலால் என்று உணரலாம்.

பாரதிதாசனின்,

'எனக்கிதுதான் நிலவா, சுடு நெருப்பா - அவன்
என்னைக் கூடி இருக்கையிலே
அழகும் குளிரும் கலப்பா!
-(எனக்கிதுதான் நிலவா!)

இனித்திருக்கும் பழமா இது பாலா - அவை
எட்டி என்றால் அவனில்லாத தாலா!
நினைத் தொழுதேன் உயிரிருக்கும் போதே - என்
நேயனைப் போய் அழைத்து வாடி மாதே.
-(எனக்கிதுதான் நிலவா!)

மணக்கும் முல்லைக் கொடியா பிணநெடியா - அவன்
வராவிட்டால் இவை எல்லாம் இப்படியா
தணலில் போட்ட புழுவாய்த் துடித்தேனே - என்
தமிழவேளை அழைத்து வாடி மானே! "[47]
-(எனக்கிதுதான் நிலவா!)

46. குறு. 396 : 1-2
47. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 429

பிரிவு வேளையில், நிலவைச் சுடு நெருப்பாகவும் பழத்தையும் பாலையும எட்டியாகவும் முல்லைக்கொடியைப் பிண நெடியாகவும் கருதுதல் இன்பத்தை வெறுத்தலால என உணரலாம்.

## துன்பத்துப் புலம்பல்

தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாமல் அத்துன்பம தனக்குரியது என நினைத்துப் புலம்புதலாகும் . இம்மெய்ப்பாடு மனம் அழிந்த நிலையில் தோனறும இருபது மெய்ப்பாடுகளுள் ஒன்றாகும் . பின்வரும் பாடலடிகள் கருதத்தககவை.

"கோடீர் இலங்குவளை ஞெகிழ **நாடொறும்**
**பாடில கலிழும் கண்ணொடு புலம்பி**
ஈங்கிவண் உறைதலும் உய்குவம்"[48]

"இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்
**புன்கண் மாலையும் புலம்பும்**
இன்றுகொல் தோழியவர் சென்ற நாட்டே"[49]

"இலங்குவளை ஞெகிழச சாஅய்ப்
**புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே**"[50]

"பாடில கலிழும் கண்ணொடு புலம்பி" என்றும், "புன்கண் மாலையும புலம்பும்" என்றும், "புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே" எனறும் துன்பவேளையில தலைவியின் புலம்பல் குறிக்கப்பட்டமை உணரலாம். பாரதிதாசன் பாடல்களில் பின்வரும அடிகள் கருதத்தக்கவை

"அன்றலர்ந்த செந்தாமரை - இவ்
வகிலமே புகழ்ந்திடும் அன்னவன் முகம் (அன்)
நின்றிருந்தேன் பின்புறமாய்
வந்து சடையை இழுத்தான் - என்
கன்னத்தையும் கிள்ளியே தன்
கைக்கு முத்தம் கொடுத்தான்
(அன்)

48. குறு. 11 . 1 - 3
49. மேலது, 46 : 5 - 7
50. மேலது, 50 : 4 - 5




(என்) மனம் எனப்படும் மணி மேடையில்

குடியேறிய மன்னன் - என்

வாழ்வெனப்படும் புறம் போக்கை

வளமே புரி வானோ!

கனி எனப்படும் என் தேனிதழ்

இனிதே சுவைப்பானோ?

அவன் - கலகல வெனத் தமிழ் பேசிட

வருவானோ அன்னவன் முகம்

(அன்)

கோடையிற் புனல் ஓடையைப் போல்

குளிரக் குளிரத் தழுவி - இக்

கோதை படும் வாதை எலாம்

குணமே புரி வானோ

வீடு தோறும் மாத ரெலாம்

விளக் கேற்றிடும் மாலை

வித வித விதக் கலவி செய்ய

வாரானோ அன்னவன் முகம்

(அன்)"[51]

பிரிவுவேளையில் தோன்றிய துன்பத்தில் தலைவி புலம்பியுரைத்தமை பாடலில் புலனாதல் உணரலாம்.

## பசியட நிற்றல்

களவிற்கும் கற்பிற்கும் உரிய மெய்ப்பாடுகளுள் இன்பத்தை வெறுத்தல் முதல் வரும் இருபது மெய்ப்பாடுகளுள் பசியட நிற்றல் என்பது பசி வருத்தவும் அதற்கு வருந்தாது உணவு கொள்ள மறுத்தலாகும். இதனை உணர்த்தும் சங்க இலக்கியப் பாடல் பின்வருமாறு:

51. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 997

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
துறைபடி யம்பி யகமனை யீனுந்
**தண்ணந் துறைவ னல்கி**
னொண்ணுத லரிவை பாலா ரும்மே"[52]

குளிர்ந்த நீர்த்துறையையுடைய தலைவன் தலைவிக்கு அருள் செய்தால இவள் வாழ்வாள் என்னும்போது தலைவனைத் தவிர வேறெதனையும தலைவி நினையாள என்பதனை உணரலாம்.

இதனைப் பற்றி உணர்த்தும் பாரதிதாசன் பாடலடிகள் பின்வருமாறு.

"உண்ணும் போதும்
உயிர்க்கும் போதும்
காதலை யன்றி
ஒன்றறி யேன் ;
பண்ணும் தொழிலில்
பாட்டில் காதல்
மன்னவ னன்றி
வேறறி யேன்"[53]

உண்ணும் போதும் காதலையன்றி ஒன்றறியேன் என்பதால் பசி தோன்றாமையும் காதலே தோன்றிட ஓங்கி நிற்றலும் உணரலாம்.

## பசலை பாய்தல்

இது காதல் காரணமாகப் பிரிவுவேளையில் உடம்பில் தோன்றும மாறுபாடாகும். இது பிரிவுக்காலத்து மெய்பபாடுகளுள் ஒன்றாகும்.

தலைவனைப் பிரிந்த தலைவியின் நெற்றி ஒளி இழந்தும் நறுந்தோள்கள் மெலிந்தும் காணப்பட்டதென்பதனைப் பின்வரும் சங்க இலக்கியப் பாடலடிகளால் உணரலாம்.

52.. ஐங். 168
53. பாரதிதாசன், காதல் பாடல்கள, ப. 60

"... ... ... நுதைவற்குப்
பயந்தநுத லழியச் சாஅய்
................. ...........................................
நயந்த நெஞ்ச நோய்ப்பா லஃதே"[54]

"அம்ம வாழி தோழி நாளு
நன்னுதல் பசப்பவு நறுந்தோ ணெகிழவு
மாற்றலம்"[55]

பிரிவு வேளையில் தலைவிக்குப் பசலை பாய்ந்தமை "பயநது நுதலழியச சாஅய்" என்றும் "நன்னுதல் பசப்பவும் நறுந்தோள் நெகிழவும ஆற்றலம்" எனறும வந்துள்ளமையால் உணரலாம். பின்வரும் பாரதிதாசன் பாடலடிகள் கருதத்தக்கன.

"இசையா யோதோழி? கொடும்
பசலை படர்ந்த என்முகம் தனைப
பார்த்திருநதும் அவனிடம் சொல்ல இசையா யோ தோழி?"[56]

ஈண்டு, "கொடும் பசலை படர்ந்த என்முகம்" என வந்துளளமையால தலைவி பசலை பாய்ந்தமை உணரலாம்.

## களவியல் சார்ந்த மெய்ப்பாட்டு வகை

### காதற் கைம்மிகல்

களவொழுக்க உணர்வுகள் ஒன்பது. சாக்காடு அவற்றில ஒன்றாகும் களவுக்காலக் காதலினால் சாதல் நினைவு அதாவது பிரிவின்பொழுது உடலைவிட்டு உயிர்பிரியும் நிலையை அடைவதைப் போன்ற உணர்வு என இதனைக் கொள்ளலாம்.

"நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு
உடனுயிர் போகுக தில்ல"[57]

54. ஐங். 161 2 - 4
55. மேலது, 227 1 - 3
56. திருவாசகன், ஆ., பாரதிதாசன கவிதைகள ப.1060
57. ஐங். 451 2 - 4

"தூஉந் துவலைத் துயர்கூர் வாடையும்
வாரார் போல்வர்நங் காதலர்
**வாழேன் போல்வல் தோழி யானே**"[58]

பிரிவு வேளையில், "உடனுயிர் போகுக தில்ல" என்றும் "வாழேன் போல்வல்" என்றும் தலைவிக்கு இறப்புப் பற்றிய எண்ணம் தோன்றியமை குறிக்கப்பட்டமையின் சாக்காடு எனலாம்.

பாரதிதாசன் பாடலில்,

"வாழு மாந்தர்க்கு வான்மழை போன்றது
மணாளர்வந் தெனக்குத் தருவதோர் இன்பம்!
தோழியே அவரின்றி நான்படும் தொல்லை
சொல்லிக் காட்டல் இலேசில் இல்லை
சிறுகொம்பு பெரும்பழம்
தாங்குவது போலேஎன்
சிறியஉயிர் பெருங்காதல்
தாங்குவ தாலே
மறத்தமிழன் விரைவில்
வராவிடில் உடலில்
**மணக்கென்று முறியும் என்**
**ஆவிமண் மேலே**
பிறர்செய்த தீமையை
மறந்திடுதல், மறதி
பெறஇய லாததை
மறப்பதும், மறதி
**இறந்து போவானே**
யான்போக வேண்டுமே
என்பதில் மறதியா?
**அதுஎன்றன் இறுதி**"[59]

58. குறு. 103 : 4 – 6
59. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 105

பாரதிதாசன் பாடலிலும் பிரிவு வேளையில் "மளுக்கென்று முறியும் என் ஆவி மண் மேலே" என்றும், "அது என்றன் இறுதி" என்றும இறப்புப் பற்றிய எண்ணம தலைவிக்குத் தோன்றியமை குறிக்கப்பட்டமையின் சாக்காடு பயின்று வந்துள்ளமை உணரலாம்.

காதற் கைம்மிகல் என்ற மெய்ப்பாட்டில் சாக்காடு தொடர்பான கருத்துககள நிகழும் எனலாம்.

## கற்பியல் சார்ந்த மெய்ப்பாட்டு வகை

தெய்வம் அஞ்சல் முதலாகத் தொல்காப்பியர் கூறியுள்ள கற்பியல் சார்நத பத்து மெய்ப்பாடுகளுள் ஒன்பதாவதாக அமைந்து வருவதே இப்பிரிவாற்றாமை என்பதாகும்.

## பிரிவாற்றாமை

காதல் காரணமாகத் தோன்றும் பிரிவினைப் பொறுத்துக் கொள்ளாத தன்மையே பிரிவாற்றாமை ஆகும்.

சங்க இலக்கியத்தில்,

"வெல்போர்க் குருசினீ வியன்சுர னிறப்பிற்
பல்கா ழல்கு லவ்வரி வாடக்
**குழலினு மினைகுவள் பெரிதே**
விழவொலி கூந்தன் மாஅ யோளே"[60]

"அம்ம வாழி தோழி சிறியிலை
நெல்லி நீடிய கல்காய் கடத்திடைப்
பேதை நெஞ்சம் பின்செலச் சென்றோர
**கல்லினும் வலியர் மன்ற**
**பல்லித ழுண்க ணழப்பிரிந் தோரே**".[61]

தலைவன் தலைவியைப் பிரியின் "குழலினும் இனைகுவள்" என்றும் தலைவி அழுமாறு பிரிந்த தலைவன் மனம் கல்லினும் வலியதாகும் என்றும் தலைவியின

60. ஐங். 306 . 1-4
61. மேலது. 334 : 1 - 5

பிரிவாற்றாமை விளக்கப்பட்டமை உணரலாம். பின்வரும் பாரதிதாசன் பாடலடிகள் கருதத்தக்கன.

“பாண்டியன் என் சொல்லைத் தாண்டிப் போனாண்டி
பாண்டியன் என் சொல்லை -
ஈண்டு மயலில் நான் தூண்டிலில் மீனாய்
மாண்டிட விடுத்தே வேண்டிட வேண்டிட.

பாண்டியன என சொல்லை ..... .

தமிழிசைப் பேச்சும், செங்கோ லோச்சும,
தடக்கை வீச்சும், காதலைப் பாய்ச்சும்,
இமைப்பினில் ஓடி அவனைத் தேடி
என்னகம் நாடி வாடி போடி

பாண்டியன் என சொல்லை ............... .

**பிரிந்திடும் போது நெஞ்சு பொறாது**
**வரும்போது பேசா திருக்க ஒண்ணாது**
**எரிந்திடும் சினத்தின் எதிர்வரு வானேல்**
**என்னுயிர் தாவிடும் அன்னவன்மேல்** ”[62]

பாண்டியன் என் சொல்லை ........

மேற்கூறிய இரு பாடல்களிலும் தலைவியைப பிரிந்த தலைவன துன்பத்தின் காரணமாக வருந்திக் கூறுகிறான். அதாவது சங்க இலககியப்பாடலில் தலைவியைத் தலைவன் மிகுதியாக வருந்தவிட்டமையால் கல்லினும் வலிய நெஞ்சினையுடையவன் என்றும் கூறப்பட்டுள்ளது. பாரதிதாசன் பாடலிலும் அவனைப பிரிந்த “நெஞ்சு பொறாது” என்பதையும் நெஞ்சம் துயர் தாங்காது என்பதையும் எரிகின்ற நெருப்பைப் போன்ற சினத்தோடு தலைவி கூறுகிறாள். அவ்வாறாகத் துன்பத்தில் சினம் பற்றிய நிலை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

62. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப 240

# தொனி

இலக்கியத்திற்குப் பயன்பட்டு வரும் கோட்பாடுகளுள் குறிப்புப் பொருள் கோட்பாடு ஒன்றாகும். இலக்கியத்தில் வெளிப்படையாக ஒரு பொருள் கூறப்படுவதைக காட்டிலும் குறிப்பாகக் கூறப்படுமானால அதனால் தோன்றும் இலக்கிய அழகு இலக்கியத்தைப் பயன்துய்ப்போருக்கு மிகுந்த இன்பம் தருவதாக அமையும். இதனைத தொல்காப்பியர்,

> "அந்தமில் சிறப்பின் ஆகிய இன்பம்
> தன்வயின் வருதலும் வகுத்த பண்பே"[63]

என்று விளக்குவார். இக்குறிப்புப் பொருளை ஆராயும் கோட்பாடு தொனிக் கோட்பாடாகும். சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் குறிப்புப் பொருள் ஆங்காங்கே ஏற்ற இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்நிலையில் இவ்விரு இலக்கியங்களிலும் இத்தொனிக் கோட்பாட்டைப் பொருத்தி ஆராய்வது இயலுவதாகும்.

தொனி என்பது வடமொழியில் குறிப்புப் பொருளைக் குறிக்கும். இடுகுறித தன்மையால் தோன்றும் சொல்லோ பொருளோ முதன்மையிடம் பெறாமல் கருதிய அல்லது உள்ளுறுத்த வேறு பொருளைக் குறிப்பின் தோற்றுவிக்கும் அச்செய்யுளே தொனி ஆகும்.[64]

## தொனியின் தோற்றமும் வளர்ச்சியும்

தொடக்க காலத்திலிருந்தே பண்டைய வடமொழி இலக்கியங்களில் குறிப்புப் பொருள் கூறுகள் நிறைந்திருந்தன. இவை யாவும் பகுத்து உணரப்படாமலேயே போற்றப்பட்டு வந்தன; பழங்கால அறிஞர்களால் சுவைக்கப்பட்டன. வடமொழி இலக்கியத்தைத் திறனாய்வு செய்த முற்காலத் திறனாய்வாளர்களால் உண்மையான இலக்கிய அழகு எங்கிருக்கிறது எனத் திட்டவட்டமாகக் குறித்துக் காட்ட இயலவில்லை. தண்டி, பாமகர், வாமனர்,

63. தொல். பொருள. இளம். பொருளி. 46
64. That kind of poetry, wherein the (conventional) meaning renders itself secondary on the (conventional) word renders its meaning secondary and suggests the (intended on) implied meaning, is designated by the learned as DHVANI or 'Suggestive Poetry' (Anandha Vardhara, Dhvanyaloka, K.Krishnamoorthy (Trans) - 1: 13

உருத்திரடா் மற்றும் பல சிறந்த அறிஞர்கள் மேற்காட்டிய சிக்கலை ஓரளவு நெருங்கியுள்ளனா, என்றாலும், அவா்கள் உண்மையான கருத்தைத தவறவிட்டுவிட்டனா் என்று கூறலாம கி.பி ஒன்பதாம் நூற்றாண்டின் நடுவிலேயே பாட்டின் உண்மையான அழகைப் பற்றிய கொள்கை விளக்கம் பெற்றது. வடமொழி இலக்கிய வரலாற்றில் முதன் முறையாகக காசுமீரத்திலிருந்து வந்த ஆனந்தவர்த்தனராலே அக்கொள்கை கண்டறியப்பட்டது தொனியாலோகம் என்னும் நூலில் அவா அதுபற்றி விரிவாகப் பேசுகிறார். அக்கொள்கையை விளக்கி நிலை நிறுத்திடவே அவா் நூல் எழுதினாா். வடமொழி இலககிய உலகெங்கும அவா் நூலும் கொள்கையும். ஒரு பரபரப்பை ஏற்படுத்தின. பல சிறநத அறிஞாகள அவரது நூலை உண்மையான ஆர்வத்தோடு படித்ததோடு மட்டும் அல்லாமல், அவா கொள்கையைப் போற்றி ஏற்றுக் கொண்டனா். மற்றும் சிலா் அதனை மறுத்து எண்ணி நகையாடினா்.[65]

தொனி மறுப்பாளா்களில் குறிப்பிடத்தகுந்தவா்கள் மூன்று வகையினா்

1. இலக்கியத்தில் தொனி என்னும் கொள்கை இல்லை என்று சொல்லி மறுப்போர்.

2. இலக்கியத்தில் முன்னரே அறியப்பட்டிருந்த கொளகையுளளே அதனை அடக்க முயன்றோா்.

3. சொல்லிற்கு உள்ள இலக்கணை என்னும் சார்புப் பொருளோடு அதனை இயைபுபடுத்த முயன்றோா்.

ஆனந்தவா்த்தனா் இவ்வகை மறுப்பாளா்களை அறிந்திருந்ததால, மேற்காட்டிய எதிா்ப்புகளை எதிா்பாா்த்திருந்திருக்கலாம். கொள்கையைப் பற்றிக் கூறும்பொழுது தொனிக்கொள்கை அவரது புதிய கண்டுபிடிப்பு என்றும், இலக்கியததில் பயின்று வநத நிலையில் அது பழைமையான கூறே என்றும் அவா் தனது நூலில் காட்ட முயலுகிறாா.[66]

அடுத்ததாக அபிநவகுப்தா் என்ற சிறந்த திறனாயவாளரும், மெய்ப்பொருள அறிஞருமானவா், தொனியாலோகத்திற்கு விளக்கவுரை எழுதினாா். இவரது விளக்கவுரை தொனிக்கொள்கையை நன்கு வேரூன்றி வளரச் செய்தது. அபிநவகுப்தருக்குப் பின்னரும தொனிக் கொள்கையை ஏற்றுக் கொள்ளத் தயங்கிய திறனாய்வாளா்கள் சிலா் இருந்தனா் ஆனால் முன்னதாகவே அக்கொள்கை கற்போா்களிடையேயும திறனாய்வாளா்களிடையேயும நிலை பெற்று விட்டது.[67]

65 G Sundaramoorthy. Early Literary Theories in Tamil, P 117
66. மேலது, ப. 118
67. மேலது, பக். 117 – 118

## தொனியின் வகைகள்

தொனியை மூன்று வகைப்படுத்துவர்[68] அவையாவன, பொருள்தொனி (vastu dhvani) அணித்தொனி (allankara dhvani) இரசத்தொனி (rasa dhvani)

## பொருள்தொனி

அவற்றுள் பொருள்தொனி பலவகைப்படினும் குறிப்பிடத்தக்க நான்கு எடுதது காட்டப்படுகின்றன.[69] அவையாவன·

1. இடுகுறிப்பொருள் சிலவிடத்து உடன்பாட்டு வடிவாக இருககக் குறிப்புப பொருள் எதிர்மறையாகும் தன்மை

2. இடுகுறிப்பொருள் எதிர்மறை வடிவில் இருக்கக் குறிப்புப பொருள் உடன்பாடாகும் தன்மை.

3. இடுகுறிப் பொருள் உடன்பாட்டு வடிவில் இருக்கக் குறிப்புப்பொருள் எதிர்மறையும் இல்லாமல் உடன்பாடும் இல்லாமல் அமைவது.

4. இடுகுறிப்பொருள் எதிர்மறை வடிவாயிருக்கக் குறிப்புப்பொருள் உடன்பாடும இல்லாமல் எதிர்மறையும் இல்லாமல் இருத்தல்.

இவை, சங்க இலக்கியப் பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும பொருந்தி வந்துள்ளன.

## 1. இடுகுறிப்பொருள் சிலவிடத்து உடன்பாட்டு வடிவாக இருக்கக் குறிப்புப் பொருள் எதிர்மறையாகும் தன்மை:

சங்க இலக்கியத்தில் இப்பொருள் தொனிவகை பயின்று வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பகுதியைக் கருதலாம்.

68. தொனியாலோகம், கா. 4 - இன் விருத்தி
69. மேலது

"இப்பெரிய நிலனை அளக்கும் மரக்காலாகக் கொண்டு ஏழு மரக்கால வரையில் அளக்கத்தக்க பெருஞ்செல்வம் பெறுவதாயினும், காதலியின் கண்களில் இன்ப நோக்கத்தால் பிணிக்கப்பட்டமையின் விரும்பேன் என்று கூறுவோன், "ஏனைய ஆகுக வாழிய பொருளே"[70] என்றனன்.

பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினை நெருங்கித் தலைவன் செலவழுங்கியது என்பது பாடல் துறையாகும்.

ஈங்குத் தலைவியின் புணர்வை நச்சிப் பொருள்வயிற் பிரியாத தலைவனிடம் பொருள் வாழ்தல் இல்லையாகவே "வாழிய பொருளே" என்றமை, "பொருளே! என்னிடத்தில் நீ வாழாய்" என்ற எதிர்மறைப் பொருளையே தருதலின், இது பொருள் தொனியாகும்.

"தென்னிலங்கை இராவணன்" எனத் தொடங்கும பாரதிதாசன் பாடலில், நெஞ்சிலுள்ள கொள்கையைச் செய்கையில் நிலைநாட்டும் இராவணன், தூரியன் ஆகியோரின உயர்வைப் பாடுவேன். அவர்களைக் கொல்ல முயலும் அங்கதன்தனை நான் கொல்வேன். தன் குலத்தவனைத் தூக்கிலிடும் தாம்புக்கயிறு போன்ற விபீடணன் இராமனைச் சேர்ந்தது இராமனின் நல்ல மனதிற்காகவாம். இன்பம் வேண்டிப் பிறர்வசமாவதை இந்தத் தேசம் விட்டொழிக்கும் வரை துன்பமின்றிச் சுகம் கிடைக்காதெனத் துரைகள் சேர்ந்த சபையின் கண் கூறுவேன். கதையில் தர்க்கம் பல புரிந்து உரிமையை விட்டுக் கொடுப்பதால், என்னை ஈன்ற நல்ல தாய் நாட்டினை நினைக்கும்தோறும் உள்ளம் வேகுதே. அன்பிருந்தால் நாட்டின் நலத்திலே ஆயிரம் கதைகளை ஏன் வளர்க்கின்றனர்.[71] என வரும் பகுதி கருதத்தக்கது.

ஈண்டு நாட்டின்மீது உண்மையான அன்பிருந்தால், ஆயிரம் கட்டுக் கதைகளை ஏன் வளர்க்கின்றனர் என்று இடுகுறிப் பொருள் உடன்பாட்டு வடிவாக இருக்கின்றது. அதாவது அன்பில்லாதவர்கள் வளர்க்கின்றனர் எனக் கூறுகின்றார். ஆனால், குறிப்புப்பொருள் நாட்டின் மீது அன்பிருப்பவர்கள் ஆயிரம் கதைகளை வளர்க்கக் கூடாது என்று எதிர்மறை வடிவில் அமையக் காணலாம்.

70. நற். 16 . 11
71. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், பக். 217–218

## 2. இடுகுறிப்பொருள் எதிர்மறை வடிவில் இருக்கக் குறிப்புப்பொருள் உடன்பாடாகும் தன்மை:

சங்க இலக்கியத்தில் இப்பொருள் தொனியின் பின்வரும் பகுதியைக் கருதலாம்.

"நம் காதலர் பிரிந்து செல்வாரல்லர். செல்லினும் தமக்குண்டாகிய காமநோய் பொறுப்பவரல்லர்; நின்னிடத்துப் பெரியதொரு விருப்பமும் அன்பும் உடையவர்; மிக்க மென்மையும் பொருந்தியவர்; பிரிந்த நம்மினும் இரங்குவர்"[72] இன்னோரன்ன சொல்லி ஆற்றுவிக்கிறாள்.

தலைவனது செலவுக்குறிப்பறிந்து ஆற்றாளாய தலைவிக்குத் தோழி சொல்லுவாள் என்பது பாடல் துறையாகும். ஈங்குச் "செல்வார் அல்லர்" என்று எதிர்மறையிற் சொல்லினும் அடுத்தடுத்துக் கூறியவற்றை நோக்கச் "செல்வர்" என்ற குறிப்பே தோன்றக் காணலாம். "பிரிந்த நம்மினும் இரங்குவர்" எனப் "பிரிந்த" எனுஞ்சொல் இறந்த காலத்துப் பெய்துரைத்தமையான் அக்குறிப்பு முற்ற உறுதிப்பட்டமை காணலாம்.

இவ்வாறு "செல்வாரல்லர்" என்று சொல்லிய இடுகுறிப் பொருள் எதிர்மறையாயிருக்கச் "செல்வார்" என்னும் குறிப்புப் பொருள் உடன்பாட்டு வடிவில் தோன்றவே இஃது இவ்வகையாகும்.

"முதுமாலை போதில் ......" எனத் தொடங்கும் பாரதிதாசன் பாடலில், தலைவன், "அல்லி மலர்ந்தது; நிலவும் வந்தது என்று பொதுமையைக் கொல்லாதே; கொஞ்சி விளையாட மறுப்புச் சொல்லாதே."

வெப்பம் விலகித்தென்றல் வீசுகின்றது. என்னாசையைத் தட்டாதே. தாவும் கையை விலக்கி என்னைத் திட்டாதே.

முல்லை கமழ்ந்துள்ளது. தனிமையில் அமிழ்து கொடு. அன்பை மறைத்து வன்மையான முகத்தைக் காட்டாதே.

நமக்கென்ன குறைச்சல்? நல்ல முதிய மாலைப் பொழுதில் தமிழ் உள்ளது. காதல் உள்ளது. உன்னைத் தழுவும் தோளும் மகிழ்ச்சி பொங்கித் துள்ளாதே"[73]

72 நற். 208
73. திருவாசகன்,ஆ., பாரதிதாசன் கவிதைகள் பக். 1450 - 1457

இங்கு "காதல் உள்ளது. உனனைத் தழுவும்தோறும் மகிழ்ச்சி பொங்கித் துள்ளாதே" என்னும் இடுகுறிப் பொருள் எதிர்மறை வடிவில் அமைந்திருக்கிறது ஈணடுக குறிப்புப் பொருள் தலைவன் தலைவியைத் தழுவுந்தோறும மகிழ்ச்சியோடிருக்கலாம என்னும் பொருள் தோன்றி "துள்ளுக" என்று துள்ளுதல் என்ற வினையின் உடன்பாட்டு வடிவே ஈண்டுக் கொள்ளற்குரிய தன்மை உணரலாம்.

## 3. இடுகுறிப்பொருள் உடன்பாட்டு வடிவில் இருக்கக் குறிப்புப்பொருள் எதிர்மறையும் இல்லாமல் உடன்பாடும் இல்லாமல் அமைவது:

சங்க இலக்கியத்தில் இப்பொருள தொனி பயின்று வந்துள்ளது எடுத்துக்காட்டாகப் பின்வரும் பகுதியைக் கருதலாம்.

"தோழீ! இப்பொழுது உன்னுடைய ஒளிகின்ற வளையல்களும் ஒளி மழுங்கிய நெற்றியும் மீண்டும் தமக்குரிய அழகு பொருந்தும் படியாகப் பொன்னாலாகிய தேரையுடைய தலைவன் உன்னை உடன்போக்கிலே அழைத்துச் செல்ல வந்துவிட்டான். ஆகையினால் நீ செவ்வரியையுடைய நினது அழகிய விழிகளைத் திறந்திடுக! நாம் உன்னுடைய அழகைக் கவர்ந்து கொண்ட பொல்லாத பசலையை எள்ளி இனி நகைத்திடுவோம்" [74]

இற்செறிப்பு முதலியவற்றால் களவொழுக்கத்திற்கு இடையூறும, வேற்றுவரைவு முதலியவற்றால் கற்புக்குத் தீங்கும் உண்டாகும் என்று கருதித் தலைவி உடன் போக்கைத் துணிந்தாளாகத் தலைவியைத் தமர் அறியாமல் உடன் போக்கக் கருதிய தோழி இவ்விடத்திற்கு இன்னபொழுது வருக என்று தலைவனுக்குக் கூறினாள். அவனும் அவ்வாறே அவ்விடத்திற்கு அந்தப் பொழுதிலே வந்தனன். அவன் வரவுகண்ட தோழி, மகிழ்ந்து வீட்டிலே பாயலில் கிடந்த தலைவியை எழுப்பித் தலைவனின் வரவு கூறியதாய்ப் பாடல் அமைகிறது.

இங்குப் 'பசலையை எள்ளி நகைத்திடுவோம்' என்னும் இடுகுறிப்பொருள் உடன்பாட்டு வடிவிலே அமைந்திருக்கிறது. ஈண்டுக் குறிப்புப் பொருள், தலைவி பசலை நீங்கித் தலைவனோடு பிரிவின்றி வாழலாம் என்பதே ஆகும். இந்நிலையில் இடுகுறிப்பொருளின் உடன்பாட்டு வடிவிற்கு ஒத்த உடன்பாட்டு வடிவமோ எதிர்மறை வடிவமோ குறிப்புப் பொருளில் காணப்படவில்லை. எனவே இவ்வகைத் தொனியாகும.

74. ஐங். 20

'மாலைப் பொழுதினிலே'[75] எனத் தொடங்கும் பாரதிதாசன் பாடலில் தலைவன இரவுக் குறியில் தலைவியைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளது.

"மாலைப் பொழுதில் தேனை வண்டு நுகரும்பொழுது சோலைககுள புகுந்தேன். அங்குச் சுந்தரி இல்லை. பாலைப் பழிக்கும் அளவிறகுத் தூய்மையாகப பேசும் வாலைக் குமரியவள் என்னுடைய பெருமைக்குரியவள். வாளை வென்ற கண்ணையுடையாள். வாளின் பாய்ந்த நெஞ்சுடையவள். அவளின் பாளைச் சிரிப்பில் மனதைப் பறிகொடுத்தேன். சோலையில் சுந்தரி எங்கேயும் இல்லை. காலை வலித்ததைத் தவிர என் கண் எதையும் காணவில்லை. அந்தியிருளைக் கண்டேன். என அன்பானவளைக் காணவில்லை. அந்த இருளில் வட்டநிலா வந்தது. குற்றமில்லாத முகம் கண்டேன். அவளின் நிலவுமுகம் கண்டேன். பாசம் மிகுந்தது. விண்ணில் பறந்தது காதல் உள்ளம்."

இங்கு " விண்ணில் பறந்தது " என்பது உடன்பாட்டு வடிவில் அமைந்திருக்கிறது. ஈண்டுக் குறிப்புப் பொருள், விண்ணில் பறந்தது என்றோ பறந்திலது என்றோ அமையாமல் காதல் உள்ளம் மகிழ்ந்தது இனிமேல் தலைவியோடு மகிழ்ந்திருக்கலாம். என்ற பொருளே குறிப்பாகத் தோன்றி வருதல் உணரலாம். இந்நிலையில் உடன்பாட்டு வடிவிற்கு ஒத்த உடன்பாட்டு வடிவமோ எதிர்மறை வடிவமோ குறிப்புப் பொருளில் காணப்படவில்லை. எனவே மேற்கூறிய தொனியாகும்.

## 4. இடுகுறிப்பொருள் எதிர்மறை வடிவாயிருக்கக் குறிப்புப் பொருள் உடன்பாடும் இல்லாமல் எதிர்மறையும் இல்லாமல் இருத்தல்.

சங்க இலக்கியத்தில் இப்பொருள் தொனி பயின்று வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பகுதியைக் கருதலாம்.

"என் அறிவும் உள்ளமும் அவரிடம் சென்று விட்டன. என் உடம்பு உள்ளில் ஒன்றும் இல்லையாய் நின்றது. இனி அவர் இங்கு வந்தாலும் என் நோய்க்கு மருந்தாகார். ஆதலின் அங்கேயே உறைவாராக. காமமும் நினைவும் நம்மை ஒறுத்தலாலே வருத்திய நோய்மலி வருத்தத்தை அவர் காணாதொழிவாராக."[76]

75. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 217
76. நற். 64 . 13. 'எமரே' என்பதற்கு "அவரே" என்னும் பாடவேறுபாடு கொளளபபட்டுள்ளது

பிரிவிடைத் தலைவியது வருத்தங்கண்டு தூதுவிடக் கருதிய தோழிக்குத் தலைவி சொல்லியது என்பது துறையாகும்.

ஈங்குத் தனது நோய்க்கு மருந்தாகாத காதலன் மீது தோன்றிய வெகுளியும் வெறுப்புமே, தலைவியைக் "காதலர் அங்கேயே உறைவாராக" எனவும், "நம் வருத்தத்தை அவர் காணாதொழிவாராக " எனவும் சொல்லச் செய்தனவல்லால தலைவன வரக்கூடாது என்றோ,தன்னைக் காணக்கூடாது என்றோ உண்மையில் அவள் மனத்தில கருதினாள அல்லள். எனவே " காணாதொழிவாராக " எனப் பொருள்படும் " காணன்மார் " என்று இடுகுறிப்பொருள் எதிர்மறையாய் இருக்கக் குறிப்புப்பொருள், எதிர்மறையுமின்றி, உடன்பாடுமின்றி இருத்தல் காணலாம்.

' வருவது நலமா? ' எனத் தொடங்கும் பாரதிதாசன் பாடல் தலைவன தலைவியைப் பிரியும் வேளையில் அவளிடம் கூறுவதாக அமைந்துள்ளது.

"மரமெல்லாம் தீப்பற்றி எரியக் கூடிய கானலில் வருவது நலமா? நினைக்கின்ற கண்ணும் நடுங்கும். கானலைப் பார்க்கின்ற கண்ணும் நடுங்கும். பருக்கைக் கற்களிலும் முள்ளிலும் உன் பஞ்சு போன்ற பாதங்கள் எப்படி நடக்கும்? வேர்விட்டு வளர்ந்த வேலின்கீழ் மிதமிஞ்சிய குளிரில் மான்வாழும் கார் காலத்திலா உன்னை மறப்பேன்? உண்மையாக வருவேன். அப்படி வராவிட்டால இறப்பேன். நீ வருவது நலமா?"[77]

தலைவியைத் தலைவன் மரமெல்லாம் தீப்பற்றி எரியக் கூடிய கானலில் கற்களும் முட்களும் நிறைந்த வழியில் பார்க்கின்ற கண்ணும் நடுஙகக்கூடிய அவ்வழியில் ' நீ வருவது நலமா? ' எனக் கூறும் பொழுது, ஈண்டு ' நீ வருவது நலமா ' என்பது கருதுதற்குரியது. இப்பாடலில், ' நீ வருவது நலமா? ' என்பது நீ வருவது நலமில்லை என இடுகுறிப்பொருள் பயந்து எதிர்மறையில் அமைந்துள்ளது.

'நீ வருவது நலமா ' என்பதன்மூலம் தலைவன் தலைவியை வா எனக் கூறக்கருதியிருப்பின் கானல் வழியைப் பற்றிக் கூறி இருக்க மாட்டான். எனவே கூறிய வெளிப்படைப் பொருளில் உடன்பாட்டு வடிவம் இல்லை.

நீ வராதே எனக் கூற நினைத்திருந்தால் ' நீ வருவது நலமா ' எனத

77. திருவாசகன், ஆ., பாரதிதாசன கவிதைகள், ப. 1061

தலைவியிடம் சொல்லியிருக்க மாட்டான். எனவே எதிர்மறைப் பொருளில் கருத்து இல்லை. தலைவியின் நலத்தைத் தலைவன் தானே கருதிச் செயல் புரிவான் என்பதே சொல்லவரும் குறிப்புப் பொருள் கருத்து எனலாம்.

## அணித்தொனி

சொல்லாற்றலாலோ, பொருளாற்றலாலோ சொறுகளால் விளக்கப்படாமல், குறிப்பாக அணி தோன்றுமானால், அதனை அணித்தொனி என்பர். சங்க இலக்கியப பாடல்களில் உவமை, உருவகம், வேற்றுமை, வேற்றுப்பொருள் வைப்பு, முரண், விலககு ஆகிய அணிகள் தொனியாக வருவதைக் காணலாம்.

## உவமத் தொனி

சங்கப் பாடல்களில் இவ்வுவமத் தொனி அமைந்து வந்துள்ளது எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.

"நெஞ்சே, தலைவியைப் புணரின், பொருள் கிட்டாது. தலைவியைப் பிரியின் அவள் புணர்வு கிட்டாது. இதற்கிடையில் பொருள்வயின் பிரிக. பிரியாதிருப்ப தாயினும் ஆகுக".[78]

பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினை நெருங்கித் தலைவன் சொல்லுகிறான் என்பது பாடல் துறையாகும்.

இவண், தலைவியைப் புணர்தல், அவளைப் பிரிதல் என்ற இரண்டு செயல்களையும் நோக்கினால் அவளைப் புணர்தல் ஆகிய செயலில் பொருள்கிட்டுதலில்லை என்ற குறையும் அவளைப் பிரிதல் ஆகிய செயலில் புணர்தல் கிட்டுதலில்லை என்ற குறையும் சுட்டப்பட்டமையின் புணர்தலும் பிரிதலும் ஒப்பானவை என உவமை தொனியாகத் தோன்றக் காணலாம்.

பாரதிதாசனின் , "போய்க் கொண்டிருந்தார்"[79] எனத் தொடங்கும் பாடலில், "சோட்டுப் புறாக்களில் ஆணிடம் பெட்டையின் தொல்லையைப் பாருங்கள் என்றாள் பொன்னி. பொன்னன், கேட்டதைப் பெற்றவுடன் இன்னும் கேட்டது என்றான். பின்னும்

78. நற். 16 : 1 - 4
79. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 994

போய்க் கொண்டிருந்தார்கள். நல்ல இதழ்களைக் கொண்ட தாமரைப் பூவின் தேனுக்கு வண்டுகள் மொய்ப்பதைப் பார் என்றான் அவன். செல்வரின வீடு திறந்திருக்கும் பசி தீரும் வரைக்கும் என்றாள். பின்னும் போய்க் கொண்டிருந்தார்கள்" என்பதாகக் கூறப்பட்டுள்ளது.

சோட்டுப் புறாக்கள் ஆண், பெட்டை ஆகிய இரண்டு ஈண்டுத் தலைவன், தலைவி ஆகியோர்க்கு வெளிப்படையாக உவமை எனக் கூறப்படவில்லை என்றாலும், சோட்டுப் புறாக்களில் ஆணிடம் பெட்டை தொல்லை கொடுப்பதாகக் கூறப்பட்டுள்ளதால், தலைவன், தலைவி ஆகியோர்க்கு உவமை குறிப்பினால் தோன்றுவதால் உவமத் தொனி அமையக் காணலாம்.

## வேற்றுப்பொருள் வைப்பு அணித்தொனி

சங்கப் பாடல்களில் இவ்வேற்றுப்பொருள் வைப்புத் தொனி அமைந்து வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.

"நீரைத் தன்னடியிலே கொண்டுள்ள வரிசையான இதழ்களையுடைய குவளை மலர், கோடைக்காற்று வீசினாலும் வாடாமலிருக்கும்"[80] என்பது பாடலின் முதற்கண் அமைகிறது.

தலைமகள் உடன்போக்குத் துணிந்தமை உணர்ந்த தலைமகன், சுரத்து வெம்மையும், தலைமகள் மென்மையும் குறித்துச் செலவு தவிர்க்கக் கூறுகிறான். ஆனால் தோழியோ, உடனே உடன்போக்கினை மேற்கொள்ளச் சொல்வதாய்ப் பாடல் அமைகிறது.

ஈண்டு வேற்றுப் பொருளை வைப்பதன் மூலம் " கொடிய சுரமாயினும், தலைவி தலைவன் தன்னருகில் உள்ளபோது துன்பம் அடையமாட்டாள் " என்னும் குறிப்புப் பொருள் தோன்றுதலின் வேற்றுப்பொருள் வைப்பணித் தொனியாகும்.

பாரதிதாசன் பாடலில் கடிது வருவார் என்று தலைவியைத் தோழி ஆற்றுவித்தது என்னும் துறை அமைந்துள்ளது.

"அம்மா உன்மேல் மிகுந்த விருப்பம் உடைய தலைவன் விரைவில் திரும்பினும் திரும்புவான். திரும்பி வந்தின்பம் தருவான். அவன் சென்ற வழியில் ஆண்

80. குறு. 388

யானை, பெண் யானையின் பசியைப் போக்க யா மரம் உரித்தூட்டலைக் கண்டு உன் நிலையை எண்ணி இன்றே திரும்புவான்"[81] எனச் சுட்டப்பட்டுள்ளது.

ஆண் யானை, பெண் யானையின் பசியைப் போக்குவதைப் பார்த்த தலைவன் இன்றே திரும்புவான் என்னும் இப்பொருளின் மூலம் தலைவன், தலைவியிடம் அன்பு கொண்டு அவளின் துன்பம் நீங்கும் என்னும் குறிப்புப் பொருள் தோன்றுதலின் வேற்றுப்பொருள் வைப்பணித் தொனியாகும்.

## விலக்கு அணித்தொனி

சங்கப் பாடலில் இவ்விலக்குத் தொனி அமைந்து வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.

"ஐயனே அன்று நாம் ஓமை மரத்தினது கிளையின் இலை தீய்ந்தமையாலே பொருந்தாத புள்ளிபட்ட நிழலில் இருக்க, நம்மை நடுக்கப்படுத்தாது தாள் அடையுமிடத்தில் வந்து தழையை முடித்துத் தின்னுதல் கொண்ட ஓங்கிய மருப்புடைய யானை தன் நீண்ட கையைச் சுருட்டித் தூக்கிப் பிறிதொரு வழியிற் செல்லத் தொடங்கிய அளவில் இளம்பிடியானை வேறாக உணர்ந்து வெயில் பரவிய மலைப்பிளப்பிடமெல்லாம் எதிரொலி எடுக்கும்படியாகப் புலம்பிய குரலை நினைத்தலும் செய்வீரோ".[82]

பிரிவுணர்த்திய தலைமகனுக்குத் தோழி சொல்லுகிறாள் என்பது பாடல் துறையாகும்.

ஈங்கு உடன்போக்கின் போது கண்ட ஒரு காட்சியைத் தோழி சுட்டியமையால், "தலைவி உடன்போக்கிலே கொடிய பாலை நெறியினும் தன் சுற்றத்தார்களையெல்லாம் விடுத்துத் தலைவனோடு புறப்பட்டு வந்தனள். அத்தகையவளைப் பிரியக் கருதல் முறையன்று" என்னும் குறிப்புப் பொருள் தோன்றக் காணலாம். மேலும் களிற்றியானை, பிறிதொரு வழியில் செல்ல அச்சிறுபொழுதும் அதன் பிரிவைப் பொறாத பிடியானை மலைப்பிளப்பெல்லாம் எதிரொலியெடுக்கப் புலம்பியது எனச் சுட்டியமையால், சிறுபொழுது கூடப் பிரிவைப் பிடியானை தாங்காது மிகப் புலம்பியது போலத் தலைவியும் தலைவனின் பிரிவைப பொறுத்தல் அரிதாகப் புலம்புவாள் என்பது குறிப்பில் தோன்றும். தோழி கூறிய

81. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 999
82. நற். 318

எல்லாவற்றையும் ஒருசேரக் கருதின் தலைவனது செலவு அல்லது பிரிவைத் தோழி குறிப்பின் விலக்குதல் புலப்படும். இவ்வாறு விலக்கணி தொனியாக வந்துள்ளமை காணலாம்.

"ஆளை மயக்கிடும் மாதொருத்தி"[83] எனத் தொடங்கும் பாரதிதாசன் பாடலில், சுதந்திர தேவி, கதர் ஆகிய இரண்டு பெண்கள் உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது, "சுதந்திர தேவி உள்ளத்தில் காதல் இருப்பது உண்மையெனில் சின்ன இராட்டினத்தில நூலிழைத்து நெய்த உடையை உடுத்துவாய். அதன் பிறகு என்னைக் கலந்திடுவாய (என்னிடம் பேசு) எனக் கதரிடம் கூறி மறைந்தாள். அதைக் கேட்ட கதர் அவள கட்டளையை மறுப்பதுண்டோ" எனக் கூறுகிறார்.

கதர் இராட்டினத்தில் நூலிழைத்து நெய்த உடையை உடுத்தினால் அயலவா பொருளின் தேவை நீங்கும். அவ்வாறு நீங்கினால் வெள்ளையர்களை வெளியேற்ற இயலும் எனக் குறிப்பினால் விலக்குகிறாள். இவ்வாறு விலக்கணி தொனியாய வந்துள்ளமையைக் காணலாம்.

## முரண் அணித்தொனி

சங்கப் பாடல்களில் இம்முரண் தொனி அமைந்து வந்துள்ளது எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.

"கோங்கினுடைய மெல்லிய இதழ்மிக்க குடைபோன்ற மலர்கள் எல்லாம் வைகறைப் பொழுதிலே விளங்குகின்ற மீன்களாமெனக் கருதும்படி தோன்றிக் காடெங்கும் அழகமைந்த மலர் மணம் வீசும் கல்நெறியிலே "கிடின்" என்னும் ஓசை உண்டாக முழுங்குகின்ற திரண்ட தோள்வளை அணிந்த மறவர் கூரியதாய் வடிக்கப்பெற்ற அம்புகளை ஏந்திக் கொலைவினைக்கு உரியராய் வந்தனர்"[84] என்று வரும் பகுதி ஈண்டுக் கருதத்தககது

பிரிவுணர்த்திய தலைவற்குத் தோழி செலவழுங்குமாறு சொல்லியது என்பது பாடல் துறையாகும்.

காடெங்கும் அழகமைந்த மலர் மணம் வீசும் கல்நெறி என்று சொல்லும்போது தோன்றுகின்ற மகிழ்ச்சி, அவ்வழகு கெடுமாறு அல்லது அவ்வழகை நுகர இயலாதவாறு

83. பாரதிதாசன்,, பாரதிதாசன் கவிதைகள், ப. 57
84. நற். 48

திடுமென அம்போடு கொலை வினையா குறுக்கிடுமபோது, நீங்கி அச்சமும் துன்பமும சூழ்ந்து கொள்ளல் இயல்பு. இவ்வாறு தோன்றும் முரண் சொற்களால அன்றிச் சொற்பொருள ஆற்றலால் குறிப்பின் புலப்படுவதால் இது முரண்தொனி எனலாம்.

"அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தால்"[85] எனத் தொடங்கும் பாரதிதாசன பாடலில்,

"படித்த செந்தமிழ் பாடியும் ஆடியும் செய்யும் அததான் கல்லும் உருகுகின்ற வெயில் காட்டைத் தாண்டி நல்வழியில் பொருள் தேடுவதற்காகத் துன்பத்தை, என உள்ளத்தில் தூண்டி நீங்கி விட்டான். என்னைத் தனிமைச் சிறையிலிட்டான. தலைவன தொட்டு அன்பு செய்யாவிட்டாலும் பார்த்துக் கொண்டிருநதால் போதுமெனத் தலைவி கூறுவதாக அமைந்துள்ளது.

படித்த செந்தமிழ் பாடியும் ஆடியும் செய்யும அத்தான் என்னும்போது மகிழ்ச்சியும் கல் உருகும் வெயில் காடு என்னும்போது அச்சமும் நல்வழியில் பொருள்தேட எண்ணி என்னைத் தனிக்கூண்டில் அடைத்தான் என்னும் போது துன்பமும் ஏற்படுகின்றன. இவ்வாறு தோன்றும் முரண்பட்ட சொற்பொருள் குறிப்பில் புலபபடுவதால் இது முரண்தொனி எனலாம்.

## இரசத் தொனி

இரசங்கள் அவ்வவற்றைக் குறிக்கும் சொற்களால அன்றி விபாவ, அனுபாவ, வியபிசாரி பாவங்களால் தோன்றுவிக்கப்படுமானால் இரசத்தொனி என அழைக்கப்படும்

சங்க இலக்கியத்தில் இவ்விரசத் தொனிவகை பயின்று வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பகுதியைக் கருதலாம்.

"கோங்கினுடைய மெல்லிய இதழ்மிக்க குடைபோன்ற பூக்கள் எல்லாம் வைகறைப் பொழுதில் விளங்குகின்ற மீன்களாமெனக் கருதும்படி தோன்றிக் காடெங்கும் அழகிய மலர் மணம் வீசும் கல்நெறியிலே "கிடின்" என்னும் ஓசை உண்டாக முழங்குகின்ற திரண்ட தோள் வளையணிந்த மறவர் கூரிய அம்புகளை ஏந்திக் கொலை வினைக்குரியராய் வந்தனர், அவரை அஞ்சாது வென்று போக்கி அப்பால் எம ஐயன்மார் தொடர்ந்துவர

85. திருவாசகன, ஆ., பாரதிதாசன கவிதைகள, ப 1052

எம்மைக் கைவிட்டுச் சென்று நீ மறைந்து கொண்ட காடு அன்று போல் இன்றும் எம் கண்ணெதிரில் சுழல்கின்றது.[86]

தலைவியிடத்துத் தோன்றும் பிரிவுத் துன்பத்திற்குக் காரணமான தலைவன் ஆலம்பன விபாவம்.

அழகிய கோங்கம் மலர்ந்த காடு, கூரிய அம்புடைய கொலை வினைஞரான மறவர் குறுக்கிட்டு அமர் விளைத்தல் தலைவன் அவர்களை வெனறு நீக்குதல் தலைவியின் ஐயன்மார் வரத் தலைவன் ஒளிந்து கொள்ளுதல் ஆகியன உத்தீபன விபாவம் எனலாம்.

கோங்கம் பூக்கள் விடியலில் தோன்றும் மீன்களாமெனக் கருதத் தோன்றிக் காடெங்கும் அழகிய மலர் மணம் வீசும் கல்நெறி என்னும்போது மகிழ்ச்சியும், அத்தகைய இனிய கல்நெறியில் திடுமெனக் "கிடின்" என முழங்கி மறவர் கூரிய அம்புகளை ஏந்திக் கொலை வினைஞராய் அமர் செய்யக், குறுக்கிட்டமை சுட்டியபோது அச்சமும், தலைவன் அவர்களை அஞ்சாது நீக்கினன் என்னும்போது வீரமும், அப்பால் தலைவியின் தமர் வந்தபோது ஒளிந்து கொண்டனன் என்னும்போது அருளும், "அத்தகைய காடு அன்று போல் இன்றும் என் கண்ணெதிரில் சுழல்கின்றது" என்னும்போது வியப்பும்,துணையுணர்வுகளாகத் (vyabicaribava) தோன்றி மறைய சோகம் (soka) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி (stayibava)கிளரப் பெற்றுக் கருணாரசம் (karuna rasa) தோற்றுவிக்கப்படுதல் காணலாம்.

இங்குச் சுட்டப்பட்ட உத்தீபன விபாவங்களும் குறிப்புப்பொருள் தோற்றுவித்துக் கருணாரசத்திற்குத் துணை நிற்றல் காணலாம். அழகிய கல்நெறியில் மறவர் குறுக்கிட்டனர் என்றமையால் "இனிய இல்லறத்தில் கொடிய பிரிவு குறுக்கிட்டதே என் செய்வது?" என்னும் குறிப்புப்பொருள் தோன்றிக் கருணாரசத்திற்குத் துணை செய்கிறது. தலைவியின் தமர் வரத் தலைவன் ஒளிந்து கொண்டமை சுட்டியமையால் தலைவனின் அருளுடைமை குறிப்பில் தோன்றுகிறது. "அத்தகைய தலைவன் அருளின்றிப் பிரியக் கருதினனே" என்னும் குறிப்பும் தோன்றிக் கருணாரசத்திற்குத் துணை செய்தல் காணலாம்.

"தேய்ந்த புரிக்கயிறு"[87] எனத் தொடங்கும் பாரதிதாசன் பாடலில், "வலிமையான யானை ஒரு முனை இழுக்க மறுமுனை இன்னொரு யானை இழுக்கத் தேய்ந்த

86. நற். 48
87. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1061

புரிக்கயிறாயிற்று என் உள்ளம்.

சேயிழை வருந்துவாள். போ போ எனவும் பொருள்தேட வந்தாய் இந்தவழி வா வா எனவும் ஆக இரண்டு கொள்கையும் இருபுறம் இழுக்க அடையாத இன்னல் அடைந்ததனாலே தேய்ந்த புரிக்கயிறாயிற்று என் உள்ளம்.

வஞ்சிக்கொடி நான் வருகின்ற வழிபார்த்து வாயிலில் நிற்பாள். விரைவில் போ என நினைத்து நெஞ்சம் மகிழ அவளிடம் செல்வதா? பெரும்பொருள்தேட இவ்வழி செல்வதா? தேய்ந்த புரிக்கயிறாயிற்று என் உள்ளம்.

தந்தை தேடிய பொருளை உண்டு வாழ்பவன் சாகும் மட்டும் பிறர்காலில் வீழ்பவன் என எண்ணி இவ்வழிச் செல்வதா? ஏந்திழை வருத்துகின்ற அவ்வழிச் செல்வதா? தேய்ந்த புரிக்கயிறாயிற்று என் உள்ளம்" என அமைந்துள்ளது.

தலைவனிடத்துத் தோன்றும் பிரிவுத் துன்பத்திற்குக் காரணமான தலைவி ஆலம்பன விபாவம் ஆவாள்.

தேய்ந்த புரிக்கயிறு, யானை இருபுறமும் இழுத்தல் ஆகியன உத்தீபன விபாவம் எனலாம்.

"ஒருபுறம் சேயிழை வருந்துவாள் போ போ" எனவும் "மறுபுறம் பொருள்தேட வந்தாய் இந்தவழி வா வா" எனவும் கூறும்போது வருத்தமும் "வஞ்சிக்கொடி நான் வரும் வழிபார்த்து வருவாள் போவாள் என் நெஞ்சம் மகிழ அவளிடம் செல்வதா?" என்னும்போது மகிழ்ச்சியும் "தந்தை தேடிய பொருளை உண்டு வாழ்பவன் சாகும் மட்டும் பிறர்காலில் வீழ்பவன் என எண்ணி இவ்வழிச் செல்வதா" என்னும்போது இழிவும் ஆகிய துணையுணர்வுகள் தோன்றி மறைந்து சோகம் என்னும் தலைமை மனக்கிளர்ச்சி கிளரப்பெற்றுக் கருணாரசம் தோற்றுவிக்கப்படுதல் காணலாம்.

# இரசக் கோட்பாடு

இலக்கியத்திற்கு மிகவும் வேண்டப்படுவது உணர்ச்சியாகும். இவ்வுணர்ச்சி வெளிப்படுத்தப்படும் நிலையை ஆராயும் கோட்பாடே இரசமாகும். சங்க இலக்கியமானாலும் பாரதிதாசன் பாடல்களானாலும் உணர்ச்சியை நன்கு வெளிப்படுத்துகின்றன. அவ்வேளையில். பாடல்களில் இரசக் கோட்பாட்டைப் பொருத்திப்பார்ப்பது ஏற்புடையதாக அமைகின்றது

## இரசம் இன்னதென்பது

இரசக்கொள்கை அல்லது கலைசார்ந்த மனக்கிளர்ச்சியை வடமொழியில "நாட்டிய சாத்திரம் " எழுதிய பரதரது விதியினின்றே தொடஙகுவது பொருந்தும் விபாவம (vibava) அனுபாவம் (anubava) வியபிசாரிபாவம் (vyabicari bava) இவற்றின் சேர்க்கையினால வெளிப்படுத்தப்படுவதே இரசமாகும் என அவர் விளக்கிக்காட்டியுள்ளார்[88].

## விபாவ, அனுபாவ, வியபிசாரி பாவங்கள்

இரசத்தைத் தோற்றுவிக்கக் காரணமான பின்னணியே விபாவம் (vibava) எனப்படும். விபாவம் ஆலம்பன் விபாவம் (alambana vibava) உத்தீபன விபாவம் (uddibana vibava) என இரண்டு வகைப்படும். மனக்கிளர்ச்சி தோன்றக் காரணமான ஒருவரோ, பலரோ ஆலம்பன விபாவம் ஆவர். மனக்கிளர்ச்சியை எழுப்பிய சூழ்நிலைகள் உத்தீபன விபாவம் எனப்படும். அனுபாவம் (anubava) என்பது மனக்கிளர்ச்சியை வெளிக்காட்டும், உடலிலே தோன்றும் வெளிப்பாடு அல்லது மெய்ப்பாடு ஆகும். ஒரு பெண்ணின் கண்பார்வை, அவளின் இன்னகை ஆகியவை அனுபாவம் எனலாம். தலைமை மனக்கிளர்ச்சிக்கு (stayibava) ஆக்கந்தரும் தொகுதியாக அமைந்த பல மாறான உணர்வுகள வியபிசாரி (vyabicari) எனப்படும்.

## இரச உருவாக்கம்

உள்ளத்தின் அடியுணர்வுத் தளத்திலே அல்லது உணர்வு நிலையற்ற தளத்திலே ஆழப் பதிந்துள்ள ஒரு சில மூலமான மனக்கிளர்ச்சிகளாலே செயல் தூண்டல் எண்ணமும் பகுத்தறியும் முறையும் ஆன தனி மனிதப்பண்பு இயல்புகள் அமைகின்றன எனும் உளவியல் அடிப்படையில் உருவானதே இரசம் என்பதாகும்.

88. பரதர், நாட்டிய சாததிரம், 5 : 2

இத்தகைய மூலமான மனக்கிளர்ச்சிகள் காதல் (the amorous), நகை (the ludicrous), துயர் (the pathetic), வீரம் (the heroic), வெகுளி (the passionate) அச்சம (fearful), வெறுப்பு (the nauseating), வியப்பு (the wondrous), பக்தி (the devotional) ஆகியவற்றையும் முற்கூறிய எட்டோடு சேர்த்துக் கொண்டனர். இம்மனக்கிளர்ச்சிகள நிலைத்த தன்மை உள்ளனவாகக் கருதப்பட்டுத் தலைமை மனக்கிளர்ச்சி (stayibava) என அழைக்கப்பட்டன.

மனக்கிளர்ச்சிகள் வெளிப்படும்போது அவை அமைவுத் தோற்றத்தைக் காட்டுகின்றன. அதாவது வளியும் இயங்கு அணுக்களும் போலவும், தொடர்பாக வந்து போய்க் கொண்டிருக்கின்ற அனற் கொழுந்தின் கீற்றுக்கள் நிலையான பிரித்தறிய முடியாத முழுமையான தோற்றமுடைய அனற்கொழுந்தை உண்டாக்குவதைப் போலவும், மனக்கிளர்ச்சி ஒவ்வொன்றும் வெளிப்படும்போது வேறுபட்ட உணர்ச்சிகள் தொடர்பாக எழுந்துமாறி ஒரு நிலையான ஆக்க அமைவைக் காட்டுவதை உணரலாம். தொடர்பாக, வேறுபட்ட பல உணர்வுகளின் சிறு கொழுந்துகள் மாறிக் கொண்டிருக்கின்றன. அவை நிலையான மனக்கிளர்ச்சிகளான காதல் முதலியவற்றைத் தோற்றுவிக்கின்றன. கலை உணர்ச்சியைத் தோற்றுவிக்கவில்லையானால் எந்த மனக்கிளர்ச்சியும் இரசம் என்று அழைக்கப்படாது. என்பது கருதத்தக்கது, உண்மை வாழ்க்கையில் நிகழும் காதல் முதலியன இரசம் ஆகா. கலையுலகிலே தோற்றுவிக்கப்படுவதையே இரசம் எனக் கூறுவர்.

## தொல்காப்பியரின் மெய்ப்பாட்டுக் கொள்கையும் பரதரின் இரசக் கொள்கையும்

தொல்காப்பியர் மெய்ப்பாடு பற்றி,

> "உய்த்துணர் வின்றித் தலைவரு பொருளால்
> மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்"[89]

எனக் குறித்துள்ளார். இங்குப் பொருள் என்பது உணர்ச்சியாகும். உய்த்து உணர்வதால் எழுப்பப்பெறாது, தாமே தலைப்பட்டு வரும் உணர்ச்சிகளை அவற்றின் மெய்ம்மைப் பதிவாகச் செய்யுளில் அமைப்பதை மெய்ப்பாடு என்பது தொல்காப்பியர் தரும் விளக்கம்" என்பர்.[90]

89.. தொல். பொருள். இளம். செய். 204
90. கோதண்டபாணி பிள்ளை, கு., கம்பரும் பெய்ப்பாட்டியலும். பக். 15

" எண்வகை இயல்நெறி"[91] என்று நகை முதலான எட்டு வகை மனக்கிளர்ச்சிகளைத் தொல்காப்பியர் அடுத்த நூற்பாவில் கூறியுள்ளார். இயற்கையாக அவ்வுணர்ச்சிகள் எழாத போதும், ஒருவன் அவ்வுணர்ச்சிகளை உய்த்துணர்ந்து, மனத்தால் பாவித்து, அவற்றிற்குரிய புறவுடற் குறிகளைச் செயற்கையாக எழுப்பி நடித்தலே பாவம் என்பதாகும். ஒன்றைப்போல் பாவித்தல், பாவம் ஆகும்.[92]

இவ்வாறாகத் தொல்காப்பியர் இயற்கையான வாழ்க்கையில் மனக்கிளர்ச்சியினால் தோன்றும் மெய் இயக்கங்களைக் கண்டு ஆராய்ந்து, முன்னோர் கருத்துக்கள் சிலவற்றையும் உடன்பட்டு, மெய்ப்பாடு இலக்கியத்திற்குப் பயன்பட அமைக்க வழி காட்டினார் எனலாம். பரதர் இரசக் கோட்பாட்டினை நாட்டியத்திற்காக உருவாக்கியமை தெளிவு. பின்னர் வந்த வடநூலறிஞர்களே நாட்டிய நாடகததினின்றும் பெறப்பட்ட அக்கோட்பாட்டை இலக்கியங்கட்கும் பயன்படுத்தத் தொடங்கி, வளர்த்தனர். இவ்வாறு தொல்காப்பியரின் மெய்ப்பாட்டுக் கொள்கையும் பரதரின் இரசக் கொள்கையும் வேறுவேறு பயன்பாடுகள் கருதி உருவாக்கப்பட்டன என்றாலும் ஒப்புமைகள் இரண்டனுள்ளும் காணக்கிடக்கின்றன.

பரதர் நாற்பத்தொன்பது பாவங்களைக் குறிப்பிடுகின்றார். அவற்றுள் நிலையான உணர்வுகள் (stayibava) எட்டு, சாத்விக பாவங்கள் (சத்துவம் அல்லது கரணத்தினின்றும் தோன்றுபவை) எட்டு, வியபிசாரி (நிலையற்ற) பாவங்கள் முப்பத்து மூன்று.

தொல்காப்பியர் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை ஆகிய எட்டுவகை மெய்ப்பாடுகளைக் குறிப்பிடுகின்றார், பரதர் கூறும் காதல் (sringara) நகை (hasya), கருணை (karuna), வெகுளி (raudra), வீரா (vira). அச்சம் (bayanaka), வெறுப்பு (bibhatsa), வியப்பு (adbuta), ஆகிய எட்டு இரசங்களும் எட்டு மெய்ப்பாடுகளோடு பெரும்பான்மை ஒப்பிடத்தக்கன.[93]

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியல் தொடக்கத்தில் முப்பத்திரண்டு பொருள்களைக் குறிப்பிட்டு அவை பதினாறாகவும் அடங்கும் என்று கூறுவர்.[94] சுவைக்கப்படும் பொருளும், பொறியுணர்வும். குறிப்பும், சத்துவமும் என்னும் நான்கினையும் எட்டுச் சுவைகளுக்கும் ஏற்றிப் பார்ப்பின் அவை முப்பத்திரண்டாகும். சுவைக்கப்படும் பொருளோடு பொறியுணர்வும், குறிப்போடு சத்துவமும் நெருங்கிய தொடர்புடையனவாதலின் அவை இரண்டிரண்டாகக்

91. தொல். பொருள். இளம். கெய். 205
92. கோதண்டபாணி பிள்ளை, கு., கம்பரும், மெய்ப்பாட்டியலும், ப. 15
93. திருஞானசம்பந்தன், பெ., இந்திய எழிற்கலை, ப. 42
94. தொல். பொருள். இளம். மெய். 1

கருதப்படாமல். இணைத்துக் கருதப்படும் போது பதினாறாக அமையக் காணலாம்.[95]

சுவைக்கப்படும் பொருளைப் பரதர் கூறும் "விபாவத்தோடும் குறிபடை இயக்கப்பட்ட தாயிபாவத்தோடும் சத்துவத்தைச் சாத்விக பாவத்தோடும் ஒருவாறு ஒப்பிட்டுச் காணலாம் என்று கூறுவர்.[96]

முதலில் கூறப்பிட்ட எட்டு மெய்ப்பாடுகளுககும அடுத்துக் கூறப்பட்ட முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளுக்கும் தொல்காப்பியர் தாமே தெளிவாக வேறுபாடெதையும கூறாவிடினும், முதலெட்டும் பரதரால் கூறப்பட்ட எட்டு மெய்ப்பாடுகளுடனும் பொருந்தி நிற்பதாலும் அடுத்துக் கூறப்பட்டவற்றுள் ஒரு சில வியபிசாரிபாவம் என்று பரதரால கூறப்படும் முப்பத்து மூன்றனுள் சிலவற்றுடன் (நாணுதல் - விர்டா; துஞ்சல் - நித்திரை, கனவு - சப்தம்; அரற்று - தைன்யம், நினைதல் - ஸ்மிருதி முதலியன) ஒத்திருப்பதாலும ஒரு பொது மரபை இருவரும் பின்பற்றி இருக்கின்றார்கள் என்பது தெரிய வருகிறது.[97]

வடமொழியில் கூறப்பட்ட காதல் (sringara) நகை (hasya) கருணை (karuna), வெகுளி (raudra) வீரம் (vira) அச்சம் (bayanaka), வெறுப்பு (bibhatsa), வியப்பு (adbuta) ஆகிய எட்டு இரசங்களும் சங்க இலக்கியப் பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் பொருந்தி வந்துள்ளன.

### காதல் (சிருங்காரம்)

காதலில் தோன்றும் புணர்வு, பிரிவுகளில் காதல் இரசம் (சிருங்காரம்) தோன்றும். காதலரின் புணர்வில் தோன்றும் காதலே சம்போக சிருங்காரம் எனறும், பிரிவில் தோன்றும் காதலே விப்ரலம்ப சிருங்காரம் என்றும் கூறுவர்.

சங்க இலக்கியத்தில் இச்சம்போக சிருங்காரம் பயின்று வந்துள்ளது எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.

95 பேராசிரியர் விளக்குவார் சுவைக்கபபடும பொருளும, அதனை நுகர்ந்த பொறியுணர்வும, அது மனத்துப்பட்டவழி உள்ளத்து நிகழும குறிபபும, குறிப்புச்சன் பிறந்த உள்ளத்தாற கண்ணீரும்பலும மெயமமயிர் சிலிர்த்தலும முதலாக உடம்பின்கண் வரும வேறுபாடாகிய சத்துவங்களும என நான்காக்கி, அச்சுவை [illegible] ஒன்று நான்கு செய்து உறழ முப்பத்திரண்டாம என்பது [illegible] சத்துவமெனும் ஒக்கும் அவை பதினாறாயின [illegible] [illegible] முதலாயின பொருளும் [illegible] முதலியன பொறியும [illegible] சுவைபொருது [illegible] அப் பதினாறும் [illegible]. இனிக் குறிப்புஞ் சத்துவமு மென்பனவும உள்ள நிகழ்ச்சியும உடமபில வேறுபாடுமெனபராகலின அவ்வுள்ள நிகழ்ச்சியை வெளிபபடுபபது சத்துவமாகலின் அவை பதினாறும் எட்டாயடங்குமாகலின அவை ஈரெட்டுப பதினாறாகு மெனபது-தொல பொருள், மெய. இளம். பேரா - இள உரை விளக்கம்

96 திருஞானசமபந்தன், பெ., எழிற்கலை, ப.44

97 மேலது, ப.59

**சம்போக சிருங்காரம்**

"பெரிய புலியானது களிற்றினைக் கொன்று முழங்கும் ஓசையினையும், வில்லினையுடைய கானவர் (கள்ளுண்டு) களிப்புற்றதனால் ஒலிக்கும் துடியின் ஒலியினையும யாம் கேட்டமையினால் (தலைவி அஞ்சுவாளென) இவ்வேனிலிற ' பூத்திருக்கின்ற காட்டிலுள்ள பாதிரிமலர்களைப் புனலி மலரொடு கலந்து அழகுபொருந்த உன் கூந்தலிலே செருகிக் கொத்துக்களாயிருக்கும், தேன் பொருந்திய மராமரததின் மலாகளைச சூடி. ஒளி பொருந்திய வளையல்கள் ஒலிக்கக் கையைவீசிச் சிலமபொலிக்க மெல்ல நடநது சென்ற நினது அழகு பொருந்திய முதுகினைக் காண விழைகின்றேன்; சிறிது தூரம் என முன்னே நடந்து செல்வாயாக என நான் கூற, அவவாறு முனனே செல்லுதலுக்கு அவள நாணி விரைவாக மானையொத்த நோக்கத்தோடு மடபபம் பொருந்த விலகி நினறு தலைவணங்கினாள். அதுகணடு யான் முன்னே செல்லுதலைத் தவிர்த்துவிடவும், அரிய சுரமாகிய அவ்விடத்திலே நாங்கள் சிறிதுபொழுது தங்கிவிட்டோம்"[98] என்பதாகத் தலைவன் கூற்று அமைகிறது.

இப்பாடலில் ஒருவர் காதலுக்குக் காரணமான மற்றவர் அதாவது தலைவன் தலைவி இருவரும். ஒருவருக்கொருவர் **ஆலம்பன விபாவம்** ஆகின்றனர்.

காட்டுப்பகுதி **உத்தீபன விபாவமாக** விளங்கக் காணலாம்

தலைவி மலர்களைச் சூடுதல், வளையல்கள் ஒலிக்கக் கைவீசுதல, சிலம்பொலிக்க நடத்தல், விலகி நின்று தலைவணங்குதல் ஆகியன **அனுபாவங்கள்** எனலாம்.

இப்பாடலில், புலி களிற்றைக் கொன்று முழங்கும் ஓசையுடைய சுரம் என்னும் போதும் கானவர் (கள்ளுண்டு) களிப்புறலால் ஒலிக்கும் துடியொலி என்னும் போதும் **அச்சமும்**, "வேனிலிற் பூத்திருக்கும் காட்டுமலர்களைப் புனலி மலரோடு கலந்து கூந்தலில் செருகி வளையல்கள் ஒளிவீசவும், சிலம்பு ஒலிப்பவும் நீ நடப்பாயாக" என்னும்போது **மகிழ்ச்சியும்**, "நீ முன்னே செல்வாயாக· நான் உன் அழகு பொருந்திய முதுகினைக் காணவிழைகிறேன் என்றதும் விரைவாக மானை ஒத்த மடப்பத்தொடு விலகி நின்றாள்" என்னும் போது **பணிவும்** ஆகிய துணையுணர்வுகள் (vyabicari bava) தோன்றி மறைய, **இரதி** (rati) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி (stayibava) கிளரப்பெற்றுச் **சம்போக சிருங்கார இரசம்** ஓங்கி நிற்கக் காணலாம்.

98. அகம். 261

பாரதிதாசன் பாடல்களில் இச்சம்போக சிருங்காரம் பயின்று வந்துள்ளது எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்[99]

அரசன் மகள் அமுதவல்லி கற்றறிந்திருந்தும் கவிதை புனையத் தெரியாமையால், அரசன், அமைச்சன் ஆகிய இருவரின் ஆலோசனையின்படி புலமை பெற்ற உதாரன் என்பவனைக் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்கிறார்கள். அனால், அமைச்சன் உதாரன் இளவயதினனாக இருப்பதனால் குறைவநது நேருமென. அரசனிடம் ஆலோசனை செய்து, உதாரனுக்குக் கண் தெரியாதென அமுதவலலியிடமும், அமுதவலலி நலிகுட்டரோகியென உதாரனிடமும் கூறித் திரையிட்டுக் கல்வி பயிற்றுவிக்கிறார்கள் அப்படிக்கல்வி பயிற்றுவிக்கும்பொழுது, எதிர்பாராதவிதமாகச் சந்தித்துக் காதல் கொள்கிறார்கள்.

ஈண்டு ஒருவர் காதலுக்கு காரணமான மறறவர் அதாவது உதாரனும் அமுதவல்லியும் ஒருவருக்கொருவர் **ஆலம்பன விபாவம்** ஆவர். கவிதை பாடுதல், உதாரன் அமுதவல்லி இருவரும் ஒருவரையொருவர் கண்டு பேசுதல் ஆகியவை **அனுபாவங்கள்** எனலாம்.

அமுதவல்லி, உதாரனைக் கண்டு திருந்திய சிததிரம் போன்ற அழகுடைய ஆணழகன் என்னும்போதும், உதாரன், அமுதவல்லியைக் கண்டு தன்னை மறந்து மிகப்பெரிய நிலவே பெண்ணாய் என் எதிரே வந்ததோ, மின்னல் குலத்தில் பிறந்தவளோ, வில்லின் குலத்தில் பிறந்தவளோ, கன்னல் தமிழ்க்கவிவாணரின் உள்ளக் கற்பனையின் உருவமோ, பொன்னை உருக்கிய அழகோ, பூங்கொடியோ, மலர்க்குவியலோ என நினைக்கும் போதும் **வியப்பும்** உன்மேல் உள்ள காதலால், சந்திரன் என்மேல் படுவது தணலை வீசும் தன்மையதாக உள்ளது என்னும்போது **வருத்தமும்** கவிஞன் உதாரன் அவன்தன் காதலுக்குப் பின்வரும் நாளில் அமைச்சன், அரசன் முதலிய மனிதர்களில் உயர்வு, தாழ்வு கற்பிக்கும் தன்மையாளர்களால் எதிர்ப்பு வருமென்பதை நினைத்து வருந்தும் பொழுது, "(அமுதவல்லி) என்னை வாளால் வெட்டி நடுக்கடலில் போடும் பொழுது, உன் கைகள் என்னைக் காக்காமல் போனாலும், உங்களை நினைத்த இப்பெண்ணின் உள்ளம் மாறாது" என்னும் போது **பெருமிதமும்**, மேலும் அவள் "அவர்கள் ஆதரவு காட்டாமல் சாதி, செல்வம் இவற்றால் உயர்வு கற்பித்தும், பொதுத் தொழிலாளர் சமூகம் மெத்த இழிவென்று நம்மை ஏய்த்து வரும் பாவிகளைத் திருத்த நம் ஆவியை அர்ப்பணம் செய்வோம்" எனச் காதலின் மீது ஆணையிட்டுக் கூறியவுடன், உதாரன் அவளை ஆரத்

99. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், பக். 129 - 143

தழுவினன் என்றவிடத்து **இன்பமும்,** இவர்கள் காதலையறிந்த மன்னன் உதாரனனுக்குக் கொலைத் தண்டனை கொடுத்தான். அத்தண்டனையை நிறைவேற்றக் கூடியிருந்த அவையினரிடம் உதாரன், "இந்நாட்டையும் நகரையும் உருவாக்கிய பொதுமக்களுக்கு மதிப்புத் தராமல், மன்னன் தமிழ் கற்ற என்னையும், அவனுக்குப் பிறகு தூய நாட்டையாளும் பெண்ணையும் கொல்ல உத்தரவிட்டுள்ளான். அந்த அதிகாரம் அவனுக்கா, உங்களுக்கா தனித்தாளும் கொடிய ஆட்சி மறைந்து என் நாடு பொன்னாடாகக் கடைசி முறை வணக்கஞ் செய்கிறேன்" எனக் கத்தியின் கீழ்த் தலை குனியும்பொழுது **வீரமும்** அதைக் கண்ட அமுதவல்லி கண்ணீர் சொரிந்தாள் என்னும்போது **துன்பமும்** ஆகிய துணையுணர்வுகள் (vyabicari bava) தோன்றி மறைய **இரதி** யென்னும் (rati) தலைமை மனக்கிளர்ச்சி (stayibava) கிளரப்பெற்றுச் **சம்போக சிருங்கார இரசம்** அமைந்து வரக் காணலாம்.

## விப்ரலம்ப சிருங்காரம்

சங்க இலக்கியத்தில் இவ்விப்ரலம்ப சிருங்காரம் பயின்று வந்துள்ளது பாரதிதாசன் பாடலிலும் இச்சம்போக சிருங்காரம் பயின்று வந்துள்ளது.

எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல்பகுதியைக் கருதலாம்.[100] "என் நெஞ்சமானது புறத்தே தாழ்ந்து இருண்ட கூந்தலையும் நெய்தல் மலர் போன்ற நிறம் விளங்கிய ஈரிய இமை பொருந்திய மையுண்ட கண்களையும் உடைய என் உள்ளத்தைப் பிணித்துக் கொண்டவளின் துன்பம் தீர்க்கச் செல்வோம் என்று கூறும். அப்பொழுது எடுத்த வினையை முடிக்காமல் குறைபடவிடுவது அறியாமையைப் பயப்பதுடன் மானக் குறைவையும் உண்டுபண்ணும் என்று உறுதிபயக்கும் நுண்ணுணர்வு ஆராய்ந்து பார்க்க,அறிவு மயங்கி, "விரைந்து துணிவு செய்தலைச் சிறிது தவிர்க" என்று சொல்லும் அவற்றிடையே விளங்குகின்ற உயர்ந்த மருப்புக்களையுடைய களிறுகள் இரண்டு இருதலையும் தனித்தனியே பற்றி ஈர்த்தலால் தேய்ந்த புரியையுடைய பழைய கயிறு போல என் உடம்பு அழிய வேண்டுவது தானோ?" பொருள்வயிற் சென்ற தலைவன் தலைவியை நினைந்து ஆற்றானாகி இடைச்சுரத்து அழுங்கிக் கூறியது என்பது இப்பாடல் துறையாகும்.

ஈங்குத் தலைவி **ஆலம்பன விபாவம்.**

"தேய்புரிப் பழங்கயிறு போல உடம்பு வருந்துதல்" **அநுபாவம்** எனலாம்.

100. நற். 284

"புறத்தே தாழ்ந்து இருண்ட கூந்தலையும் நெய்தல் மலர் போன்ற நிறம் விளங்கிய ஈரிய இமை பொருந்திய மையுண்ட கண்ணையும் உடைய என் உள்ளம் பிணிக் கொண்டோள்" என்னும் போது **மகிழ்ச்சியும்** அத்தகைய உள்ளம் பிணிக் கொண்டோளிடம் நெஞ்சம் செல்லக் கருதியபோது உறுதி பயக்கும் நல்லுணர்வு "அவ்வாறு செய்யாதே. அது அறியாமை மானக்குறைவு" என்று அச்சுறுத்தலால் அச்சமும் "அறிவு மயங்கி விரைந்து துணிவு செய்தலைச் சிறிது தவிர்க்குமாறு சொலலும் இவற்றிடையே களிறுகள் இரண்டு இருதலையும் தனித்தனியே பற்றி ஈர்த்தலால் தேய்ந்த புரியையுடைய பழைய கயிறு போல என் உடம்பு அழிய வேண்டியதுதானோ?" என்னும் போது **வருத்தமும்** துணையுணர்வுகளாகத் தோன்றி மறைய **இரதி**(Rati)யாகிய தலைமை மனக்கிளர்ச்சியால் **விப்ரலம்ப சிருங்கார இரசம்** தோன்றுகிறது எனலாம்.

பாரதிதாசன் பாடல்களில் இச்சம்போக சிருங்காரம் பயின்று வந்துள்ளது எடுத்துக்காட்டாக, பின்வரும் பாடல் பகுதியைக் காணலாம்[101]

"தினைத்தாளின் கதிரைக் கிளி தின்றால் அது செத்துப் போகாது. மழை பெய்தவுடன் இலை விழும். அதுபோல என் புதுநலம் இழந்ததால் போகும் நல்லுயிர் (தலைவன்)வருவான் என்னும் நினைவால் இருக்கின்றது தோழி" என்று தலைவி கூறுகிறாள்

"தலைவன் அருள் செய்வான் என்று இன்னும் உயிர் தாங்கி நிற்கிறேன்" என்று தோழி தலைவிக்குச் சொன்னது என்பது பாடல் துறையாகும்.

இப்பாடலில் தலைவியினுடைய பிரிவிற்குக் காரணமான தலைவன் **ஆலம்பன விபாவம்**. மழைபெய்தல், தினைத்தாளின் கதிரைக் கிளி தின்றல் என்பன **உத்தீபன விபாவம்** ஆகும்.

தினைத்தாளைக் கிளி உண்டதனால், அது செத்துப் போகாது என்னும் போது **வியப்பும்**, தினைத்தாள் நல்லமழை வர இலைவிடும் என்னும்போது **மகிழ்ச்சியும்**, என் புதுநலம் இழந்ததால் உயிர் போகும் என்னும் போது **வருத்தமும்** தலைவன் வருவான் என்னும் நினைவால் தலைவியின் உயிர் இருக்கின்றது என்னும் போது **இளிவரலும்** ஆகிய துணையுணர்வுகள் இடம்பெற்றுள்ளன.

101. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1627

மேற்கூறிய துணை உணர்வுகள் தோன்றி மறைய **இரதி**(rati)யாகிய தலைமை மனகிளர்ச்சி(stayibava) கிளரபபெற்று **விப்ரலம்ப சிருங்காரத்திற்கு** இட்டுச் செல்லக் காணலாம்

**நகை**

சஙக இலக்கியததில் நகை பயின்று வந்துளளது. எடுத்துக்காட்டாகப பின்வரும் பாடல் பகுதியைக் காணலாம்.[102]

“உன்னுடைய ஒளிவீசும் வளையல்களும் ஒளி மழுங்கிய நெற்றியும் மீணடும தமக்குரிய அழகு பொருந்தும்படியாகப், பொன்னாலான தேரையுடைய தலைவன் உன்னை உடன் கொண்டுபோக வந்தனன். எனவே செவ்வரி படர்ந்த உனது நெடிய கண்களைத திறந்திடுக! நாம் உன்னுடைய அழகைக் கவர்ந்து கொணட பசலை நோயை எள்ளி இனி நகைத்திடுவோம்” என்கிறாள் தோழி.

இப்பாடலில் தலைவியின் பசலை நீங்குவதற்குக் காரணமான தலைவன **ஆலம்பன விபாவம்** ஆவான.

செவ்வரி படர்ந்த கண்களைத் திறத்தல் **அனுபாவம்** எனலாம்.

தலைவியின் ஒளி மழுங்கிய நெற்றி என்னும்போது **வருத்தமும்** பொன்னாலான தேரையுடைய தலைவன் பசலை நீங்கும்படி வந்தனன் என்னும்போது **மகிழ்ச்சியும்** தலைவியின் அழகைக் கவர்ந்து கொண்ட பசலையை எள்ளி நகைப்போம என்னும்போது **வியப்பும்** ஆகிய துணையுணர்வுகள் தோன்றி மறைய **ஆசம்**(hasya) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி கிளரப் பெற்று **நகை** என்னும் இரசம் வெளிப்படக் காணலாம்.

பாரதிதாசன் பாடலிலும் இந்நகை பயின்று வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல்பகுதியைக் கருதலாம்.[103]

“பூமியிலுள்ள மிளகு புள் போல் பறக்குமா? புதுவையிலுள்ள மிளகு புள்போல் பறக்கும் சென்ற திங்கள் கடைசியில் சிறப்புடைய புதுச்சேரியில் தெரிந்த

102 ஐங் 200
103. திருவாசகன், ஆ., பாரதிதாசன கவிதைகள். ப. 572

வீட்டிற்குச் சென்றேன அங்கு வீட்டார் யாருமில்லாததால கூடத்தில் கொண்டிருந்த மிளகைக் கூட்டத் துடைப்பம் எடுத்து நாடடினேன. பூமியிலுள்ள மிளகு புள்போல் பறக்குமா, புதுவையிலுள்ள மிளகு புளபோல் பறந்தது. எனக்கும் வயது எண்பதாயிற்று. இந்த வியப்பை எங்கேயும் பார்த்ததில்லை. கூட்டி வாரப் போனேன். எல்லா மிளகும் கூட்டமாகப் பறந்தன. அழைத்தபோது தரையில அமரும். ஈ செயவதையே வீட்டுக்காரி பாட்டாய்ப் பாடினாள்."

முதியவருக்குத் தோன்றும் நகைப்பிற்குக் காரணமான ஈ **ஆலம்பன விபாவம்** ஆகும்

புதுவைப்பூமி, ஈ மொய்க்கும் வீடு ஆகியன **உத்தீபன விபாவம்** எனலாம்.

"பூமியிலுள்ள மிளகு புள் போல் பறக்குமா? புதுவையிலுள்ள மிளகு புள்போல் பறக்கும்" என்னும் போது **வியப்பும்** "சென்ற திங்கள் கடைசியில் சிறப்புடைய புதுச்சேரியில் தெரிந்த வீட்டிற்குச் சென்றேன்" என்னும்போது **பெருமிதமும்** "அங்கு வீட்டார் பூமியிலுள்ள மிளகு புள் போல் பறக்குமா, புதுவையிலுள்ள மிளகு புள் போல் பறந்தது. எனக்கு வயது எண்பதாயிற்று. இந்த வியப்பை எங்கேயும் பார்த்ததில்லை" என்னும் போது **வியப்பும்** வீட்டுக்காரி பாட்டாய்ப் பாடினாள் என்னும் போது **இழிவும்** ஆகிய துணையுணர்வுகள் தோன்றி மறையத் தலைமை மனக்கிளர்ச்சி தூண்டப்பெற்று **ஆசம்**(hasya) என்னும் இரசம் வெளிப்படக் காணலாம்.

## கருணை

சங்க இலக்கியங்களில் கருணை பயின்று வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.[104]

"தோழீ! விடியற்காலத்தில் மழை பெய்துவிட்ட நல்ல நெடிய மலையினின்று கரிய கடலின் அலைபோல இழிகின்ற அருவி அகன்ற பெரிய காட்டினிடத்துப் பரந்து ஓடியடங்கும் அழகை நோக்கி அடக்கவும் தடைப்பட்டு நில்லாது அழகிய குளிர்ந்த கண்கள் நீரைப் பெருக்கி அழுதலாலே அதனைக் கண்ட அன்னை, என்னை நோக்கி, நீ ஏன் அழுகின்றாயோ. நின் விளங்கிய எயிற்றினை முத்தங் கொள்வேன் என்று மென்மையாகிய

104. நற். 17

இனிய மொழிகளைக் கூறுதலாலே விரைந்து உயிரினும் சிறநத நாணும் நனி மறநது. "சாரலின் கண்ணுள்ள காந்தளின் தேன் உண்ட நீலமணி போலும் நிறத்தையுடைய வண்டு யாழிற் கட்டிய இனிய நரம்பு ஒலித்தல் போல ஒலிக்கும் விசும்பிலோங்கிய வெற்பனது மார்பைப் பிரிந்தமையால் வந்த வருத்தததிறகு அழுகிறேன்" என்று கூறத்தொடங்கித் தவிர்ந்துய்ந்தேன"

தலைவன் சிறைப்புறததானாகத் தலைவி தோழிக்குரைப்பாளாயச சொல்லுகிறாள் என்பது பாடல் துறையாகும.

ஈங்குத் தலைவன் **ஆலம்பன விபாவம்**

குன்றத்து இழிதரும் அருவி அகலிருங்கானத்துப பரந்து ஓடியடங்கும் காட்சி, காந்தளை ஊதிய மணிநிறத்தும்பி இனிமையாக ஒலிததல் ஆகியன **உத்தீபன விபாவம்**. இங்குக் காந்தளை ஊதிய மணிநிறத் தும்பி இனிமையாக ஒலிக்கினற வெற்பு என்பது களவொழுக்கத்தை நுகர்ந்து தலைவன் அதிலேயே விழைவு காட்டி நிற்கிறான் என்ற குறிப்புப் பொருளைத் தோற்றுவித்துக் **கருணாரசத்தைத்** தோற்றுவிகக மிக்க துணை புரிகிறது.

தலைவி கண்கறுத்தல், தாய் முத்தங் தருவதாக மெல்லிய கூறல், தலைவி நாணும் நனிமறந்து களவொழுக்கம் உரைக்க முற்படல் ஆகியன **அனுபாவம** எனலாம்.

"விடியற்காலத்து நல்ல மழை பெய்துவிட மலையினின்று கடலின் அலைபோல இழிகின்றஅருவி காட்டில் பரந்து ஓடியடங்கும் அழகு என்னும்போது **மகிழ்ச்சியும்**. அவ்வழகிய காட்சி முன்பு தலைவனாடு அருவியாடியமை முதலியவற்றைப் பற்றிய எண்ணத்தைத் தோற்றுவிக்க "அடக்க மாட்டாமல் தலைவியின் கண்கள் நீர் பெருக்கின" என்னும்போது **துன்பமும்** அன்னை "ஏன் அழுகிறாயோ? நின்னை முத்தங் கொள்வேன்" என்று மென்மையாகிய இனிய மொழிகள் கூறியபோது மீண்டும் **மகிழ்ச்சியும்** அவ்வாறு அன்னை சொற்றபோது "காந்தளின் தேனுண்ட நீலநிற வண்டு யாழிற்கட்டிய இனிய நரம்பு ஒலித்தல் போல ஒலிக்கும் விசும்பிலோங்கிய வெற்பனது மார்பைப் பிரிந்தமையால் வந்த வருத்தத்திற்கு அழுகிறேன் என்று சொல்லத் தொடங்கி அபபால் தவிர்ந்துய்ந்தேன்" என்று தலைவி சொல்லும்போது **நாணம், அச்சம்** ஆகியனவும் தோன்றுகின்றன

மற்று நாணமும் அச்சமும தோறறுவிதத மேறசொனன பகுதி முறைத் தோற்றத் தொனியால தேனுண்ட வண்டுபோல் களவொழுக்கத்தை நுகர்ந்த தலைவன அதனையே நாடுகிறான என்று பொருளைத் தோற்றுவிககும்போது **வெறுப்பும் வெருளியும்** ஆகிய துணையுணர்வுகளும் தோன்றி மாறித் **துயர்**(soka) என்னும் தலைமை மனக்கிளர்ச்சியால கருணாரசம் தோன்றுகின்றமை உணரலாம.

பாரதிதாசன் பாடல்களில் இக்கருணாரசம் பயினறு வநதுள்ளது. பின்வரும பாடல்பகுதியைக் காணலாம்.[105]

"வாழ்கின்ற மாந்தர்களுக்கு வான்மழையைப் போன்றது, மணாளர் வந்தெனக்குத்தரும் இன்பமாகும். தோழி அவரின்றி நான் படும துன்பத்தைச் சொலலிக காட்டுமளவில் இல்லை. சிறிய கொம்பானது பெரிய பழத்தைத தாங்குவது போல் என சிறிய உயிரானது பெரிய காதலைத் தாங்கிக் கொண்டிருப்பதனால, வீரத்தமிழன் வராவிட்டால உடலைவிட்டு ஆவியானது மளுக்கென்று முறியும், மற்றவர் செய்த தீமையை மறைப்பதுதான் மறதி, "இறந்து போவாளே, யான்போக வேண்டும்" என்பதில் மறதி ஏற்பட்டால், அந்த மறதியே என்னுடைய இறுதியாகும்".

தலைவிக்கு மிக்க துன்பத்தைத் தந்து பிரிந்த தலைவன் **ஆலம்பன விபாவம்** ஆகிறான். சிறுகொம்பானது பெரிய பழத்தைத் தாங்குவது **உத்தீபன விபாவம்** ஆகும்.

"தலைவி நான்படும் தொல்லை சொல்லிக்காட்டல லேசில் இல்லை" எனல், தலைவியைப் பிரிந்த தலைவியின் உயிர் உடனடியாக நீங்கும் என்பதாகக் கூறுதல், உள்ளம் வருந்துதல் ஆகியன **அனுபாவங்கள்** எனலாம்.

இப்பாடலில் வாழ்கின்ற மாந்தர்களுக்கு வான்மழையைப் போன்றது மணாளர் வந்தெனக்குத் தரும் இன்பமாகும் என்னும் போது **மகிழ்ச்சியும்** "தோழீ! அவரின்றி நான் படும் துன்பத்தைச் சொல்லிக் காட்டுமளவில் இல்லை" எனனும்போது **வருத்தமும்** "சிறிய கொம்பானது பெரிய பழத்தைத் தாங்கிக் கொண்டிருப்பது போல என் உயிரானது உடலைத் தாங்கிக் கொண்டிருப்பதனால் தலைவன் வராவிட்டால் உடலைவிட்டு ஆவியானது உடனடியாக நீங்கும்" என்னும்போது **இரக்கமும்** தலைவனை மறத்தமிழன் என்னும்போது **பெருமிதமும்** ஆகிய துணையுணர்வுகள் தோன்றி மறையத் **துயர்** (soka) என்னும் தலைமை மனக்கிளர்ச்சியால் **கருணாரசம்**(karuna rasa) தோன்றுகின்றமை உணரலாம்.

105. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள, ப. 1051

## வெகுளி

சங்க இலக்கியத்தில் வெகுளி பயினறு வநதுள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.[106]

"இவளே (தலைவி) காவற் சோலையிற் பொருநதிய அழகிய சிறுகுடியின்கண் வாழ்கின்றவரும் நீலநிறப் பெருங்கடல கலங்கச் சென்று வலைவீசி மீனைப் பிடிக்கின்றவரும் ஆன பரதவர் மகள். நீ கண்டாய். நெடிய காற்றாலசைதது நுடங்கும் கடைத தெருக்களையுடைய பழைய ஊரிலுள்ள கடுகிச் செல்லும் தேரையுடைய செல்வருக்குக காதல் மகனாவாய், நிணம் மிக்க சுறா மீன்களின் அறுத்த தசைகளைக் காய வைத்தல வேண்டிக் கவரவரும் புள்ளினங்களை ஓட்டிக் காவல் புரிந்துறையும் எம்முடைய நலன யாது பயன் தருவதாகும்? புலால் நாற்றம் நாறுகின்றோம். பெருங்கடலில் விளையும பொருள் கொண்டு வாழும் எமது சிறிய நல்ல வாழ்க்கை, நும் உயரிய வாழ்க்கைக்கு ஒத்ததன்று. எம்மவர் குடிக்குரிய செம்மையியல்பு அதற்கு உண்டு."

ஈண்டுத் தலைவன் **ஆலம்பன விபாவம்.**

நீலநிறப் பெருங்கடல், காவலைப் பொருந்திய சிறுகுடி, அச்சிறுகுடிப் பரதவர் பெருங்கடல் கலங்கச் சென்று மீனெறிதல், நிணச்சுறா உணங்கலைக் கவரவரும் புள்ளினங்களை ஓட்டல் ஆகியவை **உத்தீபன விபாவம்.**

"பெருங்கடல் கலங்கச் சென்று மீனெறியும் பரதவர் மகள்" என்றமை "தலைவன் கலக்கத்திற்கு இரங்காள்" என்னும் பொருளை முறைத் தோற்றத்தொனியால தோற்றுவிக்கக் காணலாம். அதுபோலவே "புள்ளினம் ஓட்டும் எமது நலன் யாது பயன்தருவதாகும்?" என்றமை, "தலைவன் வரினும் அவனைச் சேட்படுப்பர்" என்னும பொருளைக் குறிப்பால் தோற்றுவித்தல் காணலாம்.

"நீலநிறப் பெருங்கடல் கலங்கச் சென்று வலைவீசிப் பிடிக்கின்ற பரதவர் என்னும்போது வீரமும், "நெடிய கொடிகள காற்றாலசைந்து நுடங்கும் கடைத தெருக்களையுடைய பழைய ஊரிலுள்ள கடுகிச் செல்லும் தேரையுடைய செல்வனுககு மகன்" என்னும்போது **செல்வச் செருக்கும்**, "சுறாமீன் தசைகளைக் காய வைக்கப புள்ளினங்களை ஓட்டிக் காவல் புரிநதொழுகும் எம்முடைய நலன யாது பயன் தருவதாகும்?

106. நற். 45

புலால் நாற்றம் நாறுகின்றேம்'' என்னும் போது **அருவருப்பும்** "பெருங்கடலில் விளையும் பொருள் கொண்டு வாழும் எமது சிறிய நல்ல வாழ்க்கை, நும் உயரிய வாழ்க்கைக்கு ஒத்ததன்று" என்னும் போது **வியப்பும்** ஆகிய துணையுணர்வுகள் தோன்றி மறையக் **குரோதம்** (kroda) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி கிளரப் பெற்று **உருத்திர ரசம்** (raudra rasa) தோன்றுமாறு காணலாம்.

இவ்வாறே பாரதிதாசன் பாடல்களிலும் வெகுளி அமைந்து வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பகுதியைக் கருதலாம்.[107]

"போனால் போகட்டுமே" எனத் தொடங்கும் பாடலில்,

"தலைவனைப் பிரிந்த தலைவி பசும்பொன்னாயிருந்தவன் பித்தளையாகப் போய்விட்டான். ஆனாலும் அன்பை மறந்தான். அந்த ஆந்தைக் கூட்டிற் புறாவாகப பறந்தான். ஊனாய்ப் போன பசுவில், பால் கறந்தான். அவன், உள்ளத்தில் அன்பில்லாதவளால் சீர் அழிந்தான். போனால் போகட்டுமே.

வாழ்க்கையில் பங்கேற்றவள் நானா? வரவை எதிர்பார்க்கும் அம்மங்கையா? துன்புற்ற நேரத்தில் தளர்ச்சியடைந்தேனா? அவன் தழைத்திருந்தபோதும் தலைநிமிர்ந்தேனா? போனால் போகட்டுமே.

அவன் காலில் பட்ட துரும்பு என் கண்ணில் பட்ட இரும்பு கடிந்து பேசினாலும் அது எனக்குக் கரும்பாகும். தோலில் தோன்றுமா தேனீ ? சோலையிலன்றோ இருக்கும் முல்லை அரும்பு? போனால் போகட்டுமே" என்று தலைவன் பிரிவிடைத் தலைவி வருந்துகின்றாள்.

தலைவியிடத்துத் தோன்றும் பிரிவுத் துன்பத்திற்குக் காரணமான தலைவன் **ஆலம்பன விபாவம்** ஆவான்.

ஆந்தைக் கூட்டிற் பறந்த புறா, ஊனாய்ப் போன பசு ஆகியன **உத்தீபன விபாவம்** எனலாம்.

தலைவன் காலில் பட்ட துரும்பைக் கண்ணில்பட்ட இரும்பாக நினைத்துக் கலங்குவது **அனுபாவம்** ஆகும்.

107. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1620

"தலைவன போனால போகட்டுமே. பொன்னாயிருந்தவன பித்தளையாய அங்கே போனால போகட்டுமே" என்னுமபோது **வருத்தமும்**, "அவன் உள்ளத்தில் அன்பில்லாதவளால சீர அழிந்தான போனால போகட்டுமே" என்னும் போது **சினமும்** "காலில பட்ட துரும்பு என கணணில பட்ட இருமபு" என்னும போது **இரக்கமும்.** "அவன கடிநது பேசினாலும அது எனககுக கருமபாகும்" என்னும் போது **அன்பும்** ."தோலில தோன்றுமா தேனீ, சோலையிலன்றோ இருக்கும் முல்லை அரும்பு" என்னும் போது **பெருமிதமும்** ஆகிய துணையுணர்வுகள் தோன்றி மறையக் **குரோதம்** (kroda) என்னும் தலைமை மனககிளர்சசி கிளரப்பெற்று, **உருத்திர இரசம்** (raudra rasa) வெளிப்படக் காணலாம்.

## வீரம்

சங்க இலக்கியத்தில் வீரம் பயின்று வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.[108]

"மலைச்சுரத்து நீண்ட நெறியில் குருதி வேட்கையோடு அச்சத்தையூட்டும் வலிய புலி மிக்க வலிமை சான்ற இளமையுடைய களிற்றின் வரவு நோக்கியிருக்கும் மரங்கள் நிறைந்த சோலை நிரம்பப் பூழிநாட்டவரின் ஆடுகள் நாட்காலை உணவை மேய்வது போல, மாரிக்காலத்து வைகறைப் பொழுதில் கரடிகள் மேயும். அத்தகைய நெறியில் நீ என்னை விரும்பி வருதல் ஏனோ?" எனப் பலவாறு வருந்திக் கூறி அழுகின்ற அழகிய மாமை நிறம் பொருந்திய அரிவையே. கொல்லி மலையின் மேற்குப் பகுதியில் பூத்ததால் புதிதாக நிறுவப்பட்ட பாவை விரிக்கின்ற கதிர்களையுடைய இளஞாயிற்றின் பொன்வெயிலிற் காணப்பட்டாற்போலும் நின் அழகிய நலத்தைக் கருதி வருங்காலத்து மலையடியிலுள்ள நெறியானது எமக்குத் துணையாகும்."

ஆற்றது ஏதமஞ்சி வருந்திய தலைவியைத் தேற்றித் தலைவன் சொல்லுகிறான்
என்பது பாடல் துறையாகும்.

ஈங்குத் தலைவனும் தலைவியும் **ஆலம்பன விபாவம்.**

குருதி, வேட்கையொடு, புலி, களிற்றின் வரவு பார்த்திருக்க மாரிக்காலத்து வைகறைப் பொழுதில் மிகப்பல கரடிகள் மேயும் மலைச்சுரத்து நீண்ட நெறி **உத்தீபன விபாவம்.**

108. நற். 192

தலைவி பல வருந்திக்கூறி அழுதல் **அனுபாவம்** எனலாம்.

"குருதி வேட்கையொடு, புலி, களிற்றின் வரவு நோக்கியிருக்க மாரிக்காலத்து வைகறைப் பொழுதில் கரடிகள் மேயும் மலைச்சுரத்து நீண்ட நெறி" என்னும் போது **அச்சமும்**, "அத்தகைய அச்சமிக்க நெறியில் தன்னை நயந்து வருதல் என்னை கொல் எனப் பலவாறு தலைவி வருந்திக் கூறி அழுதனள்" என்னும்போது **வருத்தமும்,** "கொல்லி மலையின் மேற்குப் பகுதியில் பூதத்தால் புதிதாக நிறுவப்பட்ட பாவை விரிகின்ற கதிர்களையுடைய இளஞாயிற்றின் பொன் வெயிலிற் காணப்பட்டாற்போலும் நின் அழகிய நலத்தைக் கருதி வருங்காலத்து மலையடியிலுள்ள நெறியானது எமக்குத் துணையாகும்" என்று தலைவன் சொல்லும்போது **சிருங்காரம், வியப்பு** ஆகியனவும் துணையுணர்வுகளாகத் தோன்றி மறைய **உற்சாகம்** (utsaha) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி எழுப்பப் பெற்று **வீர இரசம்** (vira rasa) தோன்றுதல் உணரலாம்.

அகப்பொருள் கூறும் நற்றிணையில் இவ்விராசம் மிகவும் அரிதாகவே காணக்கிடக்கின்றது.

இவ்வாறே பாரதிதாசன் பாடல்களிலும் வீரம் அமைந்து வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பகுதியைக் கருதலாம்.[109]

"என்னுடைய மலருடலைக் குன்றுநேர் தோளைக் கொண்ட தலைவன் அணைத்தான். அவ்வின்பத்தை ஒரு நொடியும் என்னால் மறக்க இயலாது. அவன் பிரிந்ததை எவ்வாறு பொறுப்பேன்? வான் நிலவு, வன்மையான காற்று, தென்றல் ஆகியவை என்னை உருக்கின, கிளியின் மொழி காதைக் கிழித்தது. பூ வாசனையோ நெடியானது. "தலைவனின் காலடி ஓசையைக் கேட்டு அவன்தான் வருகிறான் என்று சொன்னாள்.

தலைவன் "என் அன்பு மயிலே, போர்ப்படை கிளம்பிற்று முரசொலியைக் கேள் எனக்கு விடை கொடு பெண்ணே என் உயிரை வாங்க வந்தாய் என் வாய் ஒன்றும் சொல்லாது பார்ப்பாயாக!

நம்மைப் பெற்று உடலையும் உயிரையும் பொருளையும் கொடுத்த கடலுக்கு நிகரான பாண்டிய நாட்டைப் பகைவன் சூழ்ந்தான். குறைவிலாத புகழையுடைய தொன்மை வாய்ந்த பழங்குடியில் வந்த பெண் நடுங்குவது தக்கதோ. என்னவென்று வா எனக்

109. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், பக். 261 - 263

களிப்பொடும் சிரிப்பொடும் அனுப்பிவை" எனத தலைவன கூறினான். அதைக் கேட்ட தலைவி, "வாழையடி வாழையாக வந்த என் பெருமை வாழ்க" என வாழ்த்தி அனுப்பினாள்

பகைவனோடு செய்த வாட்போரில் அவன் மார்பில் வாள் பாய்ந்தவுடன் அவளிடம் யார் இதைச் சொல்வாரென நினைத்த பொழுது, வானில் பறந்த பறவையிடம் மாபெரும் வீட்டில் உலவாத மேனியையும், பேசாத செவ்வாயையும் இமைக்காத வேற்கண்ணையும் உடைய அவளிடம் சென்று உன கணவன தாய்நாட்டிற்கு உயிரைக கொடுத்தான் எனக் கூறு எனச் சொல்லிக் கொண்டே, நாடே பெண்ணே" என மீளா விடைபெற்றான்.

ஈங்குப் பகைவரோடு போரிட்ட தலைவன் **ஆலம்பன விபாவம** ஆவான்.

வான் நிலவு, வன் காற்று, தெனறல், பறவை ஆகியன **உத்தீபன விபாவம்.**

தலைவி பேசுதலும் தலைவன் பேசுதலும் பெண்நடுங்குவதும் **அனுபாவம்** எனலாம்.

தலைவனின் அணைப்பிலிருந்த தலைவி அவனைப் பிரிய முடியவில்லை என்னும்போது **வருத்தமும்** வான் , நிலவு, வன்காற்று, தென்றல், கிளிமொழி, பூ வாசம் ஆகியன எல்லாம் என்னைத் துன்புறுத்தின என்னும்போது **வருத்தமும்**" போருக்குச் செல்லும் தலைவன் நம்மை உருவாக்கியதோடு உடலையும் உயிரையும் புகழையும் கொடுத்த நாட்டிற்காக நம் உயிரையும் கொடுக்க வேண்டும்" என்னும்போதும் அதைக் கேட்ட தலைவி "வாழையடி வாழையாக வந்த என் பெருமை வாழ்க" என வாழ்த்தி அனுப்புகிறாள் என்னும்போதும் **பெருமிதமும்** பகைவரோடு போர்புரிந்து மறப்புண்ணோடு உயிர்விடும் நேரத்தில், வானில் பறந்த பறவையிடம் "தாய் நாட்டிற்காக உன் கணவன் உயிரைக் கொடுத்தான் எனச் சொல்" எனச் சொன்னான் என்னும்போது **வருத்தமும்** ஆகிய துணையுணர்வுகள் தோன்றி மறைய **உற்சாகம்** (utsaha) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி எழுப்பப் பெற்று **வீர இரசம்** (vira rasa) தோன்றுதல் உணரலாம்.

**அச்சம்**

சங்க இலக்கியத்தில் அச்சம் பயின்று வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.[110]

"பெரிய குளிர்ச்சியுடைய குன்றத்தில், வலிய ஈத்த மரங்களையுடைய காற்றுச் சுழன்று வீசும், காட்டின் கண்ணே, இரத்தம் பூசிய வாயையும், பெரிய தலைகளையும் உடைய புலிக்குட்டிகள் மறைந்திருக்கும் சுரத்திலே மாலைப்பொழுதில் கூரிய பற்களையும் மெல்லியல்பையும் உடையவள் ஆகிய தலைவியை முன்னே செல்லவிடுத்துப் பின்னே இவ்விரவுப் பொழுதிலும் செல்கின்ற இந்த இளைஞனின் உள்ளம் கற்கள் புரண்டுவிழுமாறு மோதுகின்ற இடியைக்காட்டிலும் கொடியது" என்கின்றனர் கண்டோர்.

கண்டோர்க்கு அச்சம் தரும் வகையில் கொடிய சுரத்தைத் தலைவியுடன் இரவிலும் கடக்கும் தலைவன் **ஆலம்பன விபாவம்** ஆவான். இண்டங்கொடியுடன் பின்னிப் படர்ந்த ஈங்கையையுடைய சுரநெறி **உத்தீபன விபாவம்** எனலாம்.

இப்பாடலில், காற்றுச்சுழன்று வீசும் காட்டிலே இரத்தம் பூசிய வாயினையுடைய புலிக்குட்டிகள் மறைந்திருக்கும் சுரநெறி என்னும் போது **அச்சமும்**, தலைவியை முன்னே செல்ல விட்டுப் பின்னே காத்துச்செல்லும் தலைவன் என்னும்போது **வீரமும்**, கொடுஞ்சுரத்தில் இரவுப்பொழுதில் தலைவியைத் தலைவன் அழைத்துச் செல்கிறான் என்னும்போது **வியப்பும்** ஆகிய துணையுணர்வுகள் தோன்றி மறைய, **பயம்** (baya) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி கிளரப்பெற்றுப், **பயானக இரசம்** (bayanaka rasa) தோன்றக் காணலாம்.

இவ்வாறே பாரதிதாசன் பாடல்களிலும் அச்சம் அமைந்து வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பகுதியைக் கருதலாம்.[111]

"தோழீ! முல்லை மலர் கேட்டேன். இல்லையெனச் சொல்லாமல் முடித்துக் கொள் என்றார். புல் கொல்லையில் வளர்ந்தாலும் அதில மணமிருக்காது. நீண்ட தொலைவில் அடர்ந்துள்ள முல்லை மலர் கேட்டேன். மாமரக் கொம்பைத் தழுவிக் கொண்டிருக்கும் மலர்க்கொடியை அறுப்பார் உள்ளாரோ? பூங்காட்டில் உலவும் வண்டைப் போ போ என்றார். அதனால் என்ன பயனைக் கண்டார்? தூங்கா விளக்கிற்கும்

110. நற். 2
111. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1625

சுடருக்கும் ஏற்பட்ட தொடர்பைத துணடிப்பதால் இடர்வந்து சேராதோ என்பதால் முல்லைமலா கேட்டேன்.''

"முல்லை மலா் கேட்டேன்'' எனத தொடஙகும பாடல் தலைவி தலவனைப் பற்றித் தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளது.

தலைவியின் அச்சத்திற்குக் காரணமான தலைவன் **ஆலம்பன விபாவம்** ஆவான் மாமரக் கொம்பைத் தழுவிக் கொண்டிருக்கும் மலா்க்கொடி **உத்தீபன விபாவம்** எனலாம்.

இப்பாடலில், ''முலலை மலா் கேட்டவுடன இலலையெனச் சொல்லாமல முடித்துக் கொள் என்றாா்'' என்னும்போது **மகிழ்ச்சியும்** " மாமரக் கொம்பைத தழுவிக் கொண்டிருக்கும் மலா்க்கொடியை அறுப்பாா் உள்ளாரோ? " என்னும்போது **சினமும்** " பூங்காட்டில் உலவும் வண்டைப் போ போ என்றாா்'' அதனால் என்ன பயனைக் கண்டாா்? தூங்கா விளக்கிற்கும் சுடருக்கும் ஏற்பட்ட தொடா்பைத் துண்டிப்பதால் இடா்வந்து சேராதோ?' என்னும்போது **வருத்தமும்** ஆகிய துணையுணா்வுகள தோன்றி மறையத் தலைமை மனக் கிளா்ச்சியான **பயம்** (baya) கிளரப்பெற்றுப் **பயானக இரசம்** (bayanaka rasa) தோன்றக் காணலாம்.

## வெறுப்பு

சங்க இலக்கியத்தில் வெறுப்பு பயின்று வந்துள்ளது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.[112]

பிரிவிடைந் தலைவிய தருமை கண்டு தூதுவிடக் கருதிய தோழிககுத் தலைவி சொல்லுகிறாள். "தோழீ! காதலா் எவ்வளவு சிறப்புடையவராயினும், இனி அவரை நினைத்தலை விட்டொழிவாயாக. என் மெலிவெல்லாம் அவ்வண்ணமே அமைக. அவற்றை எண்ணி வருந்தாதே. நாம் இவ்வாறு வருந்தக் கைவிட்டுச் சென்ற அவா் நட்பு யாது பயன் செய்யும்? மரல் நாரால் பின்னிய உடையினையுடைய குறவா் தம் அறியாமையினால் மேற்பட்டை அறுத்துச் சிறிய இலையையுடைய சந்தன மரத்தில் வற்றல் தொடங்கி மிகக்கெட்டு மெல்ல மரம் வறிதாகத் தளா்ந்து வீழ்ந்தாற்போல் என் அறிவும் உள்ளமும் அவரிடத்துச் சென்று விடவே என் உடம்பு உள்ளில் யாதும்

112. நற். 164

இலலையாய் நின்றது இனி, அவர் இங்கு வநதாலும என் நோய்க்குரிய மருந்தாகாா ஆதலில், காதலர் அங்கேயே இருபபாராக இங்குக காமமும் நினைவும் நம்மை ஒறுத்தலாலே வருந்திய நோய்மலி வருத்தத்தையும் அவர் காணாதொழிவாராக''

ஈங்குத் தலைவன் **ஆலம்பன விபாவம்** தலைவியின் அறிவும் உள்ளமும் தலைவன்பால் சென்றுவிட உடம்பு சோர்ந்து மெலிவாயினமை அனுபாவம

''காதலரை எவ்வளவு சிறப்புடையராயினும இனி அவரை நினைத்தலை விட்டொழிவாயாக. என் மெலிவெலலாம் அவவண்ணமே அமைக அவற்றை எணணி வருந்தாதே'' என்னும்போது **வியப்பும்**, ''குறவா தம் அறியாமையினால் மேற்பட்டையை அறுத்த சந்தன மரத்தில் வற்றல் தொடங்கி மிகக்கெடடு மெல்ல மரம் வறிதாகத தளர்ந்து வீழ்ந்தாற்போல என் அறிவும் உள்ளமும தலைவியிடத்துச் சென்று விடவே என் உடம்பு உள்ளில் யாதும் இல்லையாய் நினறது. இனி அவர் வரினும் நோய்க்குரிய மருந்தாகார்'' என்னும்போது **வருந்தலும்** '' காதலா அஙகேயே இருப்பாராக. இங்குக காமமும் நினைவும் நம்மை ஒறுத்தலாலே வருநதிய நோய்மலி வருத்தத்தையும் அவா காணாதொழிவாராக'' என்னும் போது **வெருளியும்** துணையுணர்வுகளாகத் தோனறி மறைய சூகுப்சம் (jugupsa) என்னும் தலைமை மனக்கிளர்சசி தூண்டப்பட்டுப் **பீபத்சம** என்னும் இரசம் (bibatsa rasa) தோன்றக் காணலாம்.

இவ்வாறே பாரதிதாசன் பாடல்களிலும வெறுப்பு வந்துள்ளது எடுத்துக்காட்டாகப் பின்வரும் பகுதியைக் கருதலாம்.[113]

''மேனி தெரிய வெங்காயத்தோல் சேலைகட்டி மானம் விற்றவள் மனைவியா? அவள் மாந்தோப்பில் என்னைக் கண்காட்டி அழைத்தாள்.

அவள் பேச்சில் தேனும் உதட்டில் சிரிப்பும் இருந்தால் நான் மயங்கி விடுவேனா? அவள் மாந்தோப்பில் என்னைக் கண்காட்டி அழைத்தாள்.

கூந்தலிலே மணமிருந்தாலும், நடையினிலே அழகிருந்தாலும் பாங்காய் அமைந்திருக்க வேண்டாமா? கேள். அவள் செய்யும் தீமையை யார் பொறுப்பார்.?

கண்களில் அமிழ்தும் முகத்தினில் அழகும் தமிழர்க்குரிய தன்மான உணர்ச்சியும் வேண்டாமா? நாம் தலைகுனிந்து வாழும் நிலையைப் பெற்றோமோ''.

113. பாரதிதாசன், பாரதிதாசன கவிதைகள, ப. 446

ஈங்குத் தலைவி **ஆலம்பன விபாவம்** வெங்காயத் தோல் சேலை. மாந்தோப்பு, தேன், கூந்தல் ஆகியன **உத்தீபன விபாவம்** எனலாம். தலைவன. கண்காட்டுதல், பெண்ணின் நடை, தலைகுனிதல் ஆகியவை அனுபாவம்.

இப்பாடல் தான் மணக்க விரும்பாத பெண்ணைப பற்றித் தலைவன் கூறுவதாக அமைந்துள்ளது.

மேனி தெரியச் சேலை கட்டியவள் என்னும் போது **வெறுப்பும்** "அவள் பேச்சையும் சிரிப்பையும் கண்டு மயங்கி விடுவேனா? என்றும் போது **பெருமிதமும்** "கூந்தலில் மணமிருந்தாலும் நடையினில் அழகிருந்தாலும் பாங்காய் அமைந்திருக்க வேண்டும். அவ்வாறில்லை" என்னும்போது **வெருளியும்** "கண்களில் அமிழதும் முகத்தினில் அழகும் தமிழர்க்குரிய மானமும் வேண்டும் எனவும் நாம் தலைகுனிந்து வாழும் நிலையைப் பெற்றோமோ?" என்னும்போது **பெருமிதமும்** துணையுணர்வுகளாகத் தோன்றி மறைய **சூகுப்சம்** (jugupsa) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி தூண்டப்படடுப் **பீபத்சம்** என்னும் இரசம் (bibatsa rasa) தோன்றக் காணலாம்.

## வியப்பு

சங்க இலக்கியத்தில் வியப்புப் பயின்று வந்துளளது. எடுத்துக்காட்டாகப, பின்வரும் பாடல் பகுதியைக் கருதலாம்.[114]

"தினைக்கதிர்களை உண்டு மலையிடத்தே தம் இனத்துடன் கூடிக் காற்று ஒலியெழுப்பும் ஊதுகொம்பைப் போலக் கிளிகள் ஒலி செய்யும் மலைநாடனாகிய தலைவன், கூடியவழி எனது எழில் என்பால் பொருந்தித் தோன்றும். பிரியின், மணிகள் பதித்தலால் பொன்னின் ஒளி மழுங்குதல் போல, மாமைக்கவின் ஒலியிழக்குமாறு, பசலை தோன்றி என் அழகிய நலத்தைக் கெடுக்கும். அதனால், தண்ணிதாய்க் கமழும் நறிய மாலையணிந்த விறலோனாகிய அவன் மார்பு அசுணம் என்னும் பறவையைக் கொல்பவர் கை போல மிக்க இன்பமும் துன்பமும் உடையது".

தலைவன் பிரிவில், தலைவி கூறுகிறாள் என்பது பாடல் துறையாகும். இவ்விடத்துத் தலைவன் **ஆலம்பன விபாவம்.**

114. நற். 304

தினைக்கதிர்களை உண்டு மலையிடத்தே தம் இனத்துடன் கூடிக் காற்று ஒலியெழுப்பும் ஊது கொம்பைப் போலக் கிளிகள் ஒலி செய்யும் மலை **உத்தீபன விபாவம்** ஆகும். இப்பாடலில் உத்தீபன விபாவமும் அற்புத இரசத்தைச் சிறப்பாகத் தோற்றுவிக்கத் துணை செய்கிறது. கிளிகள் தினைக்கதிர்களை உண்டு இனத்துடன் கூடி ஊதுகொம்பைப் போல ஒலி செய்யும் என்றமை. குறிப்பினால், "தலைவியை வரைந்தெய்தி, பல்லுயிர் ஓம்பி மகிழ்ந்து வாழலாமே! கிளிகளும் உண்டு, இனத்துடன் கூடி, மகிழ்ந்து வாழும் மலைநாடனாயிருந்தும் அவ்வாறு செய்திலனே" என்னும் பொருளைப் பயந்து நிற்றலால் அப்பொருளில் புறத்தாக வியப்புத் தோன்றுதல் காணலாம்.

தலைவியின் மேனியில் பசலை தோன்றி அழகிய நலங்கெடுதல **அனுபாவம்** எனலாம்.

"தினைக் கதிர்களை உண்டு மலையிடத்தே தம் இனத்துடன் கூடிக் காற்று ஒலியெழுப்பும் ஊது கொம்பைப் போலக் கிளிகள் ஒலிசெய்யும் மலைநாடனாகிய தலைவன் கூடிய வழி எனது எழில் என்பால் பொருந்தித் தோன்றும்" என்னும்போது **மகிழ்ச்சியும்**, "பிரியின் மணிகள் பதித்தலால் பொன்னின் ஒளி மழுங்குதல் போல என் மாமைக்கவின் ஒலியிழக்குமாறு, பசலை தோன்றி, என் அழகிய நலத்தைக் கெடுக்கும்" என்னும்போது **வருத்தமும்**, தண்ணிதாய்க் கமழும் நறிய மாலையணிந்த விறலோனாகிய அவன் (தலைவன்) மார்பு" என்னும்போது சிருங்காரமும் துணையுணர்வுகளாகத் தோன்றி மறைய **விஸ்மயா** (vismaya) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி கிளரப் பெற்று, அத்புத இரசம் தோன்றக் காணலாம்.

இவ்வாறே பாரதிதாசன் பாடல் பகுதியைக் கருதலாம். எடுத்துக்காட்டாகப பின்வரும் பகுதியைக் கருதலாம்.[115]

"உலகத்தில் உள்ள மானிடர்களிலே முழுநிலவு இவளோ? ஒரு சேல் இணையினை ஒத்த நேரான இருவிழி அழகிய உதடு; முழுநிலவு போன்ற முகம்; வான் மழைதான் இருண்ட கூந்தல்; உயிர் வண்டு சுற்றும் மலர் சூடிய முடியோடு இவளிரு மத்தகம் ஒத்த தனத்தோடு சித்தமினித்திட நிற்பது மிகவும் வியப்பு மலர் போன்றவள் வாயினைத் திறந்தொரு சொற் பேசமாட்டாளோ?.

தேன் நிறைந்த மலர் மாலைக்கு நிகரான உடலினையுடைய பெண் மிக

115. திருவாசகன், ஆ., பாரதிதாசன கவிதைகள், பக். 569-570

வேகமாகிய நடனமாடும் மயிலென்னும்படியான சாயலொடு குற்றமில்லாத கலைமான் என மருள்வாள். நடையோ அன்னநடை வாழகின்ற இவ்வுலகில் இவளருளால் சுகம் அதிகமாகும். இவள் கொண்டுள்ள புத்தமுதத்தை அடைய மறுப்பது எனக்கு வருத்தத்தைக் கொடுப்பதாகும். மதுவோடை போன்றவளை எனக்கு உணவாகத் தருவாளோ?

மிகப்பெரிய மயில் என்ற அனலிடையே என் உளளம் நோயுற்றதை அறியாத பெண்ணவளிடம் யார் சொல்வார்? அவள் தருகின்ற வாயிதழ் அமுதம் மிகப்பெரிய மருந்தாகும். இவ்வுலகில் ஆவியுமவளே, உடைமைகளில் முதன்மையானவளுமவளே. சிறந்த சிற்பக் கலைக்கோர் இலக்கியம் கொடுத்த சிலம்பை மிஞ்சிய அழகுடைய வஞ்சி என் வீட்டை நண்ணுவாளே!

விரும்புகின்ற தமிழ்நாடென்ற தாயடைகின்ற புகழோ, நாவலர்கள் இனிதே நாளும் ஓதிடும் தமிழோ ஒன்பது செல்வங்களோ, முழுநிலவோ. புதுக்காலமோ, வடிவழகில உள்ள உணர்வோ, மக்கள் உயிர் அடையக் கூடிய நற்சொல் இப்படியெல்லாம் என்னைக் கூற வைத்த சுகமான கடல் அவள் உள்ளமே கொஞ்சம் பொறுத்துக் கொள். வீழ்ந்து விடாதே.

தலைவனின் காதலுக்குக் காரணமான தலைவி **ஆலம்பன விபாவம்** முழுநிலவு சேல் இணைவிழி, அழகிய உதடு, வான்மழை இருங்கூந்தல், மத்தகம் ஒத்த இருதனங்கள் , மயில் சாயல் மருட்சி, புத்தமுதம், மதுவோடை, மலர்வாய் ஆகியன **உத்திபன விபாவம்** எனலாம்.

தலைவன் பேசுதல் தலைவியின் அன்னநடை, மானென மருளுதல் ஆகியன **அனுபாவம்** எனலாம்

“உலகத்தில் உள்ள மானிடர்களில் முழுநிலவு இவளோ” என்னும்போதும் தலைவியின் விழி, உதடு, முகம், கூந்தல், தனம் ஆகியனவற்றைக் கண்டு சித்தமினித்திட நிற்பது மிகவும் வியப்பு என்னும்போது **வியப்பும்** “மலர் போன்ற வாயினைத் திறந்தொரு சொற்பேசமாட்டாளோ?” என்னும்போது **வருத்தமும்** தலைவியின் உடையினையும் நடையினையும் மருட்சியினையும் கண்டு இவளருளால் சுகம் அதிகமாகும் என்னும் போது **மகிழ்ச்சியும்** தலைவியின் அன்பு கிடைக்கவில்லை என்னும்போது **வருத்தமும்** இவ்வுலகில் என் ஆவியும் உடைமையும் அவளே எனவும் சிற்பக் கலைக்கொரு இலக்கியம் கொடுத்த சிலம்பை மிஞ்சிய அழகு எனவும் கூறும்பொழுது **பெருமிதமும்** ஆகிய மேற்கூறிய துணையுணர்வுகள் தோன்றி மறைய விசுமயா(vismaya) என்னும் தலைமை மனக்கிளர்ச்சி கிளரப் பெற்று,**அத்புத இரசம்** தோன்றக் காணலாம்.

# ஔசித்தியக் கோட்பாடு

சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் சில ஔசித்தியக் கூறுகள் ஒற்றுமையுறக் கடைப்பிடிக்கப்பட்டுள்ளன. நில ஔசித்தியம், உரிப்பொருள், அகப்பொருள் முறை சார்ந்த ஔசித்தியம் ஆகியவற்றுள் சங்க இலக்கியப் பாடல்கட்கும் பாரதிதாசன் பாடல்கட்கும் ஒருமைப்பாடு காணப்படுகிறது.

வடமொழியில் சேமேந்திரர் என்பவர் வடிவமைத்த கொள்கையே ஔசித்தியம் ஆகும். ஔசித்தியம் என்பது ஒத்திசைவு (HARMONY) எனலாம். ஒரு நோக்கில் இதனை முழுமையான பொருளுக்கும் அதன் பகுதிகட்கும் அன்றித் தலைமைப் பொருட்கும் துணை நிற்கும் மற்ற பொருட்களுக்கும் இடையேயான அளவொத்த தன்மை எனலாம். கலையில் உள்ள அழகுகளை இதனுள் அடக்கலாம். ஔசித்தியம் பாடலின் உயிர்மூச்சாக (JIVITHA-LIFE-BREATH) விளக்கப்படுகிறது. ஒரு நிலையில் ஒத்திசைவாகவும், பிறிதொரு நிலையில் பொருத்தப்பாடாகவும் (APPROPRIATENESS) விளங்கும் ஔசித்தியம், தான் தனியாக உணரப்படுவதில்லை. பாடலின் உயிர் (soul) என்னும் இரசத்திற்குத் துணை நிற்கும் எல்லாப் பொருட்களின் பொருத்தப்பாடும் ஔசித்தியம் ஆகும்.[116]

## ஔசித்தியக் கொள்கை ஆய்வும் வளர்ச்சியும்

பரதர் தன்னுடைய நாட்டிய சாத்திரத்தில் ஔசித்திய விதிகளைப் பற்றி முதன்முதலில் கூறியுள்ளார். பிரவ்ருத்தி (PRAV.RTTI) என்னும் கொள்கைப்படி நாட்டின் பல உட்பிரிவுகளை ஒட்டியும் பல இனத்தவர்களுக்கு ஏற்பவும், ஒவ்வொரு நாட்டிற்குத் தகவும் ஆடை அணிதல் முதலிய பழக்க வழக்கங்கள் அமைதல் வேண்டும் என்று கூறுகிறார். மனநிலைக்கும் உணர்ச்சிக்கும் பொருந்திய ஆடை, ஒப்பனை ஆகியவற்றை அவர் விரிவாக விளக்குகிறார். அந்நூலின் ஒவ்வொரு தலைப்பின் இறுதியிலும் எது எதற்குப் பொருந்தும் என்று பேசுகிறார்.

மாகா (Maga) என்னும் புலவர் தனது சிசுபாலவதம் என்னும் காவியப்பாட்டில் ஔசித்திய விதியை அரசியல் சார்ந்த ஓர் எடுத்துக்காட்டின்மூலம் விளக்குவார். அரசனொருவன் தன் நோக்கம் நிறைவேற ஏற்ற பொருத்தத்தை எதிர்நோக்கியிருக்கக் காலமும் சூழ்நிலையும் அவன் கருத்தை முற்றுவிக்கும். வலிமையிலோ அடங்கியிருப்பதிலோ

116. Raghavan. Prof. V., An Introduction to Indian Poetics, P.013

நிலையான நன்மையில்லை, ஓர் அரசன் காலததுககு ஏற்ப ஏற்ற ஒன்றைப பயன்படுத்துவதிலேயே மிகக நன்மை உணடு. எனவே அரசனுக்கு நிலைமைக்குத் தக மாறுதல் ஒன்றே நன்மை செய்வது, "இரசம்", "பாவம் " இவற்றின் நுண்ணிய இயற்கை பற்றிய தெளிந்த அறிவு ஆகியவற்றோடு முதன்மையான தொடர்புடைய புலவனுக்கும அது பொருந்தும். அவன் தனது பாத்திரங்களையும் அவர்களின் செயல்களையும வடிக்கின்றபோது ஒரு குணத்தையே எங்கும் அமைத்தல் பொருந்துவதாகாது.

அடுத்துப் பாமகர், தண்டி ஆகியோரின் நூல்களில் சில இடங்களில ஒளசித்தியக்கருத்தைக் காணலாம். பிரகுருதியின பொருததத்தை நன்கு நோக்காமையால ஏற்படும் உலகு உண்மைகளினின்றும் இயற்கையினின்றும் மாறுபட்டுச் செல்லும் "லோக விரோதம் " என்னும் செய்யுள் குற்றத்தைக் கூறியுள்ளார் அதனோடே, பொதுவாக வெளியீட்டில் (EXPRESSION)குற்றமாகக் கருதப்படும் தேவையின்மை என்பது அச்சம, வருத்தம், பொறாமை, மகிழ்ச்சி, வியப்பு ஆகியவற்றை வெளிப்படுத்தச் சிறந்த பலனை தருவதாக எடுத்துக்காட்டுகிறார். தண்டியும் குற்றஙகளைப் பற்றிக கூறும்போது ஒளசித்தியக கொள்கையைப் பேசியுள்ளார்.

போசர் (BHOJA) சில வேளைகளில் குற்றங்களே குணங்களாகும கருத்தைக் குணம் (GUNA) என்னும் தலைப்பின் கீழ் வேசேசிக குணங்கள் (VAISESIKA GUNA) என்ற தனிப்பிரிவில் பேசியுள்ளார்.

8ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச சேர்ந்த யசோவர்மன் என்னும் கானோசி (KANANJ) அரசர் "இராமாபியுதா " (RAMABHUDAYA) என்னும் நாடகத்தின் முன்னுரையில ஒரு செய்யுளில் முதன் முறையாக ஒளசித்தியம் என்னும் கொள்கையை அப்பெயரில குறிப்பிடுவார். ஒரு நாடகம் கொண்டிருக்க வேணடிய பல நல்லியல்புகளை இங்கு அவர் குறிக்கிறார். அவற்றுள் முதன்மையானவை, பாத்திரங்களின் இயல்பிற்கும். தகுதிக்கும ஏற்ப எழுதப்படும் பேச்சாகிய வெளியீட்டு ஒளசிததியமும் (AUCITYA OF EXPRESION) பாத்திரங்களின் மனநிலையோடு இயைந்த வகையில் இரசத்தை ஒட்டிய இரச ஒளசித்தியமும் (AUCITYA OF RASA) ஆகும்.

பெருங்காவியங்களின அங்கங்களான நகா, மலை, பருவம் ஞாயிற்றின் தோற்றம், மறைவு முதலியவற்றின வருணனைகள பிறகாலப் புலவர்களால் கதையின் தேவைக்கு ஏற்பப் புனையப்படாமல் மிகுப புனையப்பட்டன. பரத சாத்திரத்தின் உரையாசிரியர் லொல்லடர் (Lollata) ஒவவொரு விளக்கத்திற்கும் ஏற்ற அளவும் சரியான பொருத்தமும் இருக்க வேண்டும் எனனும் ஔசித்தியத்தின் ஒரு கூறுபாட்டைச் சுட்டி மூன்று செய்யுட்களில் ஆராய்வார்.

இலக்கியத் திறனாய்வு வரலாறறில் (History of Poetics) உருத்திரடரின் பங்கு மிக இன்றியமையாதது. இவா, பழைய மதிப்பீட்டு முறைகளிலிருந்து இரசம், தொனி ஆகிய புதிய திறனாய்வு முறைகளுக்கு வர வழி செய்வார். ஆனந்தவர்த்தனரின் தொனியா லோகத்தில் மேலும் சிறந்த வகையில் விளக்கப்பட்ட "ஔசித்தியம்" பற்றிய கருத்துக்களை உருத்திரடர் கூறுகிறார். அவர், இரசத்தின் இன்றியமையாமையை உணர்ந்துள்ளார். அவ்விரசத்துக்குத் தக அமைக்கவே அலங்காரங்கள் உள்ளன எனவும் அவர் அறிந்துள்ளார். இரசமும் இரச ஔசித்தியமும் அலங்காரத்தை ஆளுகின்றன என்று உருத்திரடர் குறித்துள்ளார்.

ஆனந்த வர்த்தனர் தனது தொனியாலோகத்தின் முதற்கதிரிலேயே (Chapter) இரசம் அல்லது இரசத்தொனி பாடலின் உயிர் என்று அறுதியிட்டுக் கூறுகிறார். இரசம் என்று சொன்னால் ஔசித்தியம் அதற்கு மிக இன்றியமையாத ஒன்று. கருத்துக்கள், அலங்காரங்கள், நடை முதலியன இரசம் என்பதன் மேல் துலங்கும் ஆடை என்று கூறலாம். அவை இரசத்திற்கு ஏற்பப் பொருளோடும் (Vastu) அலங்காரங்களோடும் (Alankara) இயைபு (ஔசித்தியம்) கொள்ளும் போதே பொருள் உடையன என்று ஆனந்தவர்த்தனர் பேசுவார்.

ஆனந்த வர்த்தனர் பலவகையான ஔசித்தியங்களைப் பேசுகிறார். பத ஔசித்தியம் பற்றிப் "பததொனி" (PADA DHVANI) என்னும் பெயரில் ஆனந்தவர்த்தனர் குறிப்பிடுகிறார். முதன்மையான இரசத்தை எப்படித் தோற்றுவிப்பது, துணை இரசங்களை முதன்மையான இரசத்தோடு இயையுமாறு எப்படித் தோற்றுவிப்பது, எந்தெந்த இரசங்கள் ஒன்றற்கொன்று ஒத்துக்கொள்ளக் கூடியன, எவ்வெவை ஒவ்வாதன என்பன பற்றியும் சிருங்காரம் (srungara) கருணை முதலிய இரசங்கள் மிக நீளமாகச் சுவை குன்றும்

அளவுக்கு வளர்க்கப்படக் கூடாது என்பது பற்றியும் அவா ஆராய்ந்து கூறுவார். காவிய மீமாம்சம் (KAVYA. MIMAMSA) எனனும் நூலாசிரியர் இராசசேகரர், ஔசித்தியம் பற்றிக் குறிப்பிடுவார். கவிதைப் பண்பு என்பது தகுந்ததையும்(UCITA) தகாததையும் (ANUCITA) வேறுபடுத்துவதேயாகும் என்று ஔசித்தியம் பற்றிக் கூறியுள்ளார். இராசசேகரின் மனைவி அவந்தி சுந்தரி என்பவரும் ஔசித்தியம் பற்றி மிகுந்த ஆர்வம் காட்டினார். இரசத்திற்குத் தகுந்த பொருத்தமான கருத்துக்கள், சொற்கள, கற்பனைகள், கொள்கைகள் என்னும பலதிற வெளியீட்டு ஆற்றலைப் பெறுதலே பாபுனை ஆற்றலின் நிறைவு (PAKA) எனறு கூறுவார்.

ஔசித்தியக் கருத்துக்களை மேலும் தெளிவாக்கி வலுவாக்கிய சிறப்பு அபிநவகுப்தருக்கு உண்டு. ஆனந்தவர்த்தனரின் ஔசித்திய விளக்கத்தால் இரசம, தொனி எனும் கொள்கைகளினின்றும் (Doctrines) ஔசித்தியம் இயற்கையாக வெளிப்படுவது என்பதும் மூன்றும் பிரிக்க இயலாதன என்பதும உணரலாம்

ஔசித்தியம் என்பது ஓர் இயைபு. அந்த இயைபில் உள்ள பொருள்கள் எந்த ஒன்றிற்காக அவ்வாறு உள்ளன என்றால் இரசம் என்ற அந்த ஒன்றிற்காகவே என்றார் அபிநவகுப்தா். இரசம் இல்லாமல் ஔசித்தியம் பொருளற்றது என்றும் ஔசித்தியத்திற்கு இரசமும் தொனியும் தேவை என்றும் நிறுவிக்காட்டினார்.

குண்டகர் செய்யுளில் கண்ட இரணடு முதன்மையான உண்மைகள் பேசும் முறையும், அலங்காரம் (alan̄kara) அல்லது வக்ரோக்தி (vakrokti) எனும் அதன் அழகும் எனலாம். கருதிய சிறந்த கருத்தை மற்றவர்க்குத் தெளிவாக உணர்த்தப் பயன்படும் கவர்ச்சி மிக்க வெளியீட்டு முறையே ஔசித்தியம் என்று கூறலாம். கருத்தை முற்றிலும் புதிய கவர்ச்சி மிக்க அழகிய முறையில் அணிசெய்வதே ஔசிததியம் என்றும் சொல்லலாம் என்பது கருதத்தக்கது. சொல் (sabda) பொருள் (artha) முதலிய ஒவ்வொரு கூறு பற்றிய ஔசித்தியமும் கருத்து (vastu) அல்லது இரசத்தை விளக்குவதற்கே என்று எடுத்துக் காட்டுகிறார்.

அபிநவகுப்தரையும் குண்டகரையும் சற்று அடுத்துத் தொனிக்கோட்பாட்டை உடன்படாத மகிம பட்டர் முதன்மையானதாக இரசத்தையும் அடுத்து இரசம், பாவம், பிரகுருதி ஆகியற்றோடு தொடர்புடைய ஔசித்தியத்தையும் ஏற்றுக் கொண்டார்.

அபிநவகுப்தரின் மாணவரான சேமேநதிரா (Ksemendra) ஔசித்திய விசாரசர்சா (Aucitya vicaracarca) என்னும நூல் எழுதி ஔசித்தியத்தை ஒரு கோட்பாடாக நெறிப்படுத்தினார். அக்கோட்பாட்டை விரிவாக்கிக் காவியத்தில் எல்லாப் பகுதிகளுக்கும் ஏற்றிக் கூறினார் ஆனந்தவர்த்தனர், அபிநவகுப்தா ஆகியோரின் கருத்தை அடிப்படையாகக் கொண்டு சேமேந்திரர் ஔசித்தியக் கோட்பாட்டை முறைப்படுத்தி ஒழுங்கு செய்தார். சேமேந்திரர் இரசத்தை உயிர் (soul) என்றும் ஔசித்தியத்தை வாழ்வு (Life) என்றும் எடுத்துக் காட்டுவார்.

இவ்வாறாக ஔசித்தியக் கோட்பாடு இரசத்தையும் தொனியையும் சார்ந்து அவற்றிற்குத் துணையான (suppliment) நிலையிலேயே வளர்ந்தது என்பது குறிப்பிடத்தக்கது.[117]

## தொல்காப்பியரும் ஔசித்தியமும்

தொல்காப்பியர் ஔசித்தியம் என்ற சொல்லையோ, அதற்கு நேர் இணையான சொல்லையோ பயன்படுத்தவில்லை. ஆனால் ஔசித்தியம் பாடலில் அமைய வேண்டும் என அவர் கருதியுள்ளமை உணரலாம். அடிப்படையில் அவர் மிகப் பல கருத்துக்களைச் சொல்கிறார் என்பதை அறியமுடிகிறது.

தொல்காப்பியர் கூறும் நோக்கு, வண்ணம் ஆகியவற்றிற்கு ஔசித்தியத்தோடு உள்ள ஒப்புமையை' முனைவர், இராம,பெரிய கருப்பன் விளக்குவார். 'எழுத்துக்கள் அல்லது ஒலிகள் அழகுறப் பொருத்தமுறப் பொருளை உணர்த்தும் வகையில் பாடலில் அமைவதை வர்ண ஔசித்தியம் என்பார். தமிழில் எழுத்து அடிப்படையில் தொல்காப்பியர் கூறும் வண்ணங்களை, இதனோடு ஒப்பிடலாம். இதைக் காட்டிலும் "நோக்கு" என்ற கோட்பாடு ஔசித்தியத்திற்கு அணுக்கமுடையதாகும். மாத்திரை முதலாக அனைத்து உறுப்புகளையும்,காரணங்காட்டி மறித்து நோக்கும் வண்ணம் யாத்தமைப்பதே நோக்கு ஆகும்.[118]

117. Raghavan. Prof. V., An Introduction to Indian Poetics, P.103
118. சங்க இலக்கிய ஒப்பீடு, இலக்கியக் கொள்கைகள், ப. 252

## அகப்பொருள் (களவு, கற்பு) பாத்திரம், உரையாடல் பற்றிய ஔசித்தியம்

"கரு (களவு, கற்பு) பாத்திரப்படைப்பு, உரையாடல்கள் முதலியவற்றைக் குறித்து(த்) தொல்காப்பியர் கூறியிருக்கும் விதிமுறைகள் எல்லாம் ஔசித்தியக்கோட்பாட்டை(க்) காப்பதற்கே" என்பர்.[119]

## குறிஞ்சிநில ஔசித்தியம்

குறிஞ்சித் திணைப் பாடல்களில் அக்குறிஞ்சி நிலம் பற்றிய செய்திகளும, அந்நிலம் சார்ந்த திணைநிலப் பெயர்களும் அந்நிலம் சார்ந்த விலங்கு, பறவை, தாவரம் முதலிய கருப்பொருள்களும் பயின்றுவரக் காணலாம். எடுத்துக்காட்டாகச் சங்க இலக்கியங்களில் மலை, குன்று, சாரல், நீரூற்று ஆகிய நிலம் பற்றிய வருணனைகளும் நாடன் என்னும் திணைநிலப் பெயரும் குரங்கு, குயில், மயில் ஆகிய விலங்கு பறவைகளும் பலா, மிளகுக் கொடி ஆகிய தாவரங்களும் புனைந்துரைககப்பட்டுள்ளன. பின்வரும பாடலடிகள் நோக்கத்தக்கன.

"**இனமயில்** அகவு மரம்பயில் கானத்து
நரைமுக ஊகம் பார்ப்பொடு பனிப்பப்
படுமழை பொழிந்த **சாரலன்** நாட்டுக்
குன்ற நோக்கினென் தோழி"[120]

"**கறிவளர் அடுக்கத்** தாங்கண் முறியருந்து
**குரங்கொருங்** கிருக்கும் **பெருங்க னாடன்**"[121]

"**வாரணை** முரறு நீர்திகழ் **சிலம்பிற்**
பிரசமொடு விரைஇய வயங்குவெள் ளருவி
இன்னிசை யிமிழியங் கடுப்ப விம்மெனக்
**கன்முகை விடரகஞ் சிலம்ப** வீழும்
காம்புதலை மணந்த வோங்குமலைச் சாரல்"[122]

119. சுந்தரமூர்த்தி, டாக்டர், கோ., பண்டைத்தமிழ் இலக்கியக கொள்கைகள. ப. 154
120. குறு. 242
121. மேலது, 288 : 1-2
122. அகம். 172 : 1 - 5

பாரதிதாசன் பாடல்களில்,

> "**மிளகு நீள்கொடி வளர்மலைப் பாங்கில்**
> இரவில் முழுங்கிக கருமுகில் பொழிய
> **ஆண்குரங்கு** தாவிய சேண்கிளைப் பலாப்பழம்
> **அருவி**யால் ஊர்த்துறை வரும**எழிற் குன்ற**
> நாடன -------------"[123]

எனனும் அடிகளும்,

> "**சாரல்** அடைவோமே, காதலுக்குத் தக்க இடம்
> **சாரலும்** தண்மாலை நாயகியைச சாரக்,
> **குயில்**கூவிக் கொண்டிருக்கும், கோலமிகுந்த
> **மயிலாடிக்** கொண்டிருககும், வாச முடையநற்
> காற்றுக் குளிர்ந்தடிக்கும், கண்ணாடி போன்றநீா
> **ஊற்றுக்கள்** உண்டு"[124]

என்னும் பாடலடிகள் கருதத்தக்கவை.

சங்க இலக்கியங்களைப் போலவே பாரதிதாசன் பாடல்களிலும் குறிஞசி நிலமும் அந்நிலத்து வாழும் உயிரினங்களும் ஔசித்தியப் பண்புகளோடு புனைந்துரைக்கப்பட்டமை உணரலாம்.

## பாலை நிலம் பற்றிய ஔசித்தியம்

சங்க இலக்கியங்களில் பாலை நிலமும் அப்பாலை நிலக்கருப்பொருளாகிய செந்நாயும் பயின்று வந்துள்ளன. பின்வரும் எடுத்துக்காட்டுகள கருதத்தக்கவை.

> "**அத்தம்** நண்ணிய அங்குடிச் சீறூர்"[125]

> "வேட்டச் **செந்நாய்** கிளைத்தூண் மிச்சில்
> குளவி மொய்த்த அழுகற் சின்னீா
> வளையுடைக் கைய ளெம்மோ டுணீஇயர்"[126]

பாரதிதாசன் பாடல்களிலும் பாலை நிலமும் கருப்பொருளாகிய செந்நாயும்

123. பாரதிதாசன, பாரதிதாசன கவிதைகள, ப 783
124 மேலது, ப 121
125. குறு. 41 . 3
126. மேலது, 56 . 1 - 3

புனையப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாகப் பின்வரும் அடிகள் கருத்தக்கவை.

"உப்பு வணிகா ஒன்றிப் பிரிந்த
**வெப்பு நிலம்**போல் விரிச்சென்ற ஊர்போல்
இருக்கும் **பாலை நிலம்**"[127]

"முறுக்குசுட் டுக்கொண்டு வந்ததாய்ச சொன்னாய்
முத்தமல் லால்வேறு கேட்டேனா உன்னை?
குறுக்கில் ஒருகணம் வீணாக்கி என்னைக்
கொல்ல நினைத்தால் நீ ஒரு **செந்நாய்**"[128]

## முல்லைநில ஒளசித்தியம்

முல்லை நிலத்தில் கார்ப்பருவம் முல்லைக் காடு, சோலை, முல்லைக் கொடி, முல்லைப் பூ ஆகியவை சங்க இலக்கியத்தில் அடுத்தடுத்துப் பயின்று வந்துள்ளன. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கவை.

"தளவின் பைங்கொடி தழீஇப் பையென
**நிலவி னன்ன நேரரும்பு** பேணிக்
கார்நயந் தெய்து **முல்லை**யவர்
கார்நயந் துறையுமென் மாமைக் கவினே"[129]

"கடும்பரி நெடுந்தேர்க் கால்வல் **புரவி**
**நெடுங்கொடி முல்லை**யொடு தளவமல ருதிர
விரையுபு கடைஇநாஞ் செல்லி
னிரைவளை முன்கை வருந்தலோ விலளே"[130]

"மாலை வருதல்வேண்டுஞ் **சோலை**"[131]

பாரதிதாசன் பாடல்களில் பின்வரும் அடிகள் கருதத்தக்கவை.

"அவ்விடம் **முல்லை** சிரிப்பதும்"[132]

"ஆர்ப்புறும் இடிசேர் கார்ப்பரு வத்தைக்
கொல்லையின் மணந்த **முல்லைக் கொடி**யின்
சிரிப்பென **அரும்பு** விரிக்கும் நாடன்"[133]

"காற்றுவந்த **சோலை**யில் எனைக்
கண்டுசிரித்த **முல்லை**"[134]

127. பாரதிதாசன், காதல பாடல்கள், ப. 178
128 திருவாசகன், ஆ., பாரதிதாசன கவிதைகள, ப 1619
129. ஐங். 454
130. மேலது, 422
131. அகம். 148 . 12
132. பாரதிதாசன், பாரதிதாசன கவிதைகள், ப. 954
133. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 783
134. பாரதிதாசன், காதல பாடலகள், ப. 55

## மருதநில ஔசித்தியம்

மருதத் திணைப் பாடல்களில் அந்நிலம் சார்ந்த திணைநிலைப் பெயர் பயின்று வருதலும் நிலம் சார்ந்த விலங்கு முதலிய கருப்பொருள்கள் பயின்று வருதலும் காணலாம்.

சங்க இலக்கியங்களில் உழவன், உழத்தி ஆகிய திணை நிலைப்பெயர்களும் எருமை என்னும் கருப்பொருளும் பயின்று வந்தள்ளமை உணரலாம். பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கவை.

"**இருமருப் பெருமை** ஈன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியி னகலாது
பாஅற் **பைம்பயிர் ஆரு மூரன்**"[135]

பாரதிதாசன் பாடல்களில்,

"**உழவனும்** உறுதி சொன்னான்
**உழத்தியும்** உளம் மலர்ந்தே
தழை அன்பால் எழுக என்றே
மழையிடை **எருமை கள்**போல்
மகிழ்வொடும் நடந்து சென்றார்"[136]

என்னும் பாடலடிகள் கருதத்தக்கவை.உழவன், உழத்தி என்னும் திணைநிலைப் பெயர்களும் எருமை என்னும் கருப்பொருளும் மருதநிலப் பின்னணிக்குப் பொருத்தமுடன் அமைந்துள்ளன.

## நெய்தல் நில ஔசித்தியம்

நெய்தல் திணைப்பாடல்களில் கடல் நிலமும் நெய்தல் நிலம் சார்ந்த உப்பு வணிகர், புன்னை மலர், கருநெய்தல், தாழம்புதர், கடல் கொண்டாடும் துறைவன், நுளைச்சியர் முதலிய திணைநிலப் பெயர் ஆகிய பொருள்களும் பயின்று வந்துள்ளன. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கவை.

135. குறு. 181 : 3 - 5
136. பாரதிதாசன், காதல் பாடல்கள், ப. 192

"அன்னை வாழிவேண் டனனை **புன்னை**யொடு
**ஞாழல்** பூககுந தண்ணந் **துறைவன்**"[137]

"**பெருங்கடற்** கரையது **சிறுவெண் காக்கை**
**இருங்கழி நெய்தல்** சிதைக்குந **துறைவன்**"[138]

"கோடுபுலங் கொட்பக் **கடலெழு**ந்து முழங்கப்
பாடிமிழ் பனித்துறை யோடுகல முகைக்குந்
**துறைவன்**"[139]

பாரதிதாசன் பாடல்களில்,

"**உப்பு வணிகர்** ஒன்றிப் பிரிந்த
வெப்பு நிலம்"[140]

"**புன்னை மலர்கள்** அரும்பி மலர்ந்து
பொன்னைப் போலப் பொடியைச் சொரிந்து
முன்னே **தாழம் புதரை** விரைந்து
மூடும் **கடல்** கொண்டாடும் துறைவன்"[141]

"பூவால் அணிசெய்த இல்லம் - எம்மொரு
நாவால் நவிலல் அருமை அன்றோ?
பாவலர் போலச் சங்கு வளையல்கள்
பாடும் **நுளைச்சியர்** கண்நிகர் **கருநெய்தல்**"[142]

என்னும் பாடலடிகள் கருதத்தக்கவை.

## காதல் பற்றிய ஔசித்தியம்

1. காதல் என்பது குலம் என்பதையோ சாதி என்பதையோ மதம் என்பதையோ சார்ந்த கட்டுப்பாட்டிற்கு உடபட்டது அன்று.
2. காதலுக்கு உள்ளான தலைவன், தலைவி ஆகியோரின் தாய், தந்தையர் ஒருவருக்கொருவர் அறிமுகமானவர்களாக நட்புடையவர்களாக இருக்க வேண்டுமென்ற தேவை உடையதன்று.

137. ஐங். 103 : 1-2
138. மேலது, 170 : 1-2
139. மேலது, 192 : 1 - 3
140. பாரதிதாசன், காதல் பாடலகள, ப 118
141. திருவாசகன், ஆ., பாரதிதாசன கவிதைகள, ப. 1064
142. மேலது.

3. காதலில் இணைவுறும் காதலர்கள் அறிவு சார்நத ஊதியமான - கணக்குப் போடுதல் இல்லை.

இம் மூன்றுமே காதல் பற்றிய ஔசித்தியம் எனலாம்.

## காதல் ஔசித்தியம்

காதல் பற்றிய இத்தகைய பொருத்தப் பாட்டு ஔசித்தியம் சங்க இலக்கியங்களில் காணப்படுதல் உணரலாம்.

> "யாயும் ஞாயும யாரா கியரோ
> எந்தையும் நுந்தையும் எம்முறைக கேளிர்
> யானும் நீயும் எவ்வழி அறிதும்
> செம்புலப் பெயனீர் போல
> அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே"[143]

என்னும் சங்கப் பாடல் ஈண்டுக் கருதத்தக்கது. இப்பாடலில், "என்னுடைய தாயும் உன்னுடைய தாயும் ஒருவரையொருவர் யாரென அறியமாட்டார் என்னுடைய தந்தையும் உன்னுடைய தந்தையும் எந்த வழியிலும் நட்புடையர் அல்லர். சந்திக்கும் முன்னாக யானும் (தலைவனும்) நீயும் (தலைவியும்) எந்த வழியிலும் ஒருவரையொருவர் அறியமாட்டோம். செம்மண் நிலத்தில் பெய்த மழையினால் செம்மண்ணும் மழைநீரும் இரண்டறக் கலந்து விட்டது போலத் தோன்றிய அன்பினால் நம் இருவரது நெஞ்சமும் இரண்டற இணைந்து விட்டன" என்ற கருத்து விளக்கப்பட்டுள்ளது.

தலைவன் தந்தையும் தலைவியின் தந்தையும " எம்முறைக் கேளிர் என" எந்த வகையிலும் நட்புடையவர் அல்லர் என்பது குறிக்கப்பட்டமையால், குலம் என்பதையோ சாதி என்பதையோ மதம் என்பதையோ சார்ந்த கட்டுப்பாட்டிற்குத் தலைவன், தலைவியர் உரியவர் ஆகார் என்பதை உணரலாம். தலைவனும் தலைவியும் எவ்வழியிலும் ஒருவரையொருவர் அறியமாட்டார் என்று குறிக்கப்பட்டமையால் காதலில் இயற்கைப் புணர்ச்சியில் இணையும் காதலர் அவ்வாறு இணைவுறுவதற்கு எத்தகைய அறிவு சார்ந்த ஊதியமான - கணக்கும் போடுதல் இல்லை எனலாம்.

பாரதிதாசன் பாடல்களிலும் ஈண்டுக் காதல் ஔசித்தியம் என்று குறிக்கப்பட்ட

143. குறு. 40

மூன்று கருத்துக்களும் பயின்று வரக் காணலாம்

பாரதிதாசனின்,

> "சாதி, குலம், மதம்
> சீலம், மானம்
> சார்ந்த காதல்
> வேதியனைப் போல்
> விரகிட்டல்ல
> காதல் தீயில்
> எரிததிட்டேன."[144]

என்னும் இப்பாடலடிகளில் சாதி, குலம், மதம் ஆகியவை காதல் தீயில் எரிக்கப்படட நிலை விளக்கப்பட்டுள்ளதால் முதலாவதாகக கூறபபட்ட காதல் ஔசித்தியம் பொருந்தி வந்துள்ளதை உணரலாம்.

பாரதிதாசனின்,

> "என் தாய் யாரோ!
> உன் தாய் யாரோ! - பெண்ணே
> என் தந்தை உன் தந்தை உறவினா அல்லரே!
> இன்றிங் கேஉனை எவ்வா றடைந்தேன?
> நீஎன்னை எவ்வா றறிநதாய்? - நாம்
> செம்மண் நிலமும் பெய்த மழையும் போலச்
> சேர்ந்தோம் அடடா இன்பம் ஆர்ந்தோம்."[145]

என்னும் பாடலடிகள் கருதத்தக்கன. இப்பாடல் பொருண்மை முன்னர் விளக்கப்பட்ட "யாயும் ஞாயும்" என்று தொடங்கிவரும் பாடற்பொருளோடு பெரிதும் ஒத்துச் சார்ந்த இரண்டாவது மூன்றாவது ஔசித்தியங்களும் இப்பாடல்வழிப் பொருந்தி வந்தள்ளமை அறியலாம்.

144. பாரதிதாசன, காதல பாடல்கள, ப. 59
145. மேலது, இசையமுது - II, ப.24

## இயற்கைப் புணர்ச்சி ஔசித்தியம்

இயற்கைப் புணர்ச்சி அல்லது கைக்கிளை, காட்சி, ஐயம், துணிவு ஆகிய மூன்று கூறுகளை உடையதாகும். இவற்றைக் கைக்கிளைக்கே உரிய ஔசித்தியம் என்று கொள்ளலாம். ஏனென்றால் பிறதுறையில் இம்மூன்று கூறுகளும் பொருந்தி வரமாட்டா. சங்க இலக்கியங்களில் அமையும் இயற்கைப் புணர்ச்சி-கைக்கிளை-சார்ந்த காட்சி, ஐயம், துணிவு ஆகிய மூன்று கூறுகளும் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடற்பகுதியைக் கருதலாம்.

காட்சியென்பது முதற்கண் தலைவன் தலைவியைக் காணுதல் ஆகும்.

ஐயம் என்பது தலைவியைக் கண்டு அவளுடைய அழகை வியந்து நிற்கும் நிலையாகும்.

துணிவு என்பது காட்சி, ஐயம் நிகழ்ந்தபின் தான் விரும்பும், தன்னை விரும்பும் தலைவி இவளே என்று உறுதி செய்தலாகும்.

"வேயெனத் திரண்டதோள் " எனத் தொடங்கி வரும் குறிஞ்சிக்கலி 21-ஆவது பாடலை ஈண்டுக் காணலாம்.

இக்கலிப் பாடலில் தலைவனிடத்துக் காதலின் தொடக்கத்தில் நிகழும் கைக்கிளை சார்ந்த காட்சி, ஐயம், துணிவு ஆகியவை நிகழ்கின்றன. "கண்கவர்பு ஒருங்கோட" என்றும், "எறிபந்தொடு இகத்தந்தாய்" என்றும், குறிக்கப்பட்டுள்ளமையால் **காட்சி** என்னும் கைக்கிளைக்கூறு புலப்படுகிறது.

தலைவியின் இடையழகில் ஈடுபட்டுக் "கொடியோ? மின்னோ! அணங்கோ?" என வியந்து ,

> "கொடியென மின்னென அணங்கென யாதொன்றுந்
> தெரிகல்லா இடையின்கண்"[146]

என்று கூறியுள்ளமையால் **ஐயம்** என்னும் கூறு பொருந்தி வரக்காணலாம் " கொடியோ? மின்னோ? அணங்கோ? " என்று தலைவன் ஐயங்கொள்ளினும்,

146. குறி. கலி. 21: 4-5

" ----- நுந்தை தொல் வியனகர்
இளமையான் எறிபந்தோ டிகத்தந்தாய?"

என்று குறிக்கப்பட்டுள்ளமையின் தந்தையின் மாளிகையிலிருந்து பந்தாட வந்துள்ள தலைவியே என்பது தலைவனுக்குப் புலப்படுதலால் **துணிவும்** ஈண்டு அமையக் காணலாம்.

"பாருக்கோர் புதுமை" என்று தொடங்கும் பாரதிதாசன் பாடலில்,

"பார்க்கும் பார்வை தன்னிலே - வந்து
பாயும் காதல் மின்னலே"[147]

என்னும் பாடலடிகளில் காட்சி என்னும் கூறு அமைந்துள்ளது. இக்காட்சிக்குப் பெரிதும் துணை நிற்பதாக "பார்க்கும் பார்வை " என்னும் தொடரமையக் காணலாம். மேலும், இப்பாடலில் வந்துள்ள

"பவழமோ கோவைப்
பழமோ மின்னற் பிழம்போ?
பாவை இரண்டு உதடுமே"[148]

தலைவியின் உதட்டை வியந்து உயர்ந்த பொருள்களை உவமையாகக் கூறியுள்ளமை உணரலாம். இங்கு ஐயம் என்னும் கைக்கிளைக் கூறு பொருந்தி வந்துள்ளது. அடுத்து இப்பாடலில்,

"------------- மேல்
உடை என்று மின்னுடுத்தி
உலவிவிடும் தங்கத்தேர்
எனக்கல்லாமல் பிறர்க்கா?"[149]

என்னும் பாடலடிகள் கருதுதற்குரியவை. தன் காதலுக்குரிய தலைவி இவளே என்று தலைவன் கருதுவதாக அமையும் இவ்வடிகளில் துணிவு என்னும் கூறு இயைபுற்று வருவதாக எண்ணலாம்.

147. பாரதிதாசன், காதல் பாடல்கள், ப.26
148. மேலது
149. மேலது

## காதற் குறிப்புரை சார்ந்த ஔசித்தியம்

காதற் குறிப்புரை கண்களால் நிகழ்வதாகக் கூறுவது ஔசித்திய நிகழ்வாகும். இதனைத் தொல்காப்பியா,

"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்குங் குறிப்புரை யாகும்"[150]

என்று கூறியுள்ளார்.

தலைவியின காதலினால் இளமுலைகள் தலைவனுடைய மிகுதியான வலிமையினையும் மதம் கொண்ட யானையின் கொம்புகளினும் கோபத்தையும் உடையனவாயிருந்தன என்பதைக் கூறத் தலைவி நிலத்தைப் பார்க்கிறாள், இதனை,

"மதவலி மிகுகடாஅத் தவன்யானை மருப்பினுங்
கதவவால் தக்கதோ காழ்கொண்ட இளமுலை:
இனையன எனவாங்கு,கூற இறைஞ்சுபு நிலநோக்கி
நினையுபு நெடி தொன்று நினைப்பாள்போல் மற்றாங்கே
துணையமை தோழியர்க் கமர்த்த கண்ணள்"[151]

எனச் சங்கப் பாடல் சுட்டுகின்றது.

"இறைஞ்சுபு நிலநோக்கி"[152]

என்றமையால் தலைவியின் நாணம் புலப்படுகிறது. தலைவி பருவம் எய்திய பெண்ணாகக் காதல் தன்மை உடையவளாக இருந்ததால் நாணத்தால் தலை கவிழ்கின்றாள். எனவே இத்தலைவியைக் காமக்குறிப்பிற்கு அமைதியில்லாத பெண் என்றோ, தலைவன் கொண்ட காதல் ஒருதலைக் காமம் என்றோ கூறவியலாது. தலைவனின் உள்ளத்தைக் - காதலைத் தலைவி தானும் எதிரேற்றுச் செல்கின்றாள். இதனை "அறிவகப்படுத்தே" என இப்பாடலில் வரும் சொற்றொடரால் அறியலாம். தொல்காப்பியர் குறிப்புரை பற்றிக் கூறும்.

"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்குங் குறிப்புரை யாகும்"[153]

150. தொல். பொருள். இளம். களவு. 5
151. பத். குறிஞ். 20 : 18 - 23
152. குறி. கலி. 57. 22
153. தொல். பொருள். இளம். களவு. 5

என்ற நூற்பாவில் வரும் " அறிவுடம்படுத்தல " என்ற சொற்றொடர் பாடலில் வரும "அறிவகப்படுத்தல்" என்ற சொறறொடா போன்றே அமைந்துள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது குறிப்புரை அமைதல் ஈண்டு நோக்கத்தக்கது.

காதற் குறிப்புரை கண்ணால் நிகழ்வதாகப் பாரதிதாசனும் பாடியுள்ளார்.

"நேருக்கு நேரிரண்டு கெண்டை கண்டேன்"[154] என்று வரும் அடி ஈண்டுக் கருத்தத்தக்கது. இவ்விடத்துக் கண்கள் நேருக்குநேர் சந்தித்ததனால் நிகழும் காதற் குறிப்புரை பேசப்பட்டுள்ளது.

## பிரிவுப் பொருள் சார்ந்த உவமை ஔசித்தியம்

பிரிவுக் காதலில் தலைவி அப்பிரிவை உவமை வழியாக விளக்குகினற பொழுதுஆணைப் பிரிந்த பெண் வருந்தலுக்கு அன்றிலின் பிரிவு வருத்தம் ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளமை சங்க இலக்கியப் பாடலில் காணலாம்.

"ஒன்றில் காலை அன்றில் போலப்
புலம்புகொண்(டு) உறையும் புன்கண் வாழ்க்கை
யானும்ஆற் றேன்"[155]

என்னும் பாடலடிகள் நோக்கத்தக்கவை.

பாரதிதாசனும் பிரிவுச் சூழலில் அன்றில் பறவையைத் தலைவி உவமை கூறுவதாக,

"அன்றில் பறவை பிரிந்த தில்லை
ஆண் பிரிந்து பெண் வாழ்ந்ததில்லை
என்ற சேதி தெரியாதா ? - நான்
எப்படிப் பொறுப்பேன் இந்தத் தொல்லை?".[156]

என்னும் பாடலடிகளில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு பிரிவு உவமையில் அன்றில் பறவையை அமைத்தல் பொருந்தி வரும் ஔசித்தியக் கூறாக அமையக் காணலாம்.

154. பாரதிதாசன், காதல் பாடலகள், ப 26
155. நற. 24 : 1 – 3
156. பாரதிதாசன, காதல பாடலகள், ப. 30

## அலர் ஔசித்தியம்

அலர் என்பது களவுக காலததில் தலைவனையும் தலைவியையும் பற்றி ஊரார் பேசும் பழிச்சொல்லாகும். சஙக இலக்கியங்களில் இவ்வலர் பலவாறாகப் புனையப்பட்டுள்ளது.

"குழையக கொடியோர் நாவே
காதலர் அகலக் கல்லென் றவ்வே"[157]

என்றும்,

"அலர்சுமந(து) ஒழிகவிவ் அழுங்கல் ஊரே"[158]

என்றும் அலர் பேசுவோர் " கொடியோர் " எனறு சங்க இலக்கியம் குறிப்பிடுதல காணலாம்.

பாரதிதாசனின் பின்வரும் பாடல் கருதத்தக்கது

"காதலை அறியாக
கயவர் கூட்டம்
**கண்டதையெல்லாம்**
**கத்தட்டும்**
மோதும் அலையில்
உப்பைக் கொட்டும்
**மூடர்கள் ஏதும்**
**செய்யட்டும்**
இளமை என்னும்
அருவிப் பெண் நான்
இளைஞன் எனனும்
உளங்கொண டாடி
என்னை இழநதேன்

157 குறு 24 5-6
158. நற். 149 10

ஊராராம் நாய்
குலைக்கட்டும்''[159]

பாரதிதாசன் பாடலிலும் அலர் பேசும் குழுவினரைக் " கயவர் கூட்டம் " என்றும் குறிப்பிடுதல் ஒப்பு நோக்கத் தக்கது. அலர் பேசுபவரைக் காதலர்கள் மதிப்பதில்லை. அவர்கள் செயல்பாடும் புறக்கணிக்கப்படுகின்றது. இது அலர் சார்பான ஔசித்தியம் எனலாம். " அலர்சுமந் தொழிக இவ்வூரே " என்று வருமிடத்து அலர் பேசுவோர் அவர்கள் அலரை அவர்களே சுமந்து செல்லட்டும் என்று தோன்றக் குறிப்பிடுதல் காணலாம். அலர் பேசுவோரின் செயல் ஈண்டு மதிக்கப்படாது புறக்கணிக்கப்படுவது தோன்ற உரைத்தல் எண்ணத்தக்கது. பாரதிதாசன் பாடல்களிலும் ''கண்டதையெல்லாம் கத்தட்டும்'' , ''மூடர்கள் ஏதும் செய்யட்டும்'', ''ஊராராம் நாய் குலைக்கட்டும்'' என்று அலர் பேசுவோரும் அவர்களின் செயல்பாடும் தலைவியால் புறக்கணிக்கப்படுதல் கருதத்தக்கதாகும். மேலும் ''மோதும் அலையில் உப்பைக் கொட்டும் மூடர்'' என்று கூறியமையால் மோதுகினற அலையில் உப்பு கரைந்து போவதைப் போல அலர் பேசுவோரின் அலர் மொழிகளும பொருளற்றுப் போகும் என்பது தோன்றப் பாரதிதாசன் குறிப்பிடடுள்ளார்.

## வன்புறை ஔசித்தியம்

வன்புறை என்பது பிரிவு வேளையில் தலைவியைத் தோழி ஆற்றுவிக்குமு பகுதியாகும். இஃது இவ்வாறு ஆற்றுவிக்கும் பொருட்டுத் தலைவன் செல்லும் பாலை நெறியில் காணப்படும் அன்பான உயிரினங்களைப் பற்றித் தலைவிக்குத் தோழி எடுத்துரைப்பதாகும். தொல்காப்பியர் இதனை,

> ''அனபுறு தகுவன இறைச்சியிற் சுட்டலும்
> வன்புறை யாகும் வருநதிய பொழுதே''[160]

என்று கூறுவார். பிரிவிடைத் தோழி தலைவியை ஆற்றுவித்தது என்னும் துறையைச் சார்ந்த (வன்புறை) பின்வரும் சங்க இலக்கியப் பாடல் பகுதி கருதத்தக்கதாகும்.

''தலைவன் சென்ற வழியின் கண்ணே பெண் யானைகளின் பசியை அகற்றும் பொருட்டுப்பெரிய துதிக்கையை உடைய களிற்றியானைகள் மெல்லிய கிளைகளையுடைய மாமரத்தின் பட்டையை 'உரிக்கும் அன்புடையனவாம். ஆதலால் நின்பால் மிகவும்

159. பாரதிதாசன். காதல் பாடல்கள். ப. 59
160. தொல். பொருள். இளம். பொருளி. 35

விருப்பமுடைய தலைவன் விரைந்து திரும்பவும் செய்வான்``.[161]

பாரதிதாசன் பாடலில்,

"கடிது வருவார் என்று ஆற்றுவித்தது
அம்மா உன்மேல் - அவர்
அதி விருப்பம் உடையவர் (அம்)

செம்மையாய் விரைவில்
திரும்பினும் திரும்புவார்
திரும்பி வந்தின்பம்
நல்கினும் நல்குவர் (அம்)

அகன்றவர் சென்ற வழியில்
ஆண்யானை, பெண்யானையின் பசியை
நின்ற யா மரம் உரித்திட்டால் காண்பார்
நின்நிலை எண்ணி இன்றே திரும்புவார். (அம்)"[162]

என்று கூறப்பட்டுள்ளது. தலைவன் சென்ற வழியில் காணப்படும் அன்புறு உயிர்களாகிய யானைகள் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளன. அதாவது பெண் யானையின் பசியைப் போக்க ஆண் யானை யா மரத்தின் பட்டையை உரிப்பதைப் பாடல் சுட்டிக் காட்டியுள்ளது. இத்தகைய வன்புறை ஔசித்தியம் சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் ஒத்த நிலையில் அமைதல் காணலாம்.

## உடன்போக்கு ஔசித்தியம்

உடன்போக்கு மேற்கொள்ளக் கருதிய

தலைவன் சிறைப்புறமாக / தலைவி தோழிக்குச் சொல்கிறாள்."தோழீ! தெருவிலுள்ள மாதரில் சிலரும் பலரும் ஆங்காங்குக் கூடி நின்று கடைக் கண்ணாலே

161. குறு. 37
162. திருவாசகன், ஆ., பாரதிதாசன கவிதைகள், ப. 1052

நோக்கி (வியப்பினால்) மூக்கின் உச்சியில் சுட்டு விரலைச சேர்த்துப் பழிச்சொற் கூறித் தூற்ற, அன்னை சிறுகோலினால் அடித்தனள் மிகத துன்புற்றேன். கானற் புதுமலர்களைத் தீண்டி வருதலால் மணங்கமழும் சிவந்த நிறம் பொருந்திய பிடரியினையுடைய விரைந்து செல்லும் குதிரை பூட்டிய நெடிய தேரைச் செலுத்திக் கொண்டு நடு யாமத்தே வரும் பெரிய தோளையுடைய தலைவனொடு யான் உடன்போகக் கருதுகின்றேன. இவ்வாரவாரத்தை உடைய ஊர் தான் சொல்லும் அலரைத் தானே சுமந்தொழிக"[163]

பாரதிதாசனின்,

"உயிரே பிரிந்தால் உடல்வா ழாது
வெயில்நுதல், அயல்வழி, வெண்ணிலா முகத்து
நேரிழை தனையும் நீர் அழைத் தேகுக
என்றேன் நீ அதற்கு இயம்பிய தென்ன?
உப்பு வாணிகர் ஒன்றிப் பிரிந்த
வெப்பு நிலம்போல் விரிச்சென்ற ஊர்போல்
இருக்கும் பாலை நிலத்தில் என்னுடன்
மருக்கொழுந்தும் வருவதோ என்று
தனியே செல்வதாய்ச் சாற்றினீர் ! உம்மை
மாது பிரிந்து வாழும் வீடுதான்
இனிதோ சொல்க என்று
துனிபொ றாது சொன்னாள் தோழியே!"[164]

என்னும் பாடற் பொருள் சங்க இலக்கியப் பாடற் பொருளை ஒத்து, உடன்போக்கை ஏற்று வற்புறுத்தும் தலைவியின் கருத்தை எடுத்துக்காட்டுவதாக அமைகிறது.

தலைவி நாணத்தைச் சில நேரங்களில் கடந்து செல்லவேண்டிய சூழ்நிலைகளும் ஏற்படுகின்றன. நாணத்தை உயிரைக் காட்டிலும் சிறந்தது என்று சொல்லும் தொல்காப்பியர், நாணத்தைக் காட்டிலும் குற்றந்தீர்ந்த கற்புச் சிறந்தது[165] என்று ஔசித்தியத் தன்மை தோன்ற உரைப்பர். எனவே, கற்பினைக் காக்கச் சில வேளைகளில் தலைவி, உயிரினும் சிறந்த நாணினையும் கடந்து செல்லலாம் என்பது பெறப்படுகிறது. மேலும் தொல்காப்பியர், இல்லறம் நிகழ்த்தும் உரிமையை உறுதியாகப் பெறுதலை

163. நற். 149
164. பாரதிதாசன், காதல பாடல்கள், ப. 118
165. தொல். பொருள். இளம். களவு. 23:1-2

விரும்புதலாலும், பிரிவச்சம் பெண்களுக்கு உண்மையாலும், அம்பலும் அலரும் களவினை வெளிப்படுத்துவதாகும் என்பார்.[166] எனவே உடன்போக்குப் பற்றிய ஔசித்தியம் ஈண்டு உரைத்தக்கதாகும்.

## தொகுப்புரை

களவு சார்பான அகத் துறைகள் சிலவும் கற்பு சார்பான அகத்துறைகளுள் சிலவும் சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடலகளிலும் ஒப்புமைப்படப் புனையப்பட்டுள்ளன. எவ்வெத் துறைகள் எவ்வெவ்வாறு ஒற்றுமைப்பட விளக்கப்பட்டுள்ளன என்பது ஆராயப்பட்டுள்ளது. புறத்திணைகளைச் சார்ந்த வெட்சி, வஞ்சி, காஞ்சி, தும்பை, வாகை, பாடாண் ஆகிய ஆறு திணைகளில் இரு இலககியங்களிலும் ஒத்துவரும் பகுதிகள் ஆராயப்பட்டுள்ளன. கையறவு உரைத்தல், இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல், பசியட நிற்றல், பசலை பாய்தல், காதற் கைம்மிகல், பிரிவாற்றாமை ஆகிய அகப்பொருள் மெய்ப்பாடுகள் சங்க இலக்கியப் பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் எவ்வாறு புனைந்துரைக்கப்பட்டுள்ளன என்பது ஒப்பிட்டு ஆராயப் பட்டுள்ளது. பொருள்தொனி, அணித்தொனி, இரசத்தொனி ஆகிய மூன்று முக்கிய தொனிகளும் இவ்விரு கால இலக்கியங்களிலும் எவ்வாறு பயின்று வந்துள்ளன என்பது ஆராயப் பட்டுள்ளது. அவ்வாறே சிருங்காரம் நகை, கருணை, வெகுளி, வீரம், அச்சம், வெறுப்பு, வியப்பு ஆகிய இரசங்கள் சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் புனைந்துரைக்கப்பட்டுள்ள பாங்கு புலப்படுத்தப் பட்டுள்ளது. இருவேறு கால இலக்கியங்களிலும் நில ஔசித்தியமும் அகப்பொருள் துறை சார்ந்த ஔசித்தியமும் . எவ்வாறு ஒத்துக் கருதப்பட்டுள்ளன என்பது விளக்கிக் காட்டப்பட்டுள்ளது.

166. தொல். பொருள். இளம். பொருளி. 29:1-4

# இனம்

## முன்னுரை

தொல்காப்பியத்திலும் சங்கப் பாடல்களிலும் காணப்படும் இனம் என்ற சொல் குறித்தும் அதன் பொருள் குறித்தும் ஆராயப்பட்டுள்ளன. மேலும் தொல்காப்பியத்திலும் சங்கப் பாடல்களிலும் காணப்படும் இனம், இனவுணர்ச்சி ஆகியவற்றைப் பற்றிய கருத்துகள் ஆராயப்பட்டுள்ளன. பாரதிதாசன் பாடல்களில் காணப்படும் இனம், இனவுணர்ச்சி ஆகியவற்றைப் பற்றிய கருத்துகளும் ஆராயப்பட்டுளளன. இவற்றிற்கிடையேயான ஒற்றுமை, வேற்றுமைகள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. சங்கப் பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் காணப்படும் இனவிழிப்புணர்ச்சி, இலக்கியம், அரசியல், சமயம் ஆகிய மூன்று கோணங்களிலும ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளது.

## இனம் என்னும் சொல்லும் பொருளும்

தொல்காப்பியம், சங்க இலக்கியம், பாரதிதாசன் பாடல்கள் ஆகிய மூனறு திறப்பட்ட நூல்களிலும் இனம் என்ற சொல் பயின்றுவரக் காணலாம். பல்வேறு பொருள்களின் தொகுதி அல்லது கூட்டத்தை இச்சொல் உணர்த்தி வருதல் ஆராய்தற்குரியது.

## அ) தொல்காப்பியத்தில் இனம்

தொல்காப்பியத்தில் இனம் என்னும் சொல் கூட்டம் அல்லது தொகுதி என்னும் பொருளில் வந்துள்ளமை உணரலாம்.

## ஒத்த எழுத்துக் கூட்டம்

தொல்காப்பியத்தில் இனம் என்ற சொல் ஒத்த எழுத்துக் கூட்டம் என்ற பொருளில் மூன்று இடங்களில் வந்துள்ளது. இதனை உணர்த்தும் நூற்பாக்கள் பின்வருமாறு

> "ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்
> வேற்றுமை யாயின் ஒற்றிடை **இன**மிகத்
> தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி"[1]

1. தொல். எழு. இளம். குற் 6

"ஒற்றிடை **யினா** மிகா மொழியுமா ருளவே
அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே"[2]

"நூறென் கிளவி ஒன்றுமுத லொன்பாற்(கு)
ஈறுசினை யொழிய **இனவொ**ற்று மிகுமே"[3]

## உறவுடைய பொருள்

ஒன்றனைப் பற்றிக் கூறும்பொழுது அப்பொருளை மட்டும் விளக்காமல் அதனையொத்த அதனோடு உறவுடைய வேறு பொருளையும் குறிக்கும் என்பதனை,

"எடுத்த மொழி**யினஞ்** செப்பலு முரித்தே"[4]

"மற்றைய தென்னும் கிளவி தானே
சுட்டுநிலை யொழிய **இனங்**குறித் தன்றே"[5]

"ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்,
**இன**மொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத்தானும் என்(று)
ஆங்கனை மரபின் இயலும் என்ப"[6]

என்னும் மூன்று நூற்பாக்கள் மூலம் உணரலாம்.

## ஒத்த பெயர்த்தொகுதி

இனம் என்ற சொல் ஒத்த பெயர்த்தொகுதி என்ற பொருளில் இரண்டு இடங்களில் வந்துள்ளது. இனம் சுட்டாத பெயர் பண்பு கொண்டு வருவது அதாவது பண்புப் பெயராகச் செய்யுளில் மட்டும் வரும். வழக்கில் வராது. இதனைத் தொல்காப்பியர்,

"**இனச்**சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே"[7]

எனக் கூறுகின்றார்.

2. தொல். எழு. இளம். குற். 7
3. மேலது, 64
4. மேலது, சொல். இளம். கிளவி. 61
5. மேலது, இடை.16
6. மேலது, பொருள். இளம். செய். 166
7. மேலது, சொல். இளம். கிளவி.18

வினையால் வேறுபடும் பலபொருள் ஒரு சொல், வேறுபடுத்துகின்ற வினையினாலும் இனத்தினாலும் சார்ந்து வரும் சார்புப் பொருளினாலும் பொருள் தெளிவு பெறும். இதனை உணர்த்தும் தொல்காப்பிய நூற்பா,

"வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வேறுபடு வினையினும் **இனத்**தினும் சார்பினும்
தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே"[8]

எனச் சுட்டுகின்றது.

## ஒத்த பொருட்கூட்டம்

ஒத்த தன்மையுடைய மணிகளை ஓரினமாகக் கோத்து வைத்திருப்பது போல ஒத்த தன்மையுடைய (கருத்தையுடைய) பொருள்களைத் தொகுத்து ஒருங்கே வைக்க வேண்டுமென உயர்மொழிப் புலவர்கள் கூறுவர் என்று கூறும்போது ஒத்த பொருட்கூட்டத்தை ஓரினப் பொருள் எனச் சுட்டுதல் காணலாம்.

"நேரின மணியை நிரல்பட வைத்தாங்(கு)
**ஓரினப்** பொருளை ஒருவழி வைப்ப(து)
ஒத்தென மொழிப உயர்மொழிப் புலவர்"[9]

என்னும் நூற்பா கருதத்தக்கது.

## நூல்வகை

நூல்களின் முப்பத்திரண்டு உத்திகளைக் கொண்டு பத்துவகைக் குற்றங்களையும் நீக்கி நூல் செய்து நூல்வகையில் சேர்த்துணர்த்துதல் வேண்டுமென நூலறிவுடையோர் கூறுகின்றனர். இங்கு நூல்வகை இனம் எனச் சுட்டப்பட்டுள்ளது. இதனை உணர்த்தும் நூற்பா பின்வருமாறு

"**இனத்**திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே"[10]

8. தொல். சொல். இளம். கிளவி. 18
9. மேலது, பொருள். இளம். செய். 165
10. மேலது, மரபு. 117

தொல்காப்பியத்தில் இனம் என்னும் சொல் பின்வரும் ஐந்து பொருள்களில வழங்கியுள்ளமை உணரலாம்.

1. ஒத்த எழுத்துக் கூட்டம் 2. உறவுடைய பொருள்
3. ஒத்த பெயர்த் தொகுதி 4. ஒத்த பொருட்கூட்டம் 5. நூல்வகை

## ஆ) சங்க இலக்கியங்களில் இனம்

சங்க இலக்கியங்களில் உயிருள்ள அல்லது உயிரற்ற பொருள் தொகுதி அல்லது கூட்டத்தை இனம் என்னும் சொல் உணர்த்தியுள்ளது.

### விலங்கினம்

### ஆட்டினங்களின் கூட்டம்

கல்லென்கிற ஓசையையுடைய காட்டில் கடல் போல ஒலிக்கும் பல ஆட்டின் கூட்டம் என்று வருமிடத்து ஆடுகளின் தொகுதி இனம் என்ற சொல்லால் சுட்டப்பட்டுள்ளமை உணரலாம். பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"கல்லென் கடத்திடைக் கடலின் இரைக்கும்
பல்யாட் **டின**நிரை எல்லினிர் புகினே"[11]

### எருமை இனம்

வெள்ளிய நெல்லையறுப்பவர்கள் கொட்டின பறையோசையைக் கேட்டுச சிவந்த கண்ணையுடைய எருமை தன் கூட்டத்தைப் பிரிந்தது என்னும்போது எருமைத தொகுதிகள் இனம் எனச் சுட்டப்பட்டுள்ளமை கருதத்தக்கது. பின்வரும் பாடலடிகள உணரத்தக்கவை.

"வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇச்
செங்கண் எருமை **இன**ம்பிரி ஒருத்தல்"[12]

11. மலை. 415- 416
12. மேலது, 472- 473

## குதிரை இனம்

"குருதிக்கறை பொருந்திய குளம்பையுடைய நினது இனம்" என்னும்போது குதிரைகளின் தொகுதியே இனம் என்று சுட்டப்பட்டுள்ளது.

"செலவசைஇய மறுக்குளம்பினின்
**இன**நன்மாச் செலக்கண்டவர்"[13]

## யானைகளின் கூட்டம்

பேயினது பல்லை ஒத்த பருத்த நகத்தினையும் பரந்த அடியினையும உடைய பெரிய களிற்றியானைக் கூட்டம்,

"பழூஉப்பல் அன்ன பருவுகிர்ப் பாவடி
இருங்களிற் **றின**நிரை யேந்தல்"[14]

என்னும் அடிகளில் சுட்டப்பட்டுள்ளது. ஆண் யானைகளின் கூட்டம் இனம் எனறு கூறப்பட்டமை உணரலாம்.

## களிற்றினம்

களிற்றின யானைகள் என்னும்போது யானைக் கூட்டம் இனமெனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடி கருதத்தக்கது.

"**இன**க்களிற் றியானை"[15]

## உழை இனம்

சிவந்த தாளையுடைய உழுந்தினது முதிர்ந்த காய்களை மானினங்கள் தின்னும். இங்கு மானினம் என்று மான்களின் கூட்டம் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் எண்ணத்தக்கவை.

"பூழ்க்கா லன்ன செங்கால் உழுந்தின்
ஊழ்ப்படு முதுகாய் உழை**யின**ங் கவரும்
அரும்பனி."[16]

13. புறம். 98 : 6-7
14. குறு. 180 : 1-2
15. புறம். 290 : 2
16. குறு. 68 : 1-3

## பெண் மானினம்

வில்லினையுடையவர்கள் கற்கள் வீசியதால் காட்டிலுள்ள தனது கூட்டத்தினின்றும் பிரிந்த ஓரினத் தொகுதி இனம் எனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"-----------மாண்ட
வில்லுடை வீளையர் கல்லிடு பெடுத்த
நனந்தலைக் கானத் **தினந்**தலைப் பிரிந்த
புன்கண் மடமான்"[17]

## மான் இனத் தொகுதியின் ஆண் இனம்

வேட்டுவர் விரிக்கும் வலையைக் கண்டஞ்சி ஓடும். கலைமானுடன் நவ்வியாகிய பிணைமான் ஓடும். இங்கு மான் கூட்டத் தொகுதி இனம் என்று சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"தன்சிதை வறித லஞ்சி யின்சிலை
யேறுடை **யினத்**த நாறுயிர் நவ்வி
வலைகாண் பிணையிற் போகி"[18]

## வெருகினம்

வீட்டின்கண் தங்கும் இயல்புடைய கோழியினது குறிய காலையுடைய பெடை மாலைப்பொழுதின்கண் காட்டுப் பூனைகளின் கூட்டம் தன்னையும் குஞ்சுகளையும் இரையாகப் பற்றுவதற்காக வேலியின் அருகே வந்தது என்னும்போது, பூனைகளின் கூட்டம் இனமென்ற சொல்லால் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் ஈண்டு உணரத்தக்கன.

'மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
வேலி வெரு**கின** மாலை யுற்றெனப்
புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇய"[19]

17. குறு. 272 : 1- 4
18. அகம். 7 : 10
19. குறு. 139 : 1-3

**பசு இனம்**

இனிய சூழலில் உண்டான ஓசையைப் போல், வழுவில்லாத சொற்களையுடைய கோவலர்கள் தம் பசுக் கூட்டங்கள் கார்காலத்தில் முல்லை நிலததில் மேய்ந்தன என்னும்போது தொகுதியான பசுக்கூட்டம் இனம் எனச் சுட்டப்பட்டுள்ளது பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கவை.

"-----------தீங்குழன் முரற்சியர்
வழூஉச்சொற் கோவலர் தத்தம் **இன**நிரை"[20]

**ஆண் குரங்கினம்**

பலா மரத்திலுள்ள பழத்தைத் தின்னுகின்ற திரளாகிய ஆண் குரங்குகள என்னும்போது குரங்குகளின் ஓரினத் தொகுதி சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடி உணரத்தக்கது.

"பலவிற் சேர்ந்த பழமார் **இன**க்கலை"[21]

**யானைகளின் இரண்டினம்**

சிறிய கண்ணையும் பெரிய கைகளையுமுடைய யானைகளின் இரண்டினம் என்னும்போது யானைகளின் இரண்டு பிரிவுகளின் தொகுதிகள் சுட்டப்பட்டுள்ளன. பின்வரும் பாடலடி உணரத்தக்தது.

"சிறுகண் யானைப் பெருங்கை ஈ**ரினம்**"[22]

**பறவையினம்**

**கிளியினம்**

பலவாகிய சுற்றத்தொடு உண்ணுகின்ற வளைந்த வாயையுடைய பசிய கிளியின் கூட்டம் இனமென்று சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

20. கலி. 106 3- 4
21. குறு. 385 1
22. நற். 232 1

"வரையோன் வண்மை போலப் பலவுடன்
கிளையோ(டு) உண்ணும் வளைவாய்ப் பா**சினம்**"[23]

**பருந்தினம்**

பாலை நிலத்திலுள்ள ஓமை மரத்தினது கிளையிலுள்ள தன் கூட்டத்தினின்றும் பிரிந்து வந்த பருந்து என்னுமிடத்துப் பருந்துகளின் கூட்டம் இனம் எனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் எண்ணத்தக்கவை.

"செப்பினஞ் செலினே செலவரி தாகுமென்
றத்த வோமை அங்கவட் டிருந்த
**இன**ந்தீர் பருந்து"[24]

**மயிலினம்**

மயில் கூட்டங்கள் மரங்கள் நிறைந்த காட்டில் ஆரவாரிக்கும் என்னும்போது மயில் கூட்டம் இனம் என்ற சொல்லால் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடி கருதத்தக்கது.

"**இன**மயில் அகவு மரம்பயில் கானத்து"[25]

**புள்ளினம்**

அலைகடலில் மீன்களைத் தின்னுகின்ற புள்ளினம் என்னும்போது தொகுதியான பறவைகளின் கூட்டம் இனம் எனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் உணரத்தக்கன.

"-----------அலைக்குங் கடல்மீன் அருந்திப்
**புள்ளினம்**"[26]

23. நற். 376 : 3-4
24. குறு. 207 : 1 - 3
25. நற். 248 : 1
26. மேலது, 382 : 3-4

## இனக்குருகு

நீர்வற்றிய சேற்றிலுள்ள கொழுத்த தலையுடைய மீனை உண்ணும் குருகுக்கூட்டம், இனமெனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"நீர்பெயர்ந்து மாறிய செறிசேற்று அள்ளல்
நெய்த்தலைக் கொழுமீன் அருந்த **இனக்**குருகு
குப்பை வெண்மணல்"[27]

## நாரை இனம்

இளநடையையுடைய பல நாரைக்கூட்டம் என்னும்போது இனம் என்ற சொல் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடி உணரத்தக்கது.

"மடநடை நாரைப் பல்**இனம்**"[28]

## நீர் வாழ்வன

## மீனினம்

ஒரு தொகுதியான மீன் கூட்டத்தை மிகத் தின்ற வெள்ளிய குருகு என்னும்போது தொகுதியான மீன்கூட்டம் இனம் எனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடி உணரத்தக்கது.

"**இன**மீன் ஆர்ந்த வெண்குருகு"[29]

## சுறா மீனினம்

சுறா மீன் கூட்டம் நிறைந்த கடற்பரப்பு என்னும்போது தொகுதியான சுறா மீன்கூட்டம் இனம் எனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடி கருதத்தக்கது.

"சுற**வினங்** கலித்த நிறையிரும் பரப்பில்"[30]

27. நற். 291 : 1 - 3
28. மேலது, 330 . 2
29. மேலது, 267 : 10
30. மேலது, 223 : 7

## உயிரற்ற பொருள்கள்

### உணவு வகை

தின்று மாளாத அளவிற்கு உணவு வகைகளும் நிலம் சுமக்க இயலாத அளவிற்குப் பல வகைப்பட்ட பொருள் திரள்களும் என்னும்போது இங்கு உணவுகளின் தொகுதிகள் இனம் என்னும் சொல்லால் சுட்டப்பட்டுள்ளமை கருதத்தக்கது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கவை.

"தின்றானா **இனை**வைக
னிலனெடுக் கல்லா வொண்பல் வெறுக்கை"[31]

### ஒத்த மணிக்கூட்டம்

இருண்ட ஒத்த பல மணிகளை உடைய தேர் என்னும்போது ஒத்த பல மணிகள் இனமெனச் சுட்டப்பட்டுள்ளன. பின்வரும் பாடலடிகள் உணரத்தக்கவை.

"..................... இருளின்
**இனை**மணி நெடுந்தேர்"[32]

சங்க இலக்கியங்களில் பல விலங்கு, பறவை ஆகியவற்றின் கூட்டமும் மீன்கூட்டமும் உயிரற்ற பொருள்களான உணவு, மணி ஆகியவற்றின் தொகுதியும் இனம எனக் குறிக்கப்பட்டுள்ளன.

## இ) பாரதிதாசன் பாடல்களில் இனம்

பாரதிதாசன் பாடல்களிலும் உயிருள்ள அல்லது உயிரற்ற பொருள் தொகுதி அல்லது கூட்டத்தை இனம் என்னும் சொல் குறித்து வந்துள்ளது. மேலும் நாட்டினத்தையும் இச்சொல் குறிக்கப் பயன்பட்டுள்ளது.

### விலங்கினம்

### ஆனினம்

ஓரினத் தொகுதியான பசுக்களின் கூட்டம் ஆனினம் எனச் சுட்டப்பட்டுள்ளது.

31 மது. 214 - 215
32. புறம். 145 : 8 - 9

பின்வரும் பாடலடிகள் உணரத்தக்கன.

> "**ஆனினம்** சுமந்தமடி
> ஆறெனவே பால்சுரந்து
> தீர்க்கும்"[33]

### மனித இனம்

### கானத்து விலங்கினம்

மக்கள் கூட்டத்தைக் கானத்து விலங்கினம் என உருவகிக்கும்பொழுது ஓர் உயிரினத் தொகுதியான விலஙகுகளின் கூட்டம் இனம் என்று சுட்டப்பட்டுளளது. பின்வரும் அடிகள் கருதத்தக்கன.

> "............ பிராஞ்சு நாடே
> மான்த்தை உயிராய்க் கொண்ட
> நின்மக்கள், பகைவர் என்னும்
> கானத்து விலங்**கி னத்**தைக்
> கடிந்ததில் வியப்பும் உண்டோ!"[34]

### குரங்கினங்கள்

ஆரியர்கள் தமிழரைக் குரங்கினங்கள் என்று சொல்லினார் என்னும்போது விலங்கினத் தொகுதியான குரங்குக் கூட்டம் இனம் எனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

> "குரங்**கின**ங்கள் என்றுரைத்தார் நம்மை எல்லாம்
> குரங்கரடிக் கூட்டமென்றார் கேட்டி ருந்தோம்"[35]

### பறவையினம்

### புள்ளினம்

ஓர் உயிரினத் தொகுதியான பறவைகள் இனம் எனச் சுட்டப்பட்டுள்ளன. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

33. திருவாசகன்,ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 159
34 மேலது, ப. 1756
35. மேலது, ப. 1480

"புள்ளினம் பாடும் சோலை"[36]

## மயிலினம்

விலங்குகளின் தொகுதி மயிலினம் எனச்சுட்டப்பட்டுள்ளது. இதனை உணர்த்தும் பின்வரும் பாடலடி எண்ணத்தக்கது.

"காருக்கு மகிழகின்ற மயிலினமே"[37]

## பூச்சியினம்

## தேனீ இனம்

மலர்களின் உள்ளே தேன் உண்ணும் இனம் என்னும் போது பூச்சிகளின் ஓரினத் தொகுதியே இனம் எனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

".......... தேனுண்ட தேனீ
இனம் ............."[38]

"நற்றருக்கள் வாசமலர் உட்குடைந்து தேனினங்கள்
பொற்பொடியைச் சூரையிடும் அற்புதங்கொள் வான்மயிலம்"[39]

## தேன் மலரினம்

தேன் சுரக்கும் மலர்களின் தொகுதியே தேன் மலரினம் எனச் சுட்டப்பட்டுள்ளது. இதனைப் பாரதிதாசனார்.

"செயற்கை மலர்காட்டித் தேன்மல ரினம்கொல்லத்
தெரியார் முயல்கின்றார்"[40]

எனக் கூறுகின்றார்.

36. திருவாசகன்,ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 39
37. மேலது, ப.80
38. மேலது, ப.1760
39. மேலது, ப.45
40. மேலது, ப.1518

## உயிரற்ற பொருட்கள்

### முகிலினங்கள்

உயிரல்லாத பொருளை உணர்த்துவதாக முகிலினங்கள் என்று வருமிடம் அமைதல் காணலாம். பின்வரும் பாடலடிகள் கருத்தக்கன.

"பகல்வானிற் கதிரின் வீச்சுப்
பரந்தது! முகி**லி னங்**கள்
வகைவகை ஒவி யங்கள்
வழங்கின"[41]

### விண்மீனினம்

வானிலுள்ள விண்மீன் கூட்டங்களை மீனினம் எனச் சுட்டியுள்ளார். பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"வெம்மையால் அம்மை வார்த்ததுபோல
**மீனினம்** விசும்பில் தான் எழுந்திட"[42]

பாரதிதாசன் பாடல்களில் பல விலங்குகள், பறவை, பூச்சி, மீன் ஆகியவற்றின தொகுதியும் உயிரற்ற முகிற் கூட்டமும் இனம் எனக் குறிக்கப்பட்டுள்ளன.

### நாட்டினம்
:

இனம் என்ற சொல் நாட்டினம் என்ற பொருளில் பாரதிதாசன் பாடல்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. பின்வரும் பாரதிதாசன் பாடலடிகள் கருதத்தக்கவை.

"எனைஈன்ற தந்தைக்கும் தாய்க்கும் மக்கள்
**இனம்**ஈன்ற தமிழ்நாடு தனக்கும் என்னால்
தினையளவு நலமேனும் கிடைக்கு மென்றால்
செத்தொழியும் நாள்எனக்குத் திருநா ளாகும்"[43]

41 திருவாசகன்.ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 430
42 மேலது, ப.1677
43 மேலது, ப.351

பாரதிதாசன் தமிழர் இனம்[44] என்றும் தமிழினம்[45] என்றும் திராவிடர் இனம்[46] என்றும் பல இடங்களில் கூறியுள்ளார். இவ்விடங்களில் எல்லாம் தமிழ் நாட்டினம் என்ற பொருளே பெரிதும் தோன்றிவரக் காணலாம்.

## இனம் என்னும் சொல் பற்றிய ஒப்பீடு

தொல்காப்பியம், சங்க இலககியம, பாரதிதாசன பாடல்கள் ஆகிய மூன்றிலும இனம்என்னும் சொல் காணப்படுகினறது. தொல்காப்பியம் ஒத்த பல பொருட்களின் கூட்டத்தையே இனம் என்று வழங்கியுள்ளது. சங்க இலக்கியங்களில் இப்பொருளுக்கு மாறுபாடு இல்லாமல் இனம் என்ற சொல் விரிந்த நிலையில் பல விலங்குகளையும பறவைகளையும் மீன் தொகுதியையும் உணவுவகைகளையும் ஒத்த மணிக்கூட்டமாகிய உயிரற்ற பொருள் தொகுதிகளையும். உணர்த்தி வந்துள்ளது. சங்க இலக்கியங்களில கையாளப்பட்ட பொருள்களையே ஒத்துப் பாரதிதாசன் பாடல்களிலும் இச்சொல கையாளப்பட்டுள்ளமை உணரலாம். விலங்குத் தொகுதிகளுள் குரங்கு, பசு ஆகியவை சங்க இலக்கியங்களில் குறிக்கப்பட்டுள்ளமை போன்றே பாரதிதாசன் பாடல்களிலும் இனம என்ற சொல்லால் குறிக்கப்பட்டுள்ளன. பறவைகளின் தொகுதி பொதுவாகப் புள்ளினம என ஈரிலக்கியங்களிலும் குறிக்கப்பட்டுள்ளன. இவ்வீரிலக்கியங்களிலும் சிறபபாக மயிலின் தொகுதி இனம் எனக் குறிக்கப்பட்டுள்ளது. உயிரற்ற பொருள் தொகுதி இனம என ஈரிலக்கியங்களிலும் குறிக்கப்பட்டாலும் வேறு வேறு பொருள்கள் இனம் எனக குறிக்கப்பட்டுள்ளன. ஆனால் பெருத்த வேறுபாடு தொல்காப்பியத்திலும் சஙக இலக்கியங்களிலும் இனம் என்ற சொல் நாட்டினத்தை உணர்த்தி எங்கும வரவில்லையென்பதும் பாரதிதாசன் பாடல்களில் இனம் என்ற சொல் பலவிடங்களில் நாட்டினத்தை உணர்த்தப் பயன்பட்டு வந்துள்ளது என்பதும் ஆகும்.

## இனவுணர்ச்சி பற்றிய ஒப்பீடு

### அ) தொல்காப்பியத்தில் இன உணர்ச்சி

#### நாட்டினம்

நாட்டினம் என்பது ஒரு சமூகம் அது ஒரு குலத்தவராகவோ ஒரு குழுவினராகவோ இருக்க வேண்டும் என்பது இல்லை. அது தற்செயலாகக் கூடி மறையும தாறுமாறான கூட்டமும் அன்று. வரலாற்று அடிப்படையில் தோன்றிய பொதுவான மொழி,

44. திருவாசகன்,ஆ., பாரதிதாசன கவிதைகள், பக் 666, 1970
45. மேலது, பக். 1846, 1791
46 மேலது, பக். 1670, 786

நாடு, பொருளாதார வாழ்வு, பொதுப் பணபாடு உடைய உறுதியான சமூகமே நாட்டினம என்று நாட்டினத்தை வரையறை செய்வர்[47]. அதாவது பொதுக்கால்வழி, இடம், மரபு போன்ற எவ்வகையிலேனும் குழுவாக இணைந்த மக்கள்தொகுதி ஒரு பொதுவான மொழியைப் பேசித் தனக்கென்று ஒரு நிலப்பரப்பைப் பெற்றுத் தங்களுக்குள் பொதுவான பண்பாடு, நாகரிகம், பொருளாதார வாழ்வு ஆகியவற்றுடன் கூடிய வரலாற்றுடன் நிலையாக வாழுமானால் அதுவே, நாட்டினமாகும். இத்தகைய நாட்டினம் பற்றி ப. கிருட்டிணன கூறுவன[48] பின்வருமாறு.

"இயற்கையாகவோ, செயற்கையாகவோ அமைந்த நிலப்பரப்பில் தங்களுக்கென்று ஓர் அரசை நிறுவிப் பொது மதத்தையும், பொதுப்பழக்க வழக்கங்களையும், பொதுப்பற்றுறுதி குறிக்கோள்களையும் கொண்டு வாழ்கின்றவர்களை ஒரு நாட்டினத்தவராகக் கருதலாம். ஒரு நாட்டினத்தவர்க்கு அடிப்படைத் தேவையாக இருப்பன நிலம், மொழி, பொருளாதார கலாச்சார ஒற்றுமைகளாகும். எனவே, நாட்டுக் கூறுகள் அனைத்தையும் உள்ளடக்கிய மக்கள் சமூகமே நாட்டினமெனக் கருதலாம்.

நில எல்லை, அரசு, பொதுமொழி, பொதுவான பண்பாடு, நாகரிகம், வாழக்கைமுறை, பொருளாதாரப் பிணைப்பு, வரலாற்றுப் பழமை, பொதுப்பற்றுறுதி என வரும் கூறுகளை உள்ளடக்கியதே நாடு எனப்படும். இந்நாட்டிற்குரிய கூறுகளோடு முழுமை பெற்று வாழும் மக்கள் இனமே நாட்டினமாகும் எனலாம். இத்தகைய நாட்டின் உணர்வினைத தொல்காப்பிய வழியே பின்வருமாறு உணரலாம்.

## நில எல்லை

வடவேங்கடம் முதல் தென்குமரி வரைக்கும் உள்ள தமிழ்கூறும் நல்லுலகம் என்பதுஆகுபெயராகி மக்களைச் சுட்டுகின்றது. அம்மக்கள் வடக்கே வேங்கட மலையில் தொடங்கித் தென்குமரி வரை வாழ்பவர்கள் என்னும்போது தமிழ்மக்கள் வாழும் தமிழ்நாட்டு எல்லை வரையறுக்கப்பட்டுள்ளது. இதனை,

> "வடவேங்கடந் தென்குமரி
> ஆயிடைத்
> தமிழ்கூறு நல்லுலகம்"[49]

என வரும் பனம்பாரனார் தொல்காப்பியத்திற்குப் பாடிய பாயிரத்தின்வழி உணர முடிகின்றது.

47 கிருட்டிணன், ப.. தமிழ நூலகளில் தமிழமொழி தமிழஇனம தமிழ்நாடு. ப 3
48 மேலது.
49. பனம். (தொல். சிறப்புப்) பாயிரம். 1 - 3

புகழ்பெற்ற மூவேந்தர்கள் குளிர்ந்த நீர்ப்பரப்பு முதலான நான்கு எல்லைகளை உடையவர்கள் என்னும்போது தமிழ் வேந்தர்களின் நில எல்லை சுட்டப்பட்டுள்ளது. இதனை,

"வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பே ரெல்லை அகத்தவர்"[50]

எனத் தொல்காப்பியர் கூறுகின்றார்.

**அரசு**

தமிழ்நாட்டை ஆட்சி செய்த சேர சோழ பாண்டிய மூவேந்தர்கள் குளிர்ச்சி பொருந்திய நீர்ப்பரப்பு முதலான நான்கு எல்லைகளுக்குட்பட்ட பகுதியை ஆட்சி செய்தனர் என்னும்போது ஒரு குறிப்பிட்ட நில எல்லைக்குள் தமிழர்கள் அரசினை நிறுவி அரசாட்சி செய்தனர் எனச் சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் நூற்பா கருதத்தக்கது.

"வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு"[51]

**பொதுமொழி**

தமிழ்நாட்டு மக்களனைவரும் பொதுவானதொரு மொழியை அதாவது தமிழ் மொழியைப் பேசியுள்ளனர்.

"தமிழ்கூறு நல்லுலகம்"[52]

"செந்தமிழ் நிலத்து வழக்கு"[53]

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம்"[54]

எனவரும் தொடர்களால் உணரலாம். பொதுவானதொரு மொழியைப் பேசுவதோடு மட்டுமல்லாமல் அம்மொழியின் தனித்தன்மையைக் காக்க வேண்டும் என்ற மொழிக் காப்புணர்வும் இருந்து வந்துள்ளது. பின்வரும் நூற்பாக்கள் கருதத்தக்கன.

50. தொல். பொருள். இளம். செய் 78 . 3-4
51. மேலது, 3
52. பனம்.தொல். சிறப்புப் பாயிரம் ,3
53. தொல். சொல். இளம். எச். 2 - 3
54. மேலது, 4 : 1

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே"[55]

"----- மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தல்"[56]

## பொதுவான பண்பாடு

கற்பென்று சொல்லப்படுவது சடங்குகளுடன் கொள்வதற்குரிய மரபினையுடைய தலைவன், தலைவியைக் கொடுப்பதற்குரிய மரபினையுடையோர் கொடுப்பக் கொள்வதுமாகும் சில சமயங்களில், கொடுப்போரின்றியும் தலைவனுடன் தலைவி உடன்போகிய காலத்துத திருமணம் நிகழும் என்பது தொல்காப்பிய வழிப் புலப்படுகின்றது. இவ்வாறு பண்பாட்டின காரணமாகத் தோன்றும் இன உணர்வு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே"[57]

"கொடுப்போர் இன்றியும் கரண முண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான"[58]

என்னும் நூற்பாக்களால் இதனை உணரலாம்.

நானிலத்திலும் அதாவது முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் பகுதிகளுக்குரிய தெய்வங்களாக மாயோன், சேயோன், வேந்தன்,வருணன் ஆகியோர் சுட்டப்பட்டுள்ளனர். இதன்வழி ஒவ்வொரு நிலத்திற்குரிய தெய்வ வழிபாடும் அந்நிலத்தின் வழியே செய்யப்பட்டதென்பதை அறிய முடிகிறது. இவ்வாறாகத் தமிழ் நிலத்திற்குரிய வழிபாட்டினால் இனஉணர்வு வெளிப்படுகிறது. இதனை உணர்த்தும் தொல்காப்பிய நூற்பா கருதத்தக்கது.

55. தொல். சொல். இளம். எச். 5
56. மேலது, பொருள், இளம். மரபு. 98
57. மேலது, கற்பு. 1
58. மேலது, 2

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே." [59]

**நாகரிகம்**

பெருந்திணைக் குறிப்பில் மடலேறும் நிலை ஒன்றாகும்.[60] சிறப்பற்றதாகக் கருதப்படும் பெண் மடலேறுதல் எந்நிலத்திலும் நிகழ்தல் இல்லை என்னும் போது மனிதர்களிடையே காலப்போக்கில் ஏற்பட்ட திருந்திய நிலையை இது சுட்டுகின்றது எனலாம். அதாவது வாழக்கையில் கடைப்பிடிக்கும் வழிமுறைகளில் செய்யக் கூடியன செய்யக் கூடாதன என்ற ஒழுங்குமுறையே நாகரிகமாகக் காணப்படுகின்றன. இங்குக் கூறியுள்ள மடலேறுதல் பற்றிய நூற்பா பின்வருமாறு:

"எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்
பொற்புடை நெறிமை இன்மை யான"[61]

**வாழ்க்கை முறை**

**காதல் வாழக்கை**

பண்டைத் தமிழ்களின் காதல் வாழ்க்கையின் ஒழுக்கங்களாகக் கைக்கிளை முதலான ஏழினைக் கூறியுள்ளார். இவ்வக ஒழுக்கத்திற்குரிய பொருளாகப் (உணர்வுகளாக) பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகிய ஐவகைகளைக் கூறியுள்ளார். பின்வரும் நூற்பாக்கள் கருதத்தக்கன.

"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப"[62]

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே"[63]

59 தொல். பொருள். இளம அகத். 5
60 மேலது, 51 : 1
61 மேலது, 38
62. மேலது, 1
63. மேலது, 16

## வீரம்

எண்வகை மெய்ப்பாடுகளில் ஒன்று பெருமிதம் (வீரம்) மனிதனுக்குக் கல்வி, தறுகண், இசைமை, கொடை என்னும் நான்கினாலும் வீரம் தோன்றும் என்னும்போது தமிழ் மக்களுக்குரியதான கல்வி (தொழில், போர்ப்பயிற்சி) ஆகியவற்றைக் கூறுகிறார். அவ்வீரர்களின் போரியல் வாழக்கையைப் பற்றித் தொல்காப்பியம் புறத்திணையியலில் விரிவாக விளக்கியுள்ளது. பின்வரும் நூற்பாக்கள் கருதத்தக்கன.

"நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டாம் மெய்ப்பா டென்ப"[64]

"கல்வி தறுகண புகழ்மை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே"[65]

"மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே"[66]

## கடமை சார்ந்த ஐவகைப் பிரிவு

ஓதல், பகை, தூது ஆகியவற்றின் காரணமாகப் பிரிவு ஏற்படும். கல்வி கற்க ஏற்படும் பிரிவு உயர்ந்தவர்களுக்குரியதாகும். இதனை,

"ஓதல் பகையே தூதிவை பிரிவே"[67]

"ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன"[68]

என்னும் நூற்பாக்கள் இதனை உணர்த்தும்.

பகை காரணமாகப் பிரியும் வேந்தன் தானே செல்வதோடு மட்டுமல்லாமல தன்னைச் சார்ந்த தானைத் தலைவர் முதலியோர் செல்லுதலும் உண்டு.

"தானே சேறலுந் தன்னொடு சிவணிய
ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே"[69]

என்னும் நூற்பா கருதத்தக்கதாகும்.

64. தொல். பொருள். இளம். மெய்ப். 2
65. மேலது, 9
66. மேலது, புற. 4
67. மேலது, அகத். 27
68. மேலது, 28
69. மேலது, 29

## அறங்காவல் பிரிவும் பொருள்வயிற் பிரிவும்

சிறப்புடன் வாழ்கின்ற ஏனோர் (மக்கள் அல்லாத தேவர்) முல்லை முதலிய நிலங்களில் உள்ளவர்கள் தவறிய வழிகளிலிருந்து தவறாது நிறுத்தும் பொருட்டு வாழ்க்கைக்குத் தேவையான ஒண் பொருளை உருவாக்கும் பொருட்டுப் பிரிவு உண்டு என்பதைப் பின்வரும் நூற்பா உணர்த்துகின்றது.

"மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே"[70]

## பொருளாதாரப் பிணைப்பு

ஒரு நாட்டின் பொருளாதாரத்தைக் கொண்டு இன உணர்வு வெளிப்படுத்தப்படுகின்றது.இது போக்குவரத்தை எளிமைப்படுத்தல், பொருள்களின் பகிர்வைத் துரிதப்படுத்தல், வணிக வசதிகளை மிகுதிப்படுத்தல் ஆகியவற்றின் அடிப்படையில் நிகழ்கிறது.

ஒரே நிலத்தில் வாழ்கின்ற மக்களிடம் உள்ள பொருள்களை அந்நிலத்து வாழ்வோர்பயன்படுத்துவதோடு மட்டுமல்லாமல் பிற நிலத்தில் வாழும் மக்களும் பயன்படுத்துகின்றனர். எடுத்துக்காட்டாகச் சங்க இலக்கியங்களில் மருத நிலதிதில் உள்ளவர்கள் நெய்தல் நிலக்கருப்பொருளான மீனை உண்ணும் செய்தி சுட்டப்பட்டுள்ளது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"புலவு நாற்றத்தைப் பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ
கறிசோ றுண்டு"[71]

இவ்வாறு பண்டமாற்று முறை பழங்காலத்தில் நிக்ழ்ந்துள்ளது என்பது தெரிய வருகிறது. அக்காலத்தில் பொருள்களின் பகிர்வைத் துரிதப்படுத்தி வணிக வசதிகளை மிகுதிப்படுத்தும் போக்குவரத்துச் சாலை வசதிகள் செய்யப்பட்டிருந்தன எனத் தெரிய வருகிறது.

70. தொல. பொருள். இளம அகத. 30
71. புறம். 14 12 - 14

தலைவன் வினைவயிற் (பொருள்வயிற்) பிரிந்து சென்று திரும்பும் வழியில மனமானது தாமதியாமல் நினைத்தவுடன் செல்லும் பறவை போல் எவ்வாறு பறக்கின்றதோ அதே வேகத்தில் பறந்து செல்லும் குதிரை என்னும்போது சாலைப் போக்குவரத்தின துரிதம் சுட்டப்பட்டுள்ளது. பினவரும் நூற்பா கருதத்தக்கது.

"வினைவயின் பிரிந்தோன் மீண்டுவரு காலை
இடைச்சுர மருங்கில் தவிர்தல் இல்லை,
உள்ளம் போல உற்றுழி உதவும்
புள்ளியற் கலிமா உடைமை யான"[72]

வரைவுகடாதலின் போது தலைவன் தலைவியைக் காணத் தேர், யானை, குதிரை ஆகியவற்றில் வருவான் என்னும்போது தேர் வருமளவிற்குப் போக்குவரத்துச சாலை வசதிகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன என உணர முடிகின்றது.

அரசர்களுக்கு உரியனவாகவும் வேளாளர்கள் அரசரிடத்தில் பெறுவனவாகவும் தேர்கள் சுட்டப்பட்டுள்ளன. பின்வரும் நூற்பாக்கள் கருதத்தக்கன.

"தேரும் யானையுங் குதிரையும் பிறவும்
ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப"[73]

"படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடைநவில் புரவியுங் களிறுந் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்"[74]

மேற்கூறியவற்றிலிருந்து அரசர், வேளாளர் பொதுமக்கள் ஆகியோர் பயன்படுத்துமளவிற்கு அதாவது வசதிகளை மிகுதிப்படுத்துமளவிற்குப் போக்குவரத்து வசதிகள் எளிமைப்படுத்தப்பட்டுப் பொருள்களின் பகிர்வு விரைவுபடுத்தப்பட்டுள்ளது என்பது உணரலாம்..

72. தொல. பொருள். இளம் கற்பு 53
73. மேலது, பொருளி. 17
74 மேலது, மரபு. 70 : 1 - 3

## வணிக வாழ்க்கை

வைசியன் பயறு, உளுந்து முதலான எட்டுவகை தானியங்களை விற்பனை செய்து வாழலாம் என்னும்போது தமிழ்நாட்டு மக்கள் வணிகம் செய்யும் தன்மையா என்பது புலனாகிறது.

"வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை"[75]

"மெய்தெரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பா லான"[76]

எனத் தொல்காப்பியர் கூறும் நூற்பாக்கள் வழி உணரலாம.

நாட்டின் பொருளாதாரப் பிணைப்பை இந்நிலையில் உணர முடிகின்றது.

## வரலாற்றுப் பழமை

தலைவியின் உயிரின் மேலாக நாணமும் நாணத்தின் மேலாகக் குற்றமில்லாத மெய்யுணர்வாகிய கற்பும் சிறந்தவையெனத் தொன்மை வாய்ந்த முன்னோர் கூறுவார் என்பர் தொல்காப்பியர். தொன்மை வாய்ந்த முன்னோர் என்னும் போது அதாவது பழமை வாய்ந்த தமிழ் அறிஞர்களைத் 'தொல்லோர்' எனச் சுட்டும்போது அவர்களின வரலாற்றுவழிப் பழமை உணர்த்தப்படுகின்றது.

"உயிரினும் சிறந்தன்று நாணே, நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்
தொல்லோர் கிளவி"[77]

என்னும் தொடர்களால் இதனை உணரலாம்.

## பொதுப்பற்றுறுதி

செந்தமிழ் பேசுகின்ற பன்னிரு நிலத்திலும் வழங்கி வரும் சொற்கள, அந்தந்த நிலத்தில் வழங்கி வரும் சொற்கள் குறிக்கின்ற பொருளையே குறிக்கும். தாவது திசைச் சொல்லாக வருஞ் சொற்கள் வெவ்வேறாக இருப்பினும் ஒரே பொருளையே

75. தொல். பொருள். இளம. மரபு. 76
76. மேலது, 77
77. மேலது, களவு. 22 : 1 - 3

குறிக்கும். செந்தமிழ் பேசுகின்ற பன்னிரு நிலம் என்னும்போது தென்பாண்டி நிலம முதலான பன்னிரு நாட்டிலும் ஒரே மொழி பேசுவர் என்னும் மொழிவழிப் பொதுப்பற்றுறுதியின மூலம் இன உணர்வை வெளிப்படுத்துகிறார். பின்வரும் நூற்பா எண்ணத்தக்கது.

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி"[78]

## ஆ) சங்க இலக்கியத்தில் இன உணர்ச்சி

சங்க காலத்தில் நாட்டின உணர்வு தமிழரிடையே வளர்ச்சி பெற்றிருந்தது. நிலஎல்லை, அரசு,பொதுமொழி, பொதுவான பண்பாடு, நாகரிகம், வாழ்க்கை முறை. பொருளாதாரப் பிணைப்பு, வரலாற்றுப்பழமை, பொதுப்பற்றுறுதி என வரும் கூறுகளைச் சங்க இலக்கிய வழி உணர முடிகின்றது. அதனைப் பின்வருமாறு உணரலாம்.

### நிலஎல்லை

தமிழ்நாட்டின் எல்லைகள், சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. வடக்குப் பகுதியின் எல்லையாகப் பனி படர்ந்துள்ள பெரிய மலையையும் தென்பகுதியின் எல்லையாகக் குமரிக் கடலையும் கிழக்குத் திசையிலும் மேற்குத் திசையிலும் எல்லைப் பகுதிகளாகப் பெரிய கடல்களையும் அதாவது குன்று, மலை, காடு, நாடு ஆகியவற்றை எல்லையென உடையவர்களாக இருந்தனர். இவர்கள் தீயனவற்றை விலக்கி நடுவுநிலையோடு ஒன்றுபட்டு வாழ்ந்தனர் எனச் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

"தென்குமரி வடபெருங்கடல்
குணகுடகட லாவெல்லை
குன்றுமலை காடுநா
டொன்றுபட்டு வழிமொழியக்
கொடிதுகடிந்து கோறிருத்திப்
படுவதுண்டு பகலாற்றி
இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல"[79]

78. தொல். சொல். இளம். எச். 4
79. புறம். 17 : 1 - 8

என்னும் பாடலடிகளால் உணரலாம. தமிழர்களின் ஆட்சி எல்லைக்குட்படடுச செழிப்புற்றிருந்தமையும் புலப்படுகின்றது.

**அரசு**

"முரசு ஒலிக்கின்ற படையைக் கொண்டு ஆட்சி செய்யும் மூவேந்தர்களின ஆட்சியிலும் அரசெனச் சொல்லப்படும் சிறப்பினையுடையது நின்னுடைய அரசாகும்." பாடலடிகள் பின்வருமாறு.

"முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்
அரசெனப் படுவது நினதே" [80]

என்னுடைய ஆட்சியில் வேண்டுமென, இரப்பவாகளுக்குச் சிறப்புற்று விளங்கும அரசைக் கொடுப்பது எளியது எனனும்போது அரசனின் கொடைச்சிறப்பினை விளக்குகிறது

"மெல்ல வந்தென் னல்லடி பொருந்தி
ஈயென விரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழு தாய்த் தரசோ தஞ்சம்" [81]

என்னும் பாடலடிகளால் இதனை உணரலாம்.

விண்ணளவிற்கு உயர்ந்த வெண்குடையினையும் முரசினையும் உடைய அரசாட்சி என்னும் போது அரசாட்சியின் உயர்வு சுட்டப்பட்டுள்ளது. இதனை உணர்த்தும பாடலடிகள் பின்வருமாறு.

விசும்புற வோங்கிய வெண்குடை
முரசுகெழு வேந்த ரரசுகெழு திருவே" [82]

மேற்கூறிய பாடல்களில் அரசு எவ்வாறு சிறப்புற்று இருந்ததெனவும் அதனை ஆட்சி செய்தவனின் மன இயல்பு இன்னது என்பது பற்றியும் கூறப்பட்டுள்ளது.

80 புறம். 35 4-5
81. மேலது, 73 1 - 3
82 மேலது, 75 14, 15

## பொதுமொழி

ஒலிக்கும் கடலாற் சூழப்பட்ட அகன்ற உலகத்துத் தலையாலங்கானத்தில் தமிழ்ப்படைகள் மோதின. அங்குள்ள உயிர்களை ஒரு சேர அழிக்கும் வெற்றிச் சிறப்புடைச செழியன் என்னும் போது போர் செய்த இருபடைகளும் தமிழ்ப்படைகள். அதாவது தமிழ பேசும் மக்கள் போரிட்டனர் என்னும் பொருள்படும்படி சுட்டப்பட்டுள்ளது. இங்கு மக்கள் பேசும் பொதுமொழியைக் கொண்டு " தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானம்" எனக கூறப்பட்டுள்ளது.

"இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து
மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையும்
நின்னொடு தூக்கிய வென்வேல் ஒழிய"[83]

என்னும் பாடலடிகள் கருதத்தக்கவை.

## பொதுவான பண்பாடு

உலகத்தில் நலம் தரும் சமுதாயப் பண்புகளை அதாவது இன (மனித இன) மேன்மைத் தன்மைகளை வளர்க்கக் கூடிய அறிவு, ஒழுங்கு இவற்றால் மக்கள உள்ளம் சிறப்புற்றிருத்தலே பண்பாடாகும். இப்பண்பாட்டு உணர்வினை, "பண் பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்"[84] எனக் கூறுகின்றது. அதாவது உலகவொழுககம் அறிந்தொழுகுதல் மக்கள் பண்பாகும்.

மன்னன் வாழ வேண்டும் அறச் செயல்கள் மிகுதியாகச் சிறக்க வேண்டும். அதாவது நன்மை தருவன சிறந்து விளங்க வேண்டும். அல்லாதன (நன்மை அல்லாத தீமை தருவன) நீங்க வேண்டும் என விரும்பும் தலைவியின் தாய் சுட்டப்பட்டுள்ளாள். அதாவது மேன்மையான (ஒழுங்கு முறையான) நல்வாழ்வு வாழ வேண்டுமெனச் சுட்டப்படும் தன்மை புலப்படுகின்றது. இதனை,

"வாழி யாதன் வாழி யவினி
அறநனி சிறக்க வல்லது கெடுக
வெனவேட் டோளே யாயே"[85]

83 புறம் 19 1 - 4
84. கலித். 133 8
85. ஐங். 7 · 1 - 3

எனனும் பாடலடிகளால உணரலாம்

தமிழா இநதிரா் தரும அமிழதம கிடைத்தாலும் அதனை இனியதென நினைத்துத் தாம் உண்ணமாட்டாா்கள். எல்லோருடனும் வெறுப்பில்லாமல் பழகக்கூடியவா்கள். பிறா் அஞ்சும் துன்பத்தினைக் கண்டு அஞ்சாதவாகள். புகழ் தரும் செயலுக்காக உயிரையும் கொடுப்பவா்களா. உலகம் முழுவதையும் கொடுப்பதானாலும் பழிவரும் செயல்களைச் செய்யமாட்டாா்களா. மனத்தளா்ச்சி இலலாதவாகள். பிறா்நலம் விரும்புபவா்கள் எனக கூறப்பட்டுள்ளது. அதாவது மேனமையான எண்ணங்கள், செயல்கள் ஆகியவற்றைக் கொண்ட பண்பாட்டினையுடையவா்களா தமிழ்மக்களா என்பது விளக்கப்பட்டுள்ளது. இதனை உணா்த்தும் பாடலடிகள் பின்வருமாறு:

"உண்டா லமமவிவ் வுலக மிநதிரா்
அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலா்
துஞ்சலு மிலா்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவா் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளல ரயா்விலா்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறா்க்கென முயலுந ருண்மை யானே"[86]

## நாகரிகம்

மனிதன் (உள்ளத்திற்குப் புறம்பான) புறச் செயல்பாடுகளில் திருந்தி வாழும் செம்மைத் தன்மை நாகரிகமாகும். மக்கள் இயற்கையில் கிடைக்கும் உணவு வகையான பனை நுங்குச் சாறு, கரும்புச் சாறு, தெங்குச் சாறு ஆகியவற்றையும் செயற்கையாக உளுத்தம் பருப்பில் செய்த உணவு, தேன் கலந்த பால் ஆகியவற்றை உண்டு வந்தனா். இதனை,

"இரும்பனையின் குரும்பைநீரும்
பூங்கரும்பின் றீஞ்சாரும்
ஓங்குமணற் குலவுத்தாழைத்
தீநீரோ டுடன்விராஅய்
முந்நீருண்டு"[87]

86. புறம். 182
87. மேலது, 24 : 12 - 16

"உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை"[88]

"------------------------தேம்பெய்

தளவுறு தீம்பால"[89]

"தேங்கலந் தளைஇய தீம்பால்",[90]

" பிரசங் கலந்த-வெண்சுவைத் தீம்பால்",[91]

என்னும் பாடலடிகளின் மூலம் உணரலாம். மேறகூறியவற்றால் சங்க கால மக்கள் தேவையானவற்றை முறையாகச் செய்து உண்ணும் நாகரிக வாழ்வை மேற் கொண்டிருந்தனா என்பது புலனாகிறது. உணவு முறையில் மட்டுமல்லாமல் உடை உடுத்தும் நாகரிக வாழ்க்கையை வாழ்ந்தனர். இரண்டு வகையான உடையை உடுததினர் என்பது

"உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே"[92]

என்னும் பாடலடியால் தெரிய வருகின்றது. பெண்கள் மணிகளை உடைய பொற்சிலம்புகள பொன் வேலைப்பாடமைந்த கை வளையல்கள் ஆகியவற்றையும் காதில் குழையையும அணிந்திருந்தனர். பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"நான்மகி ழிருக்கை காண்மார் பூணொடு
தெள்ளரிப் பொற்சிலம் பொலிப்ப வொள்ளழல்
தாவற விளங்கிய வாய்பொன் னவிரிழை
அணங்குவீழ் வன்ன பூந்தொடி மகளிர்"[93]

"சிறுகுழை துயல்வருங் காதில்"[94]

"பூங்குழை யூசற் பொறைசால் காதின்"[95]

## வாழ்க்கை முறை

தலைவனைப் பிரிந்த தலைவி அப்பிரிவை எண்ணி வருந்தி அப்பிரிவு எண்ணி வருந்தி அப்பிரிவு நீங்குவதற்கு அதாவது திருமணம் நடைபெற வேண்டுமெனத தன்குல தெய்வத்தைத் தொழுகிறாள். அவ்வாறு தெய்வத்தைத் தொழத்தேன் நிறைநத

88 அகம. 86 1
89 மேலது, 89 19-20
90 மேலது, 207 : 14
91. நற். 110 · 1
92. புறம. 189 - 5
93. மது. 443 - 446
94. பெரும. 161
95. பொருந 30

வேங்கை மலர்களை வைத்துக் கலங்கிய கண்களுடன் வழிபடுகிறாள். இதனை உணர்த்தும் பாடல் பின்வருமாறு:

"குன்றக் குறவன் காதன் மடமகள்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்
தேம்பலிச் செய்த வீநறுங் கையண்
மலர்ந்த காந்த ணாறிக்
கலிழ்ந்த கண்ணளெம் மணங்கி யோளே"[96]

சிலிர்த்துக் கொண்ட முடியினையுடைய ஆண்பன்றி வற்றிய கொங்கைகளையுடைய பெண்பன்றியுடன் சேர்ந்து தினைக்கதிர்களை அழித்துக் கொண்டிருக்கும். அவ்வாறு செய்யும் பன்றிகளை அழித்துக் கானவன் கரிய கூந்தலையுடைய மனையாளிடம் கொடுக்க, அவள் அதை எல்லோருக்கும் பகிர்ந்து கொடுப்பாள் என அனைவருக்கும் பகிர்ந்துண்ணும் அவர்களின் வாழ்க்கை முறை வெளிப்படுத்தப்படுகின்றது. இதனை உணர்த்தும் பாடலடிகள் கருதத்தக்கன.

"பிணர்ச்சுவல் பன்றி தோன்முலைப் பிணவொடு
கணைக்கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்
கல்லதர் அரும்புழை அல்கிக் கானவன்
வில்லில் தந்த வெண்கோட்(டு) ஏற்றைப்
புனையிருங் கதுப்பின் மனையோள் கெண்டிக்
குடிமுறை பகுக்கும் நெடுமலை"[97]

## பொருளாதாரப் பிணைப்பு

தழையுள்ள மாலையையுடைய வலிமை மிகுந்த எருதுகளைச் சிறிய துளையையுடைய சகடத்தில் பெருங்கயிற்றால் பிணைத்துக் கட்டி அவற்றைக் (எருதுகளை) கவனித்துக் கொண்டு மேலும் பல எருதுகளையும் நீண்ட பாதையில் உப்பு வணிகர்கள் கொண்டு சென்றனர். இதனை,

96. ஐங் 259
97. நற். 336

"முடலை யாகைகை முழுவலி மாக்கள்
சிறுதுளைக் கொடுநுக நெறிபட நிரைத்த
பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச்
சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப்
பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி"[98]

என்னும் பாடலடிகளால் உணரலாம்.

வளைந்த பலாமரத்தின் அடிப்பகுதியில் சிறு சுளைகள் உள்ள பெரிய பழம் உள்ளது போல் மிளகினது சுமையைக் கழுதைகள் தாங்கிச் செல்லும் பெருவழியே சென்றனர். பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுசுளைப் பெரும்பழங் கடுப்ப மிரியல்
புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்
தணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்".[99]

மேற்கூறிய பாடல்களில் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு வணிகம செய்யச் செல்லும் வழிகள் நீண்டிருந்தன எனச் சுட்டப்பட்டுள்ளது. எனவே, அக்கால மக்கள் வணிகம் செய்வதற்கேற்ற போக்குவரத்து வசதிகள் இருந்தன என்பது தெளிவாகின்றது.

## வரலாற்றுப் பழமை

முன்னோர்களுக்கு முன்னோர்களைக் கூற்றம் கொண்டு போனதால் வந்த அரசு, பழைய வெற்றியால் கிடைத்ததாகும் என்னும்போது "மூத்தோர் மூத்தோர்" எனக் கூறப்படும் சொற்கள் ஆட்சி செய்தவர்களின் தொல் பழமையைச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.

"மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப்
பாறர வந்த பழவிறற் றாயம்".[100]

என்னும் பாடலடிகள் கருதத்தக்கன.

98. பெரும். 61 - 65
99. மேலது, 77 - 81
100. புறம். 75 . 1-2

மிகப் பழமையான நகரின் வாயிலில் உள்ள குளிர்ந்த பொய்கையில் மூழ்கி அந்த இடததில் உள்ள வேம்புத் தளிரைச் சூடிக்கொண்டு தெளிவான ஓசையையுடைய பாறையின் முன்னே யானைபோல் செழியன் வந்தான். செழியனின் ஊர் "மூதூர்" என்னும்போது ஊரின் வரலாற்றுப் பழமை அறியக் கிடக்கின்றது. இதனை,

"மூதூர் வாயிற் பனிக்கய மண்ணி
மன்ற வேம்பி னொண்குழை மலைந்து
தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி
வெம்போர்ச் செழியனும் வந்தனன்".[101]

என விளக்கியுள்ளமை உணரலாம்.

## பொதுப்பற்றுறுதி

"மனிதனுக்குத் தீமையும் நன்மையும் தாமே உண்டாகும். பிறரால் வருவதல்ல. துன்பம் வருதலும், அது தீர்தலும் அத்தீமை நன்மைகளைப் போல் தாமாகவே வருவனவாகும். உலகில் பிறந்தவர் இறந்து போதல் என்பது புதியது அன்று. இவைகளெல்லாம் இயற்கையில் நடைபெறுவதாகும். எனவே, நாம் விரும்பிய பொழுது உயிர் வாழ்தலை இனிதெனக் கருதி மகிழ்ச்சியடைதலும், வெறுப்புற்ற பொழுது உயிர் வாழ்க்கை துன்பமுடையது என வருந்துதலும் இல்லை. இவ்வுலகில் பிறக்கின்ற உயிர்கள் அனைத்தும் வெள்ள,நீர் செல்கின்ற வழியாகவே செல்கின்ற தெப்பம் போல ஊழ்வினை வழியாகவே செல்லும் என்பதனைப் பெரியோர்களால் தெரிந்து கொண்டோம். எனவே. மேன்மையுற்றுத் தோன்றும் பெரியோரை வியந்து போற்றுதலும் நன்மை இல்லாதவர்களைச் சிறியோர் எனத் தாழ்த்துதலும் செய்யோம். ஆகவே, எமக்கு எல்லா ஊர்களும் சொந்த ஊர். எல்லா மக்களும் சுற்றத்தார்"[102] எனச் சுட்டப்பட்டுள்ளது.

மேற்கூறிய பாடலில், எல்லா மக்களும் பிறந்துபின் இறப்பவர்கள் என்றும் இன்பம் துன்பம் என்ற இரண்டும் வருவதுபோலப் போகும் தன்மையுடையவையாதலால் பெரியவர் சிறியவர் எனப்பாகுபாடு செய்யலாகாது என்றும் கூறப்பட்டுள்ளது. எனவே, இந்நிலையில்

101. புறம். 79 : 1 - 4
102. மேலது, 192

"யாது மூரே யாவருங் கேளிர்"

என ஓரினமாகக் கருதும் பொதுநிலை சுட்டப்படுகின்றது.

ஓர் இனம் எனத் தனித்துக் காண்பதற்குரிய கூறுகள் சங்க இலக்கியங்களில் புலப்படுதலின், அவற்றில் இனவுணர்வு தோன்றிவிட்டமை உணரலாம்.

## இ) பாரதிதாசன் பாடல்களில் இன உணர்ச்சி

பாரதிதாசன் காலத்தில் அயலவர், தமிழரை உள்ளிட்ட பாரத மக்களை ஆண்டு வந்தமையால், அவர்களை வெளியேற்ற வேண்டும் என்ற உணர்வு தோன்றி வரலாயிற்று. நிலவெல்லை, அரசு, பொதுமொழி, பொதுவான பண்பாடு, நாகரிகம், வாழ்க்கை முறை, பொருளாதாரப் பிணைப்பு, வரலாற்றுப்பழமை, பொதுப்பற்றுறுதி எனவரும் கூறுகளைப் பாரதிதாசன் பாடல்களில் உணர முடிகின்றது. இதனைப் பின்வருமாறு விளக்கலாம்.

### நிலஎல்லை

பாரதிதாசன் பாடல்களில் நாட்டெல்லையாக நான்கு பக்கமும் சுட்டப்பட்டுள்ளது. வட எல்லை இமயமலை எனவும் தென் எல்லை குமரிமுனை எனவும் கூறப்பட்டதில் வேறுபாடு இல்லை. ஆனால்,கிழக்கு, மேற்கு எல்லைகள் கூறப்பட்டதில் வேறுபாடு காணக்கிடக்கின்றது. கிழக்கு, மேற்கு எல்லையாகத் தொடர்ச்சி மலை இரண்டு எனவும் அடல்சேர் வங்கம் ஆழும் கடல்கள் எனவும் வேறுபட்ட எல்லைகள் சுட்டப்படுகின்றன.[103]

### அரசு

"மூவேந்தர் ஆண்ட அரசு இன்று அயலவரிடம் உள்ளது. அதைக கைப்பற்றுக. சேர சோழ பாண்டியர் மரபு வழி வந்தவர்கள் என்றாலே அஞ்சி ஓடுவார்கள். அப்படிப்பட்ட அரசை வடவர்கள் ஆள்வது நன்றோ" எனச் சுட்டப்பட்டுள்ளது.[104]

### பொதுமொழி

ஆதிமனிதர்கள் பேசிய மொழி தமிழ்மொழி. மக்களுக்கெல்லாம் நல்வழியைக் காட்டிய மொழி. எல்லா மொழிக்கும் தமிழ் மூலமொழி அமுதமொழி. எல்லாச் சிறப்புக்களையும் உடையது தமிழ். தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகள்

103. திருவாசகன்,ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 67
104. மேலது, பக். 246, 717

அத்தனையும் தமிழ். அத்தமிழ் மொழி உலகமெங்கும் பொதுமொழியாக வேண்டும் என்ற எண்ணம் புலப்படுகின்றது.[105]

உலகத்தில் உள்ள மொழிகளில் ஒரு மொழி தமிழ். அம்மொழியைப பாழ்படுத்திவிட்டுத் தம் மொழியை வளர்ததுக் கொள்பவர்களை நினைத்து வருநதும தன்மை புலப்படுகின்றது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"வீரர் மரபில் விளைநத மணிவிளககே!
பாரில் ஒரு மொழியைப் பாழாககிச்-சீரின்றித்
தம்மொழியை மேலாக்கும
தக்கைகளும் வாழ்ந்ததுண்டோ?
இம்மா நிலத்தில் இயம்பு"[106]

### பொதுவான பண்பாடு

"திருமணம் என்பது தலைவன், தலைவி ஆகிய தலைமக்கள் இருவரும ஒருவர் மற்றவர் உள்ளம் புரிந்து வாழ்க்கையில் இணைந்து வாழ முற்படுதல் ஆகும். அன்பால் ஒன்றுபட்டவர்களான தலைமக்களுள் தலைவிக்குத் துன்பம் வந்தால் தலைவன் துன்புறுவான். தலைவனுக்குத் துன்பம் என்றால் தலைவி துன்புறுவாள். அப்படிப்பட்ட வாழ்க்கையே இனிமையானது. அது தான் அன்பு வாழ்க்கை. பார்ப்பானைக் கொண்டு செய்வது அடிமை மணமாகும்" எனச் சுட்டப்பட்டுள்ளது.[107]

தன்னலம் நீங்கிப் பிறர்நலம் பேணுபவர்களுக்கு இடரிழைப்போர் நடப்பவர்களின காலில் பட்டு நசுங்கும் புழுப்போலத் தொன்மையானவர்களால் அகற்றப்பட்டனர். இவ்வுலக நன்மைக்காக வாழ்க்கை என்று தெரிந்து கொண்டவன் செய்யும் தொழிலில் ஐயம் நீங்கி அறிவில் உயர்ந்து புதுமை காண்பான். எனவே பிறர்நலம் பேணி வாழவேண்டுமென்பது சுட்டப்பட்டுள்ளது.[108]

### நாகரிகம்

"ஒருத்தியை ஐவர் மணத்தல், பிச்சை கேட்டல், வருபசிக்கு உயிர்விடல், உருவ வழிபாடு செய்தல், மங்கையரை இழிவு செய்தல், உயிர்ப்பலியிடுதல், மக்களில் வேறுபாடு செய்தல், பழிச்செயல் செய்தல், பார்ப்பானை ஏற்றுக் கொள்ளுதல்,

105 திருவாசகன, ஆ., பாரதிதாசன கவிதைகள், பக் 237, 806
106 மேலது, ப. 1836
107. மேலது, ப. 491
108 மேலது, ப. 494

தலையெழுத்தெனச் சொல்லுதல், ஏய்ப்பவர்களை ஏற்றல், பொய் நூல்களை நம்பி வைத்தல்,தமிழை அழித்தல், காதல் மணத்தைத் தீயதெனல், காட்டுவிலங்கெனப் புணர்தல், முற்பிறப்பு - மறுபிறப்புப் பற்றிக் கூறுதல்,வேறுபட்ட மக்களில் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு நீதி எனல், மாதர் கற்பில்லாதிருத்தல்"ஆகியனவற்றை ஆரியர் நாகரிகமென்கிறார்.[109]

மனிதனுக்கு நீதி, நேர்மை ஆகியன தேவையானவை. எல்லா வளமும் எல்லாச் செல்வங்களும் அனைவருக்கும் பொதுவென்பதுதான் நாகரிகம் என்கிறார். அதாவது மனிதனுக்குள்ள பண்பான செயல்பாடுகள் அனைத்தையும் நாகரிகம் என்ற சொல்லில கையாண்டுள்ளார்.

## வாழ்க்கை முறை

## பிள்ளைக்கு நீதி

"சோம்பியிருத்தல் தீமை. தொண்டு செய்யாதவன் ஆமை. பிறர் தீமையைக் கண்டு அஞ்சுபவன் ஊமை. ஒருவர் போனவழியிலே மந்தை ஆடுபோல் செல்லாதே. யார் எதைச் சொன்னாலும் நீ உண்மையைத் தேடு. அச்சம் நீங்கிச் செயலாற்று. நாட்டிற்கு நல்லது செய்.. பொய் சொல்லிப் பிறர் பொருள்தேடுபவன் பெருச்சாளி. வையக மக்கள எல்லோரும் எல்லாம் பெற்றிட நினைப்பவன் அறிவாளி " என வளரும் பிள்ளைக்கான நீதிகள் சொல்லப்பட்டுள்ளன.[110]

## நிலையாமை

"மனித வாழ்க்கை நிலையற்றது. வலியவர் எளியவர்களைத் துன்புறுத்துகின்றனர். உலகம் முழுதும் ஆள்வதற்காக உன் தாய் (நாடு) துன்பமடைகிறாள். அவள் துன்பம் போக்க உடனே தமிழா நீ விழித்தெழ வேண்டும்" எனக் கூறப்பட்டுள்ளது.[111]

## பொருளாதாரப் பிணைப்பு

முத்து வணிகம் செய்ய ஓரிடத்திலிருந்த குழுவான வணிகர்கள் இன்னோரிடத்திற்குச் சென்றார்கள். அவ்வாறு செல்பவர்கள், பொதிசுமந்த மாடுகளை முன்னே போக விட்டுத் தாங்கள் அதன் பின்னே சென்றனர் என்னும்போது தாங்கள் செய்யும் பொருளைப் பிறர் பயன்பாட்டிற்காக எடுத்துச் சென்று விற்பனை செய்யும்வேளையில் மக்களிடையே பொருளாதாரப் பிணைப்புகள் ஏற்படுகின்றன என்பது உணரலாம். ஈண்டுப்

109. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப 1205
110. மேலது, பக். 576 -577
111. மேலது, ப. 146

பின்வரும் பாடல் கருதத்தக்கது.

"பொதிசுமந்து மாடுகளும் முன்னே போகப்
போகின்றார் வடதேசம் வணிகர் பல்லோர்!
அதிசயிக்கும் திருமுகத்தான், பூங்கோ தைபால்
ஆவிவைத்தோன், பொன்முடியான் அவர்க ளோடு
குதிகாலைத் தூக்கிவைக்கத் துடித்துக் காதல்
கொப்பளிக்கும் மனத்தோடு செல்ல லுற்றான்
மதிமுகத்தாள் வீடிருக்கும் மகர வீதி
வந்துநுழைந் ததுமுத்து வணிகர் கூட்டம்"[112]

## வரலாற்றுப் பழமை

சேர, சோழ, பாண்டியர்கள் தொன்மையான பூமியைக் காத்து வாய்மையுடன் வாழ்ந்தவர்கள். நல்குடியில் பிறந்து வானம் எட்டும் புகழ்கொண்ட தமிழ்க்குல மன்னர்கள் வாழ்க! இன்று அவர்களை முழுவதும் காண முடியவில்லை. பகையை விரட்டித் தன்மானம் காக்க வேண்டும் என்று கூறியுள்ளார்.[113]

## பொதுப்பற்றுறுதி

தமிழர்கள் அனைவரும் தமிழர்களுக்குத் துணையாய் இருக்கத் தமிழைக் கொன்று தமிழினத்தை அழிக்கத் தமிழர் அல்லாதவர்கள் மூச்சுவிடாதுழைக்கின்றார்கள். தமிழர்களுக்குத் தலைவர்களாயிருப்பவர்களுள் தமிழை அழிக்கக் கூலி தருபவரும் உள்ளனர். தமிழ் கொல்லும் தீயதலைமுறை இதுவாகும். அனைவரும் ஒன்று சேருங்கள்[114] என்று கூறியுள்ளார்.

மேலும் "மக்களில் வேறுபாடு இல்லை. அன்பு வாழ்க்கை வாழும் நம்மை அயலவர்கள், அக்கால மனிதர் என நீக்குவார். சாதிகள் வீழ்ந்திட வேண்டும். தமிழினம் வீழ்கின்றது. எனக்குத் தமிழ்மகள் வேண்டும். அத்தமிழ்மகளின் உடல், உயிர் எல்லாம் தமிழாயிருத்தல் வேண்டும். அவ்வமிழ்தில் நான் மூழ்க வேண்டும்"[115] என்றும் பேசியுள்ளார்.

112. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 268
113. மேலது, ப. 246
114. மேலது, ப. 1829
115. மேலது, பக். 1601- 1602

மேற்கூறியவற்றில் மனிதர்களில் வேற்றுமையில்லை. அன்பு வாழ்ககை வாழும் நாம் எல்லோரும் சாதியை அகற்றிப் பழைய நிலைமாற்றித் தமிழினத்தை வீழ்த்தும் தீய தலைமுறையினரை அனைவரும் ஒன்றுபட்டு வீழ்த்தி உடல், உயிர் ஆகிய அனைத்தும் தமிழினமாகும் என்ற பொதுநிலையைப் பெற வேண்டுமெனப் பாரதிதாசன் விளக்கியுள்ளார்.

## இனவுணர்ச்சி பற்றிய ஒப்பீடு

தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் இனம் என்ற சொல் காணப்படினும் அச்சொல் நாட்டினம் என்ற பொருளில் வழங்கப்படவில்லை. ஆனால், தொல்காப்பியத்தில் மொழி அடிப்படையிலே தோன்றிய இனவுணர்ச்சி உணரக்கிடக்கின்றது. குறிப்பிடத்தக்க வகையில் வேற்றின மக்கள் தமிழ்நாட்டிற்கு வந்தமைக்கான குறிப்புத் தொல்காப்பியத்தில் தெளிவாகப் புலப்படவில்லை. தமிழர்கள் அயல்நாடுகளுடன் புரிந்த வாணிபம் காரணமாக வேற்றின மக்களோடு மொழித்தொடர்பு நிகழ்ந்தமைக்குச் சில குறிப்புகள் காணப்படுகின்றன. எனவே, இனவுணர்ச்சி தொல்காப்பியத்தில் காணப்பட்டாலும் அவ்வினவுணர்ச்சி பல தளங்களிலும் விரிவுபட்டுச் செல்வதாகக் கூற இயலாது. ஆனால், சங்க இலக்கிய காலத்தில்- அதாவது பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களின் காலத்தில் அயல்நாட்டவர் தமிழகத்தில் ஊடுருவ முயன்றுள்ளனர். அயலவர் படையெடுப்புகள் பற்றிய இலக்கியச் சான்றுகளும் கிடைக்கின்றன. எனவே, சங்க கால மக்களுக்குத் தங்கள் மொழி, நாகரிகம், பண்பாடு ஆகியவற்றை அயலினத்தவரின் தாக்கத்தினின்றும் காத்துக் கொள்ள வேண்டிய தேவை உண்டாகியிருப்பதை உணரலாம். எனவே, இந்நிலையில் இனவுணர்ச்சி பற்றிய கருத்துகள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் காணப்படுகின்றன. பாரதிதாசன் காலத்திலும் அயலினத்தவரின் ஊடுருவல் தமிழ்நாட்டிலும் இந்தியாவிலும் மிகுதியாகிவிட்டமையால் அதனின்றும் தமிழ்மக்களைக் காத்து இனவிழிப்புணர்ச்சியைக் காட்ட வேண்டிய தேவை பாரதிதாசன் காலத்தில் தோன்றியுள்ளது. எனவே இனவிழிப்புணர்ச்சி பற்றிய கருத்துக்கள் மிகுதியான நிலையில் எடுத்துப் பேசப்படுவதை உணரலாம்.

## முத்திறப்படும் இனவிழிப்புணர்ச்சி

சங்கப்பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் காணப்படும் இனவிழிப்புணர்ச்சியை முத்திறப்படுத்தி நோக்குவது பொருந்துவதாகும். அம்முத்திறப்படுவன பின்வருமாறு:

1. இலக்கியம் சார்ந்த இனவிழிப்புணர்ச்சி

2. அரசியல் சார்ந்த இனவிழிப்புணர்ச்சி

3. சமயம் சாாந்த இனவிழிப்புணர்ச்சி

## இலக்கியம் சார்ந்த இனவிழிப்புணர்ச்சி

தமிழ் இனம் சார்ந்த விழிப்புணர்ச்சியைச் சங்கத் தமிழ்ப் புலவாகளே ஊட்டி வந்துள்ளமை விளக்கிக்காட்டப்பட்டுள்ளது.[116] எனவே இலக்கியம் சாாநத இனவிழிப்புணர்ச்சியைச் சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் ஆராயவது பொருந்துவதாகும்.

## சங்க இலக்கியங்களில் இராமாயணமும் மகாபாரதமும் பொருளிலக்கணமும்

இராமாயணம், மகாபாரதம் ஆகிய நூல்கள் திராவிடப் பண்பாட்டில் முகிழதத ஆதி நூல்கள் அல்ல. ஆரிய நாகரிப் பண்பாட்டையும் பழக்க வழக்கங்களையும் சிறப்பிததுக கூறும் போக்குடையனவாக இந்நூல்கள் அமைகின்றன. இந்நிலையில் சமசுகிருத மொழியில இந்நூல்கள் செல்வாக்கான இடம்பெற்றிருக்கின்றன. வால்மீகி இராமாயணத்தின் காலம கி.மு 3ஆம் நூற்றாண்டு[117] எனக் கூறுவர். வியாசா் எழுதிய மகாபாரதம் கி.மு 4ஆம நூற்றாண்டு அளவில்[118] தோன்றியதென்பர். இந்நூல்களே ஆரியப் பண்பாட்டினையும நாகரிகத்தினையும் அதன் உரிய நிலையில் காட்டுதற்குரியன. வால்மீகி இராமாயணததில இடைச்சங்கம் நிகழப்பெற்ற இடமாகக் குறிக்கப்பெறும் கபாடபுரம் பற்றிப் பேசப்படுகின்றது.[119] செய்யும் போர் பற்றிய அரிய மறைச் செய்தியை வானர வீரர்களோடு ஆராய்தற்பொருட்டு இராமன் ஒலியையடக்கிய ஆலமரம் போன்று, தலைவன் திருமண முயற்சியோடு வந்தமைகது

116. இவ்வாய்வேடு பக்.190-194 காண்க.
117 வையாபுரிப்பிள்ளை, எஸ்., இலக்கிய உதயம் (இரண்டாம் பகுதி),ப 125
118. மேலது, 119.
119. இராசமாணிக்கனார், தமிழ்மொழி இலக்கிய வரலாறு - சங்க காலம்,ப. 82

அலர்வாய்ப் பெண்டிர் பேசும் அலர் ஒலியாரவாரம் குன்றிய ஊா என்று உவமை நிலையில் அகப்பொருளைப் புனைந்துரைப்பதற்கு இராமன் பற்றிய ஒரு கதை பயன்படுத்திக கொள்ளப்பட்டுள்ளமை சங்க இலக்கியத்தில் ஓரிடத்துக்[120] காணப்படுகின்றது. மகாபாரதப போரில் பாண்டவர், கொளரவர் ஆகிய இருதிறப் படைகளுக்கும் உணவு வழங்கியதாகப் பெருஞ்சோற்று உதியஞ்சேரல் என்னும் சேரமன்னன் குறிப்பிடப்பட்டுள்ளான் இம்மனனனை முரஞ்சியூர் முடிநாகனார் என்னும் புலவர் புறநானூற்றில் பாடியுள்ளார்.

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்"[121]

என்னும் அடிகள் நோக்கத்தக்கன.

கபாடபுரத்தில் தமிழாய்ந்த காலத்தில்- அதாவது பெரும்பான்மையான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல் பாடல்கள் தோன்றிவிட்ட - தொகுக்கப்பட்டுவிட்ட - காலத்திற்கு முற்பட்ட காலத்தில் - ஆரியர்கள் தமிழ் நாகரிகத்தை - அறிந்திருந்தனா். அகநானூற்றில் கூறப்பட்ட இராமன் கதை அகப்பொருள் பாடுபொருளுக்குத் துணையாக வந்த உவமையேயாகும். பாண்டவர்ப் படைக்கும் கௌரவர்ப்படைக்கும் போரில் சேரமான பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் உணவளித்தான் என்பது புறநானூற்றால் புலனாகிறது[122] மகாபாரதம் பற்றி அக்காலத்து மன்னர்கள் அறிந்திருந்தார்கள் என்பதை உணரலாம். ஈண்டுக் கருதத்தக்கது ஒன்றுண்டு. இச்சேர மன்னன் பாண்டவர்ப் படைக்கு மட்டுமலலாமல கௌரவர்ப் படைக்கும் ஒத்த நிலையில் உணவளித்தமையை ஆராய்கின்ற பொழுது மகாபாரதப் போரில் நடுநிலை மேற்கொள்ளும் சேர மன்னனுடைய போக்குத் தெளிவாகிறது. கௌரவர்களை உயர்வாகக் கருதாமல் பாண்டவர்களை மட்டுமே உயர்வாகப் பேசிப் பாண்டவர்களைை முதன்மைப்படுத்திப் போற்றும் வேதவியாசரின் மகாபாரதக் கதைக கோட்பாட்டைச் சேரமன்னன் ஏற்றுக் கொண்டவன் அல்லன் என்பதை உணரலாம்.

சங்க காலத்தில் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாரதம் பாடினாரா என்பது ஆய்விற்குரியது. பாரதம் பாடிய பெருந்தேவனார் என்னும் புலவர் பாட்டும் தொகையும ஆகிய சங்க நூல்களிலே எப்பாடலையும் பாடவில்லை. தொகை நூல்களில் கடவுள் வாழ்த்துப்பாடல் சிலவற்றை இவர் பாடியுள்ளார். இக்கடவுள் வாழ்த்துப் பாடல்கள் தொகை

120. அகம். 70
121. புறம். 2 : 13 -16
122. அகம். 233 : 6 - 9

நூல்கள் தொகுக்கப்பட்ட காலத்திலோ பின்னரோ சேர்க்கப்பட்டனவாகும். 'பாரதம் பாடிய' என்று இவர் பெயரில் அடை சேர்ந்துள்ளது. இவர் தன்னுடைய பாடலில் முடிநாகனாரைப் போலப் பாரதக் கதையைப் பாடியதனால் பெயர் பெற்றிருக்கக் கூடும். ஆனால், அத்தகைய பாடலும் இன்று கிடைக்கவில்லை. மேலும் இவர் மகாபாரதம் முழுவதையும் தமிழில் பாடினார் என்பதற்கும் இவர் பாடிய பாடல் சான்று ஏதும் இல்லை எனலாம். பாரதவெண்பா என்பது சங்ககால நூலாகக் கருதற்கியலாது எனலாம்.[123]

இராமனைத் தன்னேரில்லாத தலைவனாக ஏற்றுக் கொண்டும் பரம்பொருளின் அவதாரமாகக் கருதிக் கொண்டும் இராமாயணத்தை விளக்கும் இராமாயண நூல்களின் கோட்பாடுகளையும் கௌரவர்களைத் தீயவர்களாகக் கண்டு பாண்டவர்களை மட்டும் போற்றி அவர்களைப் புகழும் மகாபாரத நூல்களின் கோட்பாட்டையும் கபாடபுரம் தமிழ்நாட்டிலே நிலவிய கி.மு நூற்றாண்டுகளிலும் சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் என்னும் பழைய தமிழ்ச் சேர மன்னன் காலத்திலும் தமிழ்மக்கள் ஏற்றுக் கடைப்பிடிக்கவில்லை. இந்நிலையிலேயே, அப்பழங்காலத்தில் வால்மீகி இராமாயணத்தையும் வியாச பாரதத்தையும் ஒத்த இதிகாச நூல்கள் தமிழில் பாடப்படவில்லை. மாறாகத் தமிழில் பொருளிலக்கணம் சிறந்ததோர் இடத்தைப் பெற்றிருந்தது. பொருளிலக்கணத்திலும் அகப்பொருளிலக்கணம் தமிழ் என்ற பெயரினாலேயே குறிப்பிடப்படுவதற்குரிய சிறப்பையும் செல்வாக்கையும் பெற்றிருந்ததைத் தொல்காப்பியத்தினாலும் நற்றினை முதலிய சங்க இலக்கியங்களினாலும் உணரலாம்.

## தெலுங்கு கன்னட மலையாளத்தில் இராமாயண மகாபாரதக் கதை அடிப்படை இலக்கியம்

திராவிட மொழி சார்ந்த தெலுங்கு, கன்னட, மலையாள மொழிகளுள் தமிழ் மொழியில் காணப்படுவது போன்ற தனித்தன்மையான இலக்கியங்கள் தொடக்க காலத்தில் தோன்றவில்லை. இராமாயண, மகாபாரத இதிகாசங்களை அடிப்படையாகக் கொண்ட இலக்கியங்களே இம்மொழிகளில் இலக்கிய வரலாற்றின் தொடக்க காலத்திலும் அதனைத் தொடரும் காலத்திலும் மிகுதியும் தோன்றி வந்துள்ளன என உணரலாம். இதனைப் பின்வரும் தெலுங்கு, கன்னட, மலையாள இலக்கிய வரலாற்றுக் குறிப்புகளால் அறியலாம்.

123. வேங்கடசாமி, சீனி., மறைந்து போன தமிழ் நூல்கள், ப. 96

## தெலுங்கு இலக்கிய வரலாற்றில் இராமாயணமும் மகாபாரதமும்

தெலுங்கு வரலாற்றுக்கு முந்திய காலத்தில் கிடைக்கும் முதல் இலககிய நூல் நன்னயப்பட்டு எழுதிய மகாபாரதமேயாகும். இவ்விலக்கிய வரலாற்றில் கி.பி 10ஆம நூற்றாண்டு முதல் கி.பி 14ஆம் நூற்றாண்டு வரைக்கும் உள்ள காலம் புராண காவிய காலம். இக்காலத்தில் நன்னயா வடமொழியில் எழுதிய மகாபாரதத்தை முதன் முதலில மொழிபெயர்த்ததே, தெலுங்கில் கிடைக்கும் முதல் இலக்கிய நூலாக உள்ளது. இவருககுப பிறகு 13ஆம் நூற்றாண்டில் திக்கானாவும் 14ஆம் நூற்றாண்டில் எர்ரனாவும் மொழிபெயர்ப்புச் செய்து, அப்பணியை நிறைவு செய்தனர். கி.பி 1200-1250 களில் கோனாபுத்தாரெட்டியால வான்மீகி இராமாயணத்தை அடிப்படையாகக் கொண்டு இரங்கநாத இராமாயணம் எனனும் நூல் எழுதப்பட்டது. பாசுகர இராமாயணக் கவிஞர்களின் காலம் 14ஆம் நூற்றாண்டாகும் அந்நூற்றாண்டில் சம்பு காவிய வடிவில் இராமாயணம் முதன்முதலில் வெளிவந்தது. கி.பி 1385-1475, 1385-1553 ஆகிய காலங்களில் இராமாயண, மகாபாரதக் கதைகள் பரவலாகக் காணப்படுகின்றன.[124]

## கன்னட இலக்கிய வரலாற்றில் இராமாயணமும் மகாபாரதமும்

கி.பி 9ஆம் நூற்றாண்டில் ஹரிவம்சம், சூத்ரகம் என்ற நூல்களில் புராணம், பாரதம் முதலிய பிரிவுகள் இருந்தன. பம்பன் கி.பி 941-ல் ஆதிபுராணம், விக்கிரமார்ச்சு விசயம் அல்லது பம்ப பாரதம் ஆகிய இரண்டு நூல்களை இயற்றினார். பம்பனின் சமகாலத்தில் வாழ்ந்த நூல்களை இரு கவிகள் பொன்னனும் இரன்னனும் ஆவர். பொன்னன் சாந்தி புராணம், புவனைக இராமாப்யுதியம் ஆகிய நூல்களையும் இரன்னன் அசித புராணம், சாகச பீம விசயம் அல்லது கதாயுத்தம் ஆகிய நூல்களையும் இயற்றியுள்ளனர். பம்பனுடைய விக்ரமார்சுன விசயம் போல் இரன்னனின் சாகச பீம விசயம் சிறந்து விளங்கியது. இதே காலகட்டத்தில் நாகச்சந்திரன் இயற்றிய நூல்களுள இராமச்சந்திர புராணமும் ஒன்றாகும். இப்புராணத்தில் இடம்பெறும் சீதை கற்புள்ளவளாகவும இராம,இலக்குவர்கள் பல பெண்களை மணப்பவர்களாகவும் காணப்படுகின்றனர். 1338ஆம் ஆண்டுக்கவிகளில் சிறந்தவனான குமாரவியாசனின் கன்னட பாரதம் அல்லது கதுகின பாரதம் பத்துப் பருவங்களும் நூற்றைம்பது சந்திகளும் 8500 பாமினீ சட்பதிகளும உள்ளடங்கிய பெரிய நூலாகும். குமார வியாசனின் தொரவே இராமாயணம், வால்மீகி இராமாயணம் முழுவதையும் மொழிபெயர்த்த முதல் கன்னடக் காவியமாகும். மேலும்

124. சேதுபாண்டியன், தா., தெலுங்கு இலக்கியம ஓர் அறிமுகம், பக். 8 - 63

இவர் சித்திர பாரதம் என்னும் நூலை இயற்றியுள்ளார். 19 ஆம் நூற்றாண்டின் கடைசிப பகுதியில், தோன்றி 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை வாழ்ந்த முத்தணன, 'அற்புத இராமாயணம்', 'இராம பட்டாபிசேகம்', 'இராமாசுவமேதம்' போன்ற காவியங்களையும் பகவத் கீதை, இராமாயணம் ஆகியனவற்றின் மொழிபெயர்ப்பையும் செய்துள்ளார்.[125]

## மலையாள இலக்கிய வரலாற்றில் இராமாயணமும் மகாபாரதமும்

ஆதிகால இலக்கியம் எனப்படும் பாட்டிலக்கியத்தில் இராமசரிதம் தான் மிகவும் தொன்மையானது. இதன் காலம் கி.பி 12 ஆம் நூற்றாண்டாகும். கிருட்டினக் காதை 15 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. இதன் ஆசிரியர் சேரி நம்பூதிரி ஆவார். மலையாளக் கவிதைகளில் முதலிடம் பெறும் சம்பு காவியத்தின் ஆசிரியர் நம்பூதரி ஆவார். சம்புக்களில் இராமாயணச் சம்பு, பாரதச் சம்பு, நைடதச் சம்பு ஆகியன குறிப்பிடத் தகுந்தவைகளாகும். இச்சம்புக்களை இயற்றிய ஆசிரியர்களின் பெயர் தெரியவில்லை. சம்பு ஆசிரியர்களில் புனம் நம்பூதிரி, மழமங்கலம் நம்பூதிரி ஆகியவர்கள் குறிப்பிடத்தகுந்தவர்களாவார். இவற்றில் தனியிடம் பெறுபவர் இராமாயணச் சம்பு இயற்றிய புனம் நம்பூதிரியாவார். 16 ஆம் நூற்றாண்டில் இராமாசுவமேதம், கிருட்டிண லீலா முதலிய நூல்கள் இயற்றப்பட்டிருந்தும் அதன் ஆசிரியர்களின் பெயர்கள் தெரியவில்லை. 1919 ஆம் ஆண்டு "சிந்தாவிசுயாய சீத" என்னும் கவிதைக் காப்பியத்தை ஆசான் இயற்றியுள்ளார்.[126]

எனவே, இலக்கிய இன விழிப்புணர்ச்சி பழங்காலத்தில் தெலுங்கு, கன்னட, மலையாள மக்களிடையே இல்லாமல் இருந்திருப்பது உணரக் கிடக்கின்றது. ஆனால், தமிழினுடைய நிலை இப்படிப்பட்டது அன்று. திராவிடர்க்கு- தமிழர்க்கு- உரியதான தனித்தன்மை வாய்ந்த அகம் புறம் முதலிய பல்வேறு இலக்கியங்களை இலக்கியம் சார்ந்த இனவிழிப்புணர்ச்சியோடு காத்து வைத்த அருமை தமிழுக்கு உண்டு. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை எனக் கூறப்படுகின்ற சங்க இலக்கியம் எதுவும் இராமாயண மகாபாரதக் கதைகளைப் பாடு பொருளாக எடுத்துக்கொள்ளவில்லை. இராமாயண, மகாபாரதக் கதையின் கீற்றுக்கள் மிகச் சில இடங்களில் தமிழில் வேறு பொருளை விளக்குகின்ற பொழுது உதவுகின்ற கதைப் பகுதியாக வந்துள்ளமை உணரலாம். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் சங்க இலக்கியங்கள் தமிழ்நாட்டில் தோன்றிய காலத்திலும் அதற்குச் சற்று

125. முகளி. இரம். ஸ்ரீ., கன்னட இலக்கிய வரலாறு, பக். 34 - 204
126. பரமேச்வரன், பி.கே.,மலையாள இலக்கிய வரலாறு, பக. 19 - 227

முன்னும் இராமாயண மகாபாரதக் கதைகள் ஆரிய மக்களிடையே தோன்றிவிட்டன ஆனாலும் இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் வாழநத மக்களைக் கவர்ந்து அவர்களின இலக்கிய வரலாற்றில் முக்கிய இடம் பிடித்தது போலத் தமிழ் வரலாற்றில் கி.பி 300 முதல் கி.பி 200வரை தோன்றிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் பாடுபொருளாக அமையும் நிலையைப் பெறவில்லை. அககாலததில தமிழ இலககிய வரலாறறில குறிப்பிடத்தகக இடத்தைப் பெறவும் இல்லை. தமிழ மக்களிடையே இலககியம் சாாநத இன விழிப்புணர்ச்சி இருந்தமையாலே இத்தகைய இலக்கியப் போக்குக் காணப்படுகிறதெனறு கூறவியலும்.

## பாரதிதாசன் பாடல்களில் இராமாயணமும் மகாபாரதமும் அரைகுறை இராமாயணம் எனக் கூறுதல்

காலே அரைக்கால் கம்ப இராமாயணம், சிதம்பரநாதர் திருவருளாலே அரையே அரைக்கால் அழிந்தது போக மேலும் மொழிமாற்று வேலைப்பாட்டுடன் செய்து அச்சிடப்பட்டது, காலே அரைக்கால் கம்ப இராமாயணமாகும்.[127] கம்பனார் பதினோராயிரம் பாட்டில் முககால பாகம் அழிந்தது போக மீதியுள்ளதைக் கம்பன் செய்யுள் எனச் செய்யும் உயர்விலாச செயல் செய்வோர்களை ("கொம்பர்களை") யாரெனக் கேட்பதற்குப் புலவர் கூட்டந்தனில ஆளில்லை[128] என்று பாரதிதாசன் கூறியுளளார். இராமாயணம் பல பகுதிகள் நீங்கியது எனவும் அவ்வாறு நீங்கியதைப் பற்றிக் கவலையுறாமல் புலவர்க் கூட்டம் இருக்கிறது எனவும் கூறியுள்ளமை கருதத்தக்கது.

## இராமன் மறைந்திருந்து வாலியைக் கொன்றமை

"சைவம், வைணவம் முதலிய சமய மெய்ம்மைகளிலெல்லாம் பொய்ம்மை கலந்தன. தம்பிரான்மார்கள் (சமயவாதிகள்) தம்பிரான்மார்களின் (சமயவாதிகளின்) அடியை நம்பினர். . நாட்டைப்பற்றி எண்ணவில்லை. வாலியை இராமன் மறைந்திருந்து கொன்றதைச சொல்லிக் கொண்டிருந்தால்,படிப்படியாக பாரத நாட்டின் அடிப்படை வீரம் சாகும் எனபதை உணர்க"[129] என்னும்போது பாரத நாட்டில் உள்ள சைவம், வைணவம் போன்ற சமயக கொள்கைகளினூடே சமயத் தம்பிரான்கள் (அயலவர்) அவர்களுடைய சமயத்தை நுழைத்தனர். வாலியை இராமன் மறைந்திருந்து கொன்றது முதலிய சமயக் கதைகளைச

127. திருவாசகன், ஆ., பாரதிதாசன கவிதைகள, ப. 705
128. மேலது, ப. 1749
129. மேலது.

சொல்லிக் கொண்டிருந்தால், சிறிது சிறிதாகப் பாரத நாட்டவர்களுககே உரியதான வீரம அழியுமென்பதை உணர்ந்து மக்கள் செயல்பட வேண்டும் அதாவது தமக்குரியதான வீரவாழ்க்கை அழிந்து அயலவரின் சமயக் கொள்கைகள் இடம்பெறும் தீமையை அறிவுறுத்துகிறார் எனலாம்.

வாலிக்குத் தீங்கு செய்த இராமன் அவனுக்கு மோட்சம் கிடைக்குமென அருள் செய்தானாம் எனக் கூறி இராமன் வாலிக்கு மோட்சம் அளிக்கும் தகுதியுற்றவன என்பது தோன்றப் பாடியுள்ளார்.

"வாலியின்பால் வஞ்சகததைச் செய்த ராமன்
வாலிக்கு மோட்சத்தை அருள்செய் தானாம்".[130]

## பொய்ம்மானை இராமன் தேடுதல்

"பொய்ம்மானை மெய்யென்ற இராமன்"[131] தன் மனைவியான சீதையின கற்பு வாழ்க்கையை ஐயப்படுபவன் என்று எடுத்துக்காட்டியுள்ளார்.[132]

## இராவணன், துரியோதனன் ஆகியோரை உயர்த்திப் பேசுதலும் விபீடணனைத் தாழ்த்திப் பேசுதலும்

"தென் திசையைப் பார்த்தால், என் தோளெல்லாம் பூரிக்கினறது. அனறு இலங்கையினையாண்ட மறத்தமிழன் பத்துத் திசைகளிலும் தன் புகழ் பரப்பியவன். குன்று போன்ற பெருந்தோள்களையும் கொடை கொடுக்கும் கையினையும் உடைய அவன் குள்ளநரிச் செயல் செய்யும் கூட்டத்தின் எமனாவான். அத்தமிழர் பெருமான் என தமிழர் மூதாதை. அவன் பெருமை இவ்வுலகறியும்.[133] இவனையும் துரியனையும எவ்வெவ்வாறு இழிவாகப் பேசினும் இன்று அவர்களின் உயர்வைப் பாடுவேன். அவர்களைக கொல்ல முயலும் அங்கதன் தன்னைக் கொல்ல நான் முன்னிருப்பேன். பாரத குலம வேண்டும் மறக்குல மாட்சியையும் தஞ்சமென்று பிறன்கையில் தாழாதிருககும் தன்மையினையும் கொண்டவர் துரியனனும் இராவணனும், ஆனால், வீபீடணனோ தன் குலம் தாக்குபவர்களை இவ்வுலகம் சிரிக்கச் சென்றடைந்தவன்[134] என்றும் விபீடணனை "வஞ்சகவிபூஷணன்"[135] என்றும் கூறியுள்ளார்.

130 திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப 1480
131. மேலது, ப 1839
132 மேலது, ப. 127
133. மேலது, ப. 213
134. மேலது, ப. 217
135. மேலது, ப. 214

## இராமன் அருளும் சஞ்சீவி மலையைத் தூக்குதலும் உண்மை அல்ல எனக் கூறுதல்

"இராமாயணக் கதையைக் கேட்கும் அன்பர்களுக்கு அருளுண்டு,[136] சொர்க்கமுண்டு எனக் கூறும் பாகவதன் கதையில் மலையைத் தூக்கி வா என வரும பகுதியைப் பற்றி எடுத்துரைத்துக் கொண்டிருப்பதை மூலிகையின் சகதியால் கேட்டறிந்த தலைவன் குப்பன் நடுங்குகிறான் அதனையறிந்த தலைவி இராமன அருளெங்கே? சஞசீவி மாமலையைத் தூக்கும் வல்லமையெங்கே? இவற்றில் சிறிது உண்மை இருநதால கொத்தவரைப் பிஞ்சுகள் போல் அடிமையாக வாழும் நாம் ஆண்மையின்றி வாழ்வதை உணர்ந்து விழிக்கவில்லை[137] எனப் பாரதிதாசன் கூறியுள்ளார்.

## ஒப்பீடு

சங்க காலத்தில் பரவி வரும் இராமாயண மகாபாரதக் கதைகள் இலக்கிய நிலையில் முதன்மையிடத்தைப் பெறாதவாறு, தமிழ்ப்புலவர்கள் தமிழ் இனவிழிப்புணர்ச்சியோடு முயற்சி எடுத்துள்ளமை உணரமுடிகின்றது.

பாரதிதாசனும் இராமாயண மகாபாரதக் கதைகளைப் பாடிப்போற்றி இலக்கியம செய்யவில்லை என்பதை உணரலாம். இந்நிலையில் சங்க காலத்தில் நிலவிய இனவிழிப்புணர்ச்சியோடு ஒத்த ஓர்நிலை பாரதிதாசன் காலத்திலும் தோன்றிவிட்டதை அவர் பாடல்களால் உணரலாம். பாரதிதாசன் பாடல்களில் இராமாயணத்தில் வரும இராமன் செயல்பாடுகளும் இராமாயண மாந்தர்களின் சில செயல்பாடுகளும் குறறம உடையனவாகக் கூறப்பட்டுள்ளமையும் இராமாயணத்தில் இழித்துக் கூறப்பட்ட இராவணன் போற்றிப் பேசப்பட்டுள்ள நிலையும் அவன் தமிழ் மூதாதை என்று பேசப்பட்டுள்ளமையும் கருதத்தக்கவை.

பாரதிதாசனுக்கு முற்பட்ட காலத்திலும் அவர் காலத்திலும் இராமனைத தன்னேரில்லாத் தலைவனாகக் கொள்ளுதலும் அவனைத் திருமாலின் அவதாரமாகக கூறியமையும் நூல்களில் உணரலாம். இந்நிலையில் ஆரியப் பண்பாட்டில் முகிழ்த்த இராமன் கதையில் தமிழ்மக்கள் ஈடுபாடு கொள்ளலாகாது என்னும் இனவிழிப்புணர்ச்சியோடு பாரதிதாசன் செயல்படமுனைந்தமை அறியலாம். எனவே அவர் இராமன் மேலும் இராமாயணம் போற்றும் பாத்திரங்கள் சிலவற்றின் மேலும் சில குறைகளைத் தமிழ் இலக்கிய, இலக்கணச

136. திருவாசகன, ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப 119
137. மேலது, ப. 117

சான்று கொண்டு கூறியமை புலப்படுகிறது. அவ்வாறே வியாசர் மகாபாரதக் கதையையொட்டித தூற்றப்பட்ட துரியோதனனையும் பாரதிதாசன் போற்றிக் கூறிப் பரவி வந்த மகாபாரதக்கதைககு ஒரு மாற்று நிலையைக் கடைப்பிடித்தமை உணரலாம்.

## கந்தருவமும் களவும்

ஆரியர்கள் சார்பான இலக்கியங்களிலே கந்தருவம் என்னும் காதற் சேர்க்கை பற்றிப் பேசப்பட்டுள்ளது. மனமொத்த காதலர்களின் சேர்க்கையே இக்கந்தருவம் என்பதாகும் தமிழ் இலக்கியத்தில் அகப்பொருளில் காணப்படும் களவு என்பதும் இவ்வாறு உள்ளமொத்த காதலர்களின் சேர்க்கை ஆகும். ஆனால் இக்கந்தருவமும் களவும் வேறுபாடு கொண்டவை. கந்தருவம் என்பது இவ்வாறு மனம் ஒத்துச் சேர்ந்த காதலர்கள் திருமணம் புரிந்துகொள்ள வேண்டுமென்ற நெறிமுறையைக் கட்டாயமானதாகக் கொண்டதன்று. 'கந்தர்வ மணம் ஒரு வகையில் களவுக் காதலே என்றாலும், அது கற்பு வாழ்க்கையாக (திருமண வாழ்வாக) மலர வேண்டும் என்ற நியதியும் அதன் பொருட்டு மக்கள் முயலுதலும் அங்கில்லை என்று சுப அண்ணாமலை கூறியுள்ளார்.[138] வேலுவும் இதனை விளக்கிக் காட்டியுள்ளார[139]

## திருமணம் நோக்கிய களவு

களவு என்பது உள்ளமொத்துச் சேர்ந்த காதலர்கள திருமணம் புரிநது கொள்வது பற்றி அம்முதல் சந்திப்பிலேயே கூறுவதைக் கொண்டதாகும். தமிழ் அகப்பொருளின தொடக்கத் துறையான இயற்கைப் புணர்ச்சி என்பது எட்டுப் பாகுபாடுகளைக் கொண்டுள்ளது அப்பாகுபாடுகளில் ஒன்றே தீராத்தேற்றம் என்பதாகும். இத்தீராத்தேற்றம் என்பது இயற்கைப் புணர்ச்சியில் தலைவியைச் சந்தித்த தலைவன், தலைவியை உறுதியாக மணப்பதாகக் கூறிச் செல்லும் பகுதியாகும்.

"மலர்ந்த புன்னைப் பூக்கள் உதிர்ந்து கிடந்த வெண்மணலில் வேலன் புனைந்த வெறியாடும் இடங்களில் எல்லாம் செந்நெல் வானில் உள்ள பொறிபோல் சிதறி நிற்கும். எங்கள் ஊரிலுள்ள அகன்ற நீர்த்துறையில் நேரான சந்தினையுடைய முன் கையைப் பிடித்துச் சூரரமகளிர் (தெய்வமாக வழிபடும் மகளிர்) முன் வஞ்சினம் செய்தனன்"[140] எனத் தோழி தலைவனிடம் கூறுவதாக அமைந்துள்ளது.

138 அண்ணாமலை, டாக்டர், சுப., உருவும் உணாவும, ப 14
139. வேலு, இரா., திருக்குறள் கௌடலீயம ஒப்பாய்வு, ப 18
140 குறு. 53

இயற்கைப்புணர்ச்சியின்பின் தலைவியை மணக்கும் எண்ணம் கொண்டவன் என்பதைத் தெளிவு செய்யும்பொருட்டு உறுதி செய்தமை நன்கு விளங்குகிறது.

களவில் தொடங்கும் காதல் வாழ்க்கை காதலோடு மட்டுமின்றித் திருமணம் செய்யும் கற்பு வாழ்க்கையை நோக்கியதாக அமைந்துள்ளது. மேலும் தமிழ் அகப்பொருள் சார்ந்த களவு நீட்சியில் வெறியாட்டு. அலர் முதலிய நிகழ்ச்சிகள் தோன்றும்பொழுது உள்ளமொத்த காதலர்கள் திருமணம் புரிந்து கொள்வதற்கு முனைகின்ற போக்குக் காணப்படும். இதனை அறத்தொடு நிற்றல், வரைவுகடாதல். உடன்போக்கு, வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதல் முதலிய அகப்பொருள் களவுத் துறைகளும் வற்புறுத்துவதை உணரலாம். இவ்வாறு களவு என்பது திருமணத்தை நோக்கி நிற்பதை இலக்கியத்தில் பாடுபொருளாக வைத்துப் பேசுவது தமிழிலக்கியத்தின் தனித்தன்மையைக் காட்டுவதாகும். ஆரிய இலக்கியங்களில் காதல் சார்ந்த புணர்ச்சியான கந்தருவத்தில் இத்தகைய போக்குகள் காணப்படுவதில்லை. இந்நிலையில் கபிலர் களவு மேற்கொண்ட காதலர் திருமணம் புரிந்து கொள்வதற்காகத் தலைவி தோழியின் வழித் தன் களவுக் காதலைப் பெற்றோருக்கு எடுத்துக்கூறும் அறத்தொடு நிற்றல் துறையில் குறிஞ்சிப் பாட்டைப் பாடியுள்ளார். இக்குறிஞ்சிப்பாட்டின் அடிக்குறிப்பில்,

> "ஆரிய அரசன் பிரகத்தனுக்குத்
> தமிழ் அறிவுறுத்துவான் கபிலர்
> குறிஞ்சிப் பாட்டுப் பாடியது"

என்று காணப்படுகிறது. எனவே, குறிஞ்சிப் பாட்டின் மூலம் தமிழ் இலக்கியம் சார்ந்த இன உணர்ச்சி வெளிபடுத்தப்பட்டுள்ளது என்பதை உணரலாம். ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் இலக்கியத்தின் தனித்தன்மை தெரிய வாய்ப்பில்லை. எனவே வடமொழி இலக்கியங்களில் காணப்படும் இலக்கியப் பாடுபொருளோடு மாறுபட்டுத் தமிழ் இலக்கியப் பாடுபொருள் அமைந்துள்ளதென்பதைக் கபிலர் புலப்படுத்தியுள்ளார் எனலாம். இவ்வாறு கபிலர் வேருன்றிய இலக்கியம் சார்ந்த இனவிழிப்புணர்ச்சி சங்க காலத்திற்குப் பின் சேர சோழ பாண்டியர்கள் ஆட்சி வீழ்ச்சியுற்ற பிறகு தமிழில் நின்று நிலைக்கவில்லை என்பதை உணரலாம்.

தமிழ்ச் சங்கங்களின் வீழ்ச்சியைப் பற்றியும் தமிழ்ப் பாண்டி மன்னர் ஆட்சியின் வீழ்ச்சி பற்றியும் பேசும் உரையொடு பொருந்திய இறையனார் களவியல் இனவிழிப்புணர்ச்சி இல்லாத இலக்கியக் கோட்பாட்டை இலக்கணமாகத் தருகின்றது. அது கந்தருவத்தினிறும

மாறி அமைவது களவு என்று வேறுபடுத்திய கபிலருடைய இனவிழிப்புணர்ச்சிக் கோட்பாட்டிற்கு மாறாகத் தமிழ்க் களவும் கந்தருவமும் ஒன்றே என்று மட்டும் கூறி, ஆரிய இலக்கியத்தினின்றும் மாறுபட்ட தமிழிலக்கியத் தனித்தன்மையை எடுத்துக் காட்டாத நிலையில்

"அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்
கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்" [141]

என்று நூற்பா செய்துள்ளது.

## பாரதிதாசன் பாடல்களில் களவும் கந்தருவமும்

பாரதிதாசன் பாடல்களில் நேரடியாகக் கந்தருவம் பற்றிக் கூறப்படவில்லையாயினும் திருமணத்தை வலியுறுத்தும் காதலையே-களவினையே-பாடியுள்ளார் என்பதனை உணரலாம்.[142]

## ஒப்பீடு

சங்க இலக்கியப் பாடல்களையொத்த காதல் பாடல்களைச் சங்க இலக்கியப் பொருளில் மாறுபடாமல் தற்காலத்திற்கேற்ற எளிய தமிழில் பாடியுள்ளார். இந்நிலையில் சங்க இலக்கியங்களில் காணப்படும் இனவிழிப்புணர்ச்சி பாரதிதாசன் பாடல்களிலும் அவ்வாறே காணப்படுகிறதெனக் கொள்ளுவதே பொருந்துவதாகும்.

## மெய்யுறு புணர்ச்சியும் உள்ளப் புணர்ச்சியும்

சங்க இலக்கிய அகப்பொருள் உள்ளப்புணர்ச்சி என்பதைத் தனக்குரிய கோட்பாடாகக் கொண்டதாகும்.[143] இவ்வகப் பொருள் கூறும் காதல் மெய்ப்புணர்ச்சியை (உடலுறவு) அடிப்படையாகக் கொண்டதன்று என்பதை உணரலாம். தொல்காப்பியர் மெய்தொட்டுப் பயிறல் என்று கூறுவது தலைவன் தலைவியைத் தீண்டுவதைக் குறிப்பதாகும். திருமணத்திற்கு முன் களவுக் காலத்தில் தலைவன் தலைவியரிடையே உடலுறவு இருந்ததற்கான சான்று எதுவும் சங்க இலக்கியங்களில் இல்லை. அறத்தொடு நிற்றல் துறையை விளக்கும் போதோ வரைவுகடாதல் துறையை விளக்கும்போதோ தலைவி

141. இறையனார் களவியல் உரை, 1
142. இக்கருத்து இவ்வாய்வேட்டில் முன்னரே விளக்கிக் காட்டப்பட்டுள்ளது. இவ்வாய்வேடு பக்.73-83 காண்க
143. இவ்வாய்வேடு பக்.157-158 காண்க

கருவுற்றிருக்கிறாள் என்றோ. குழந்தை ஈன்றுள்ளாள் என்றோ கூறித் திருமணத்திறகான முயற்சி எடுக்கப்படவில்லையென்பது கருதத்தக்கதாகும். இந்நிலையில் அகப்பொருள இலக்கியங்கள் உள்ளப் புணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டதென்பதை உணரலாம. இவை ஆரிய இலக்கியத்தினின்றும் தனித்தன்மை கொண்ட போக்குடையனவாகும். ஆரிய இன மக்களுக்குரிய இலக்கியங்களில், திருமணம் புரிந்து கொள்வதற்கு முன்னரே காதலில் ஈ:டுபடும் காலத்திலேயே உடலுறவு கொள்ளுதலும் அதன் விளைவாகக குழந்தையைப் பெற்றெடுப்பதும் காணப்படுகின்றன.

மகாபாரத்தில் குந்தி, கந்தருவ முறையில் சூரிய பகவானை அணைந்ததின் பயனாய்க் கருவுற்றுத் திருமணத்திற்கு முன்னரேயே ஆண் மகவொன்றை ஈன்று, பிறருக்குத் தெரியாது மறைக்கப் பிறந்த குழந்தையை ஒரு பெட்டியில் வைத்து ஆற்றில் மிதக்கவிட்டாள்[144]

ஈண்டுச் சூரிய பகவானோடு குந்திக்கு நிகழ்ந்த காதற்புணர்ச்சி- கந்தருவம் - உள்ளப்புணர்ச்சி என்ற நிலையில் அமையாமல் மெய்யுறு புணர்ச்சியாகவே முடிந்துள்ளமை காணலாம். ஆனால் தமிழ்க் களவு இத்தகைய மெய்யுறு புணர்ச்சியைக் கொண்டதன்று தொல்காப்பியர்,

"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப"[145]

என்று கூறுவதோடு, இக்களவின் படிநிலைக் கூறுகளை,

"வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கஞ் சாக்கா(டு) என்றிச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப"[146]

என்றும் விளக்குவார். இவற்றுள் உடலுறவு என்ற நிலையில் விளக்கப்படும் மெயயுறு புணர்ச்சி இல்லையென்பதை உணரலாம். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்கள் விளக்கும களவும் உடலுறவு என்று மெய்யுறு புணர்ச்சியைக் கொண்டதன்று

144. நடராசன், அ.லெ.வியாசா அருளிய மகாபாரதம. பக். 86 - 88
145. தொல். பொருள். இளம். களவு. 2 1 - 3
146. மேலது, 9

தமிழ் அகப்பொருளால் பேணி உரைக்கப்பட்ட களவெனும் உள்ளப் புணர்ச்சியை, இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் மெய்யுறு புணர்ச்சியே களவுப் புணர்ச்சி என்று ஆரிய இலக்கியப் போக்கில் தமிழின் தனித்தன்மை பேணும் இலக்கிய விழிப்புணர்ச்சி இல்லாமல் கூறியுள்ளார்.[147]

இந்நிலையில் ஆரிய இன இலக்கியப் போக்கில் மெய்யுறுபுணர்ச்சி(உடலுறவு) என்பது காதலின் அடிப்படையாக அமைவதை உணரலாம்.

## பாரதிதாசன் நிலையில் மெய்யுறு புணர்ச்சியும் உள்ளப் புணர்ச்சியும்

பாரதிதாசன் பாடியுள்ள காதற் பாடல்களும் மற்ற காதல் பகுதிகளும் உள்ளப் புணர்ச்சி என்பதையே தமக்குரிய கோட்பாடாகக் கொண்டுள்ளன.[148] இவை மெய்ப்புணர்ச்சியைப் (உடலுறவு) பாடும் நோக்கம் கொண்டவை அல்ல. காதலர்களின் திருமணத்திற்கு முந்தைய காதல் வாழ்க்கையில் தலைவன் தலைவியரிடையே உடலுறவு இருந்ததாகப் பாரதிதாசன் எவ்விடத்திலும் புனையவில்லை.

சங்க காலத்திற்குப் பிறகு அயலவர்களுடைய பாதிப்புப் பின்னைய நூற்றாண்டுகளில் இருந்து வந்துள்ளமை வரலாறு காட்டும் உண்மையாகும். பாரதிதாசன் காலத்திலும் ஆங்கிலேயர், பிரஞ்சுக்காரர் முதலிய அயலினத்தவர்கள் நம்மை ஆட்சி செய்து வந்தனர். இந்நிலையில் தமிழர்களின் பழைய காதல் பண்பாட்டுக்கு ஊறுபாடு நிகழ்ந்த சூழலில் மீட்டுருவாக்கம் செய்யும் நோக்கிலேயே சங்க இலக்கியக் காதல் பாடல் பொருள்களை அப்படியே தற்காலத் தமிழுக்குப் பாரதிதாசன் மாற்றியுள்ளார். மேலும் தான் பாடியுள்ள காதல் பாடல்களிலும் பழைய தமிழ்ப்பண்பாட்டோடு பொருந்திய உள்ளப் புணர்ச்சி நிலையை அடிப்படையாகக் கொண்டு பாடல் புனைந்துள்ளார். ஈண்டு விளக்கிய கோட்பாடு சார்ந்த இனவிழிப்புணர்ச்சி பாரதிதாசன் பாடல்களில் உள்ளதென்பது உணரலாம்.

147. நக்கீரர் (உரை), இறையனார் அகப்பொருள், 1
148. இவ்வாய்வேடு பக்.72-73 காண்க.

## ஒப்பீடு

சங்கப் பாடல்களிலும் காதலுக்கு அடிப்படையாகப் புனைவு செய்யப்பட்டது உள்ளப் புணர்ச்சியே என்பது உணரக் கிடக்கின்றது. அவ்வாறே இருதிறப் பாடல்களிலும் திருமணததிற்கு முந்திய காதலைப் புனையும் இடங்களில் மெய்யுறு புணர்ச்சி (உடலுறவு) அடிப்படையாக அமையவில்லை என்பதை உணரலாம்.

## அரசியல் சார்ந்த இனவிழிப்புணர்ச்சி

ஒரு குறிப்பிட்ட இனமக்கள், வேற்றின மக்களால் ஆள நேரிட்டால் பண்பாடு சீர்குலைவு நிகழ நிறைய வாய்ப்புண்டு. இந்நிலையில் அயலவர் நுழைவால் அரசியல் சார்ந்த இனவிழிப்புணர்ச்சி தோன்றுவதை உணரலாம்.

## சங்க இலக்கியங்களில் அரசியல் சார்ந்த இனவிழிப்புணர்ச்சி

ஆரியர், வடவர், வடுகக் கருநாடகர்,மோரியர் ஆகிய அயலவர்கள தமிழ மன்னர்களை எதிர்த்த வேலையில், தமிழ் மன்னர்கள் இன உணர்வோடு அவாகளை எதிர்த்தமையும் இனவிழிப்புணர்ச்சியோடு இதனைப் புலவர்கள் பாடியுள்ளமையும் உணரலாம்.

### ஆரியர்

வேற்றின ஆரியர்கள் தமிழகத்திற்குள் கலைஞர்களாகவும் விளையாட்டு வீரர்களாகவும் பகைத்துப் போரிடும் நாட்டையாளும் அரசர்களாகவும் நுழைநதமை சங்க இலக்கியப் பாடல்களால் புலனாகின்றது. இவர்களுள் ஆரியக் கலைஞர்களின் கலையைத தமிழர்கள் சுவைத்து மகிழ்ந்தனர்.[149] ஆனால், ஆரிய விளையாட்டு வீரரும் தமிழ் மன்னரை எதிர்த்து வந்த ஆரிய மன்னர்களும் தமிழர்களால் எதிர்க்கப்பட்டு வெற்றி கொள்ளப்பட்ட செய்திகளும் காணப்படுகின்றன. பின்வரும் செய்திகள் கருதத்தக்கன.

1. ஆரியப் பொருநன் பாணனை எதிர்த்துப் போர் செய்தல்.
2.. ஆரிய மன்னர்களை எதிர்த்துத் தமிழர் வென்றமை.

அ) மலையன் மூள்ளூரில் ஆரியரை வெல்லல்.

149. குறு. 7

ஆ) சோழர் வல்லத்துப் புறங்காட்டில் ஆரியரை வெல்லல்.

இ) சேரன் செங்குட்டுவன் ஆரிய மன்னர்களை வெல்லுதல்.

ஈ) சேரன் ஆரியரை வெல்லல்.

"ஆரியப் படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன்" என்ற புறநானூற்றுத் தொடர் வடவாரியர் படைகளை எதிர்த்து நின்று போர் செய்து வென்ற நெடுஞ்செழியனின் பேராண்மையை விளக்கி நிற்பதாகக் கொள்ளலாம்.

## 1. ஆரியப் பொருநன் பாணனை எதிர்த்துப் போர் செய்தல்

மற்போர் செய்யும் பாணனது மார்பின் வலிமையால் அவனை எதிர்த்து மற்போர் செய்த ஆரியப் பொருநன் துன்புற்று ஆற்றல் நிறைந்த முழவுத் தோளையுடைய கையினுள் அகப்பட்டு உயிர்விட்டனன்.

"நாணினென் பெரும யானே **பாணன்**
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட **ஆரியப் பொருநன்**
நிறைத்திரண் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்"[150]

## 2. ஆரிய மன்னர்களை எதிர்த்துத் தமிழர் வென்றமை

முள்ளூர், வல்லம், கங்கையாற்றங்கரை ஆகிய இடங்களில் ஆரிய மன்னர்களைத் தமிழ்மன்னர்கள் வெற்றிகொண்டு தம் இனப்பெருமையை நிலைநாட்டினர்.

### அ. மலையன் முள்ளூரில் ஆரியரை வெல்லல்

ஒள்ளிய வாட்படையையும் ஒப்பற்ற வேற்படையையும் கொண்ட மலையன் முள்ளூர்ப் போரில் ஆரியரைத் தோற்கச் செய்தனன் என்பது

"**ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்**
பலருடன் கழித்த ஒள்வாள் **மலையனது**
ஒருவேற்(கு) ஓடி யாங்கு"[151]

என்று கூறப்பட்டுள்ளது.

150. அகம். 386 : 3 - 8
151. நற். 170 : 6 - 9

## ஆ. சோழர் வல்லத்துப் புறங்காட்டில் ஆரியரை வெல்லல்

வெற்றி வேலையும் மழைபோல் அம்புகளைப் பொழியும் விற்படையையும் அரணாக உள்ள வல்லம் என்ற ஊரின் புறத்தேயுள்ள காட்டின் வந்தடைந்த ஆரியர் படையைச் சோழமன்னன் உடைத்தனன் என்பது

"------------ வென்வேல்

மாரி யம்பின் மழைத்தோற் சோழர்

வில்லீண்டு குறும்பின் **வல்லத்துப் புறமிளை**

**ஆரியர் படையின் உடைக**"[152]

என்று கூறப்பட்டுள்ளது.

## இ சேரன் செங்குட்டுவன் ஆரிய மன்னர்களை வெல்லுதல்

வடவரை வென்று வானளவு புகழுயர்ந்த சேர அரசன் நெடுஞ்சேரலாதனுக்கும் சோழன் மணக்கிள்ளிக்கும் பிறந்தவனான சேரன் செங்குட்டுவன் கடவுள் பத்தினிக்குக் கற்கோயில் அமைக்கக் கல்லெடுத்துக் கங்கையாற்றில் நீராடும்பொழுது அவனை எதிர்த்த ஆரிய மன்னர்களை வென்றான். இதனை,

"வடவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்

**குடவர் கோமா னெடுஞ்சேர லாதற்குச்**

சோழன் மணக் கிள்ளி யீன்றமகன்

கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக்

கானவில் கானங் கணையிற் போகி

**ஆரிய வண்ணலை** வீட்டிப் பேரிசை

இன்ப லருவிக் கங்கை மண்ணி"[153]

என்னும் பாடலடிகளின் மூலம் உணரலாம்.

152. அகம். 336 : 19 - 22
153. பதிற். 5 : 1 - 6

## ஈ. சேரன் ஆரியரை வெல்லல்

ஆரியர் அலறும்படி தாக்கித் தனது புகழ் தெரியும்படி முதுவடமலைக்கண் வில்லைப் பொறித்து மிகுசினத்துடன் அம்மன்னர்களைச் சிறைசெய்த வஞ்சியான் என்பது

"**ஆரியர் அலறத் தாக்கிப்** பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
**வஞ்சி**"[154]

என்னும் பாடலடிகளில் கூறப்பட்டுள்ளது.

### வடவர்

கருநாடக ஆந்திர எல்லைக்கப்பால் வடக்கே ஆரியப் பண்பாட்டைத் தழுவிய ஆட்சி புரிந்து வந்த மன்னர்களே வடபுல மன்னர்கள் ஆவர். இவர்கள் பல்லோராக - நூற்றுக்கும் மேலானோராக அமைந்த நிலையில் வடபுல மன்னர்கள் எனப் பொதுவாகக் குறிக்கப்பட்டுள்ளனர். பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, இருங்கோவேள், சோழன் நலங்கிள்ளி ஆகிய மன்னர்கள் வடபுல மன்னர்களோடு பகைத்து நின்றமையும் போரிட்டமையும் சங்கப் புலவர்களால் பாடப்பட்டுள்ளன.

### பாண்டியன் கூடாகாரத்துத் துஞ்சிய மாறன் வடவருடன் போர்

அரசே தெய்வமிருக்கும் மலையினுள் இருக்கும் துயிலை வெறுத்திருக்கும் புலி (வயமான்) ஊனை விரும்பி வேட்டெழுந்தது போல வடபுல மன்னர்கள் வாட அவர்களைக் கொல்வதற்காகச் செய்யக் கூடாத போரைச் செய்யும் இயல்தேரினை உடைய வழுதி எனப் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியை மருதனிளநாகனார் பாடியுள்ளார். இதனை விளக்கும் பாடலடிகள் பின்வருமாறு:

"அணங்குடை நெடுங்கோட் டளையக முனைஇ
முணங்குநிமிர் வயமான் முழுவலி யொருத்தல்
ஊனசை யுள்ளந் துரப்ப விரைகுறித்துத்
தான்வேண்டு மருங்கின் வேட்டெழுந் தாங்கு

154. அகம். 386 : 16 - 19

**வடபுல மன்னர்** வாட வடல்குறித்
தின்னா வெம்போ ரியறேர் **வழுதி**"[155]

## இருங்கோவேள் வடவரை அழித்தல்

இருங்கோவேள் வடவர்களை அழிக்கும் வீரம் வாய்ந்தவன் என்பதனை,

"**வடவர் வாட**.......
------சீறி
**இருங்கோவேள்**"[156]

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

## சோழன் நலங்கிள்ளி வடவருடன் போர் செய்தல்

உன்னுடைய (சோழன் நலங்கிள்ளியினுடைய) வீரர்கள் பகை நாட்டிலுள்ள காட்டின் இடை நெடுந்தூரமுள்ளதென நினைத்து அஞ்சாமல், போர் செய்பவர்களாதலால் குணகடல் கரையையுடைய நீ குணகடல் (கீழ்க்கடல்) பின்னதாகக் குடகடல் (மேல்கடல்) அடைந்து வலமாக முறையே வருவாயென நெஞ்சம் நடுங்கி வடநாட்டிலுள்ள அரசர்கள துயிலாத கண்ணையுடையவராயிருக்கின்றனர் எனச் சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடியுள்ளார். இதனையுணர்த்தும் பாடலடிகள் பின்வருமாறு:

"பேரெனிற் புகலும் புனைகழன் மறவர்
காடிடைக் கிடந்த நாடுநனி சேய
செல்வே மல்லே மென்னார் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலு முண்டென் றலமந்து
**நெஞ்சுநடுங் கவலம் பாயத்**
**துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே**"[157]

## வடுகக் கருநாடகர்

155. புறம். 52 · 1 - 6
156. பட். 276 - 282
157. புறம். 31 : 9 - 17

மறைமலையடிகள் தமிழ்நாட்டின் வடவெல்லையான வேங்கட நாட்டிற்கு அப்பாலிருந்து வந்தவர்களை எல்லாம் தமிழர் வடுகக் கருநாடகர் என வழங்கினர் என்றும் கல்லாடம், பெரியபுராணம், நம்பியார் திருவிளையாடல் முதலியவற்றில் பாண்டிய நாட்டில் வந்து பாண்டியன் அரசைக் கைப்பற்றிக் கொண்டவராகச் சொல்லப்படும் வடுகக் கருநாடகர் என்போர் முதன்முதல் வடக்கிலிருந்து தமிழ்நாட்டில் புகுந்த பல்லவ அரசரே ஆதல் வேண்டும் என்றும் இப்பல்லவ அரசருக்கு உறவினரான ஆந்திர வடுகர் கி.மு 73 ஆம் ஆண்டிலிருந்து கி.பி. 218 ஆம் ஆண்டு வரையில் தக்கண நாட்டில் சிறக்க அரசு புரிந்தனர் என்றும் கூறியுள்ளார். குமரிநாடு கடல்கொண்ட காலத்துத் தமிழ்மக்களின் பல்பெரும் பிரிவினரான பிரகுவியர், ஆந்திரர், கோடர், கோண்டர், நாகர், துளுவர், கருநடர், மலையாளர், வேளாளர் முதலாயினோர் வடக்கும் வடமேற்குமுள்ள பலவேறு நாடுகட்கும் பிரிந்து போய்க் குடியேறுவாராயினர். இவர்களுள் துளுவர், கருநடர் எருமை நாட்டில் (மைசூரில்) போய்ப் பரவினர் என்றும் கூறியுள்ளார்.[158]

அ.மு. பரமசிவானந்தம் களப்பிரரும் பல்லவரும் வடக்கிலிருந்து தமிழகத்தில் புகுந்தோர் என்று பொதுபடக் கூறியுள்ளார்.[159]

காளத்தி முதலிய மலைப்பகுதிகளில் வாழ்ந்தவர் களவர் என்பவராவார். இவர்கள் கன்னடத்தில் களபரு என்றும் வடமொழியில் களப்ரா என்றும் தமிழில் களப்பிரர் என்றும் வழங்கப்படும் கூட்டத்தினர் என்றும் இவர்கள் அரச பரம்பரையினர் அல்லர் என்றும் இவர்கள் தென்னிந்தியரே என்றும் இராசமாணிக்கனார் குறிப்பிடுவார்.[160]

கோபிநாதராயர் முத்தரையரைக் களப்பிரர் என்று கூறியுள்ளார் என்றும் கிருட்டிணசாமி அய்யங்கார் வேங்கட மலையருகில் வாழ்ந்த கள்வராகக் களப்பிரரைக் குறிப்பிடுவார் என்றும் மகாலிங்கம் என்பார் ஒளியரைக் களப்பிரர் என்றும் குறிப்பிட்ட செய்திகளை ந. சுப்ரமணியன் எடுத்துக் காட்டுவார்.[161] அவர் தக்காணத்தின் கீழைப்பகுதியிலிருந்த பல்லவர்கள் தெற்கு நோக்கிக் காஞ்சிபுரம் வரையில் வந்து

158. மறைமலையடிகள், மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும், பக். 242 - 247
159. இராசமாணிக்கம், மா., பல்லவர் வரலாறு, பக். 177-178
160. மேலது, ப. 37
161. சுப்ரமண்யன், ந., தமிழக வரலாறு, பக். 71 - 74

அடைந்ததால் அவ்விடத்தில் ஏற்கனவே வாழ்ந்திருந்த களவர் காஞ்சிக்குத் தெற்கிலுள்ள பகுதியைத் தாக்கித் தமிழ்நாட்டின் முடியுடை மூவேந்தரை வென்று தமது அரசை நிறுவிக் கொண்டனர். கி.பி 4-ம் நூற்றாண்டில் இது நடைபெற்றிருக்க வேண்டுமென்று கூறியுள்ளார்.[162]

சங்க இலக்கியப் பாடல்கட்கும் தமிழிலக்கியச் செய்திகட்கும் மறைமலையடிகளின் கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதாய் இருத்தல் உணரலாம்.

இவ்வடுகக் கருநாடர் சங்க காலத்தில் தமிழ் மன்னர்களுக்கு இடையூறு செய்து வந்தமையும் மோரியர்கள் தமிழ்நாட்டை நோக்கிப் படையெடுத்தமைக்கு உறுதுணையாய் இருந்தமையும் சங்கப் பாடல்களால் உணரலாம். இந்நிலையில் தமிழின உணர்வோடு தமிழ் மன்னர்கள் வடுகக் கருநாடகரை எதிர்த்துப் போரிட்டமை புலப்படுகிறது.

சோழன் இளம்பெருஞ் சென்னியும் சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னியும் வடுகரோடு போரிட்டு வெற்றி கண்ட செய்தி சங்கப் புலவர்களால் பாடப்பட்டுள்ளது.

## சோழன் இளம்பெருஞ் சென்னி வம்ப வடுகரை அழித்தல்

இளம்பெருஞ் சென்னி தனது குடிக்கடனான போர்வினையை முடிக்கும் பொருட்டுச் செம்பினையொத்த மதில் கொண்ட பாழி என்னும் அரணை அழித்து வம்ப வடுகரது பசிய தலையைத் தறித்துக் கொன்ற யானைகளின் கோடு போலத் தோன்றும் அச்சம் தரும் கொடிய சுரம் என்னும் பொருளில் அமையும் பாடலடிகள் பின்வருமாறு:

"....................வினைவிறல்
எழாஅத் திணிதோட் சோழர் பெருமகன்
விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி
குடிக்கடன் ஆகலிற் குறைவினை முடிமார்
செம்புறழ் புரிசைப் **பாழி** நூறி
**வம்ப வடுகர்** பைந்தலை சவட்டிக்
கொன்ற யானைக் கோட்டிற் றோன்றும்
அஞ்சுவரு மரபின் வெஞ்சுரம்".[163]

162. சுப்ரமண்யன், ந., தமிழக வரலாறு, ப. 74
163. அகம். 375 : 9 - 16

## சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி வடவடுகரை வெல்லுதல்

தொடுத்த கண்ணியையும் திருந்திய வேல்கொண்ட பெரிய கையையும விரைந்து செல்லும் குதிரையைச் செலுத்தப் பரிவடிவ காலணியையும் நறுந்தாரையும உடைய சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ் சேட்சென்னி தென்னாட்டிற்குத் துன்பம தரும் வடவடுகரை வாட்போரினால் வென்றான். இதனையுணர்த்தும பாடலடிகள் பின்வருமாறு

"தென்பரதவர் மிடல்சாய
**வடவடுகர்** வாளோட்டிய
தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா கடைஇய விடுபரி வடிம்பின்
நற்றார்க் கள்ளின் **சோழன்**"[164]

## மோரியர்

மோரியர்கள் இந்தியாவின் வடக்குப் பகுதியில் பேரரசை நிறுவியவர்கள. இவர்கள் தமிழ்நாட்டின் மீதும் படையெடுத்து வந்தனர். ஆனால், இவர்களது படையெடுபபுத தொடர்ந்து தமிழரசர்களால் முறியடிக்கப்பட்டு வந்துள்ளது. மோரியர்கள் திருவேங்கட மலைக்கப்பால் ஆட்சி புரிந்துவந்த வடுகக் கருநாடரையும்[165] துளுவ நாட்டைச் சேர்ந்த கோசர்களையும்[166] துணையாகக் கொண்டு தமிழகத்தின் மீது படையெடுத்து வந்தனா ஆனால், படையெடுத்து வந்தனர். ஆனால் படையெடுப்புகள் முறியடிககப்பட்டுவிட்டமை உணரலாம். மோகூர் மன்னன் பணியாமல் அக்கோசர்களையும் மோரியர்களையும் எதிர்ததமை பின்வரும் பாடலடிகளால் உணரலாம்.

"................ வெல்கொடித்
துனைகா லன்ன புனைதேர்க் கோசர்
தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில்
இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்
தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்
பணியா மையிற் பகைதலை வந்த
மாகெழு தானை வம்ப **மோரியர்**"[167]

164 புறம 378 1 - 5
165 அகம. 213 1 - 10
166. மேலது, 15 2 - 8
167. மேலது, 251 6 - 12

இப்படையெடுப்புத் தமிழ்நாட்டின்மீது தொடுக்கப்பட்ட தொடக்கப் படையெடுப்பாகப் புலப்படுகிறது. மோரியப் பரம்பரையின் ஆட்சிக் காலத்தை கி.மு. 321ல் இருந்து கி.மு. 150 வரையென்று கொள்ளலாம்.[168] அசோகனது ஆட்சிக் காலத்தில் கி.மு. 259-இற்கும் கி.மு. 237-இற்கும் இடைப்பட்ட காலத்தில் மோரியர்களைப் பற்றிய தமிழ்ப்பாடல் எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.[169] மோரியர் பரம்பரை அழிந்த பின்னால் கலிங்கத்தில் காரவேலன் என்பவன் கலிங்க மன்னனாய் முடிசூடிக் கொண்டுள்ளான். தமிழ் வேந்தர்கள் தம்முள் ஒன்றுபட்டுத் தனக்கு முன்னால் 113 ஆண்டுகளாக வலிமை பெற்றிருந்தனர் என்றும் அவர்களின் ஒற்றுமை தனக்குத் துன்பம் விளைப்பது என்று கருதி அவர்தம் கூட்டணியை ஒழித்துவிட்டதாகவும் ஒரு கல்வெட்டில் குறிப்பிட்டுள்ளான்.[170] இவ்வாறு காரவேலன் குறிப்பிட்ட தமிழரசர் ஒற்றுமையே மோரியர் படையெடுப்பைத் தடுத்து நிறுத்தியதாகக் கூறலாம் என்று இராசமாணிக்கனார் கூறியுள்ளார்.[171]

## பாரதிதாசன் நிலையில் அரசியல் சார்ந்த இனவிழிப்புணர்ச்சி

பாரதிதாசனும் ஆரியர்களை எதிர்த்துக் குரல் கொடுத்துள்ளார். இவ்வாறு பாரதிதாசன் ஆரியர்களது கொள்கைகளை எதிர்த்துக் குரல் கொடுப்பது ஆரியர்களைத் தமிழ் மக்கள் ஏற்றுக் கைகொள்ளக் கூடாது என்பதற்காகவே ஆகும். ஆரியர்களின் கொள்கையை ஏற்றுப் பாராட்டிப் பேசும் வடக்கு நாட்டவர் போக்கையும் பாரதிதாசன் தீமையாகக் குறிப்பிட்டுள்ளார்.

"நிறத்திமிர் கொண்டு நிலத்தில் புகுந்தவர்
நிறவெறி யாலே கொலைத் திருவிழாவினை
நடத்தியோர் நாகரிக மிலாதஆரியர்".[172]

"பிறர்க்கிட மின்றித் திராவிட நாட்டைப்
பிரித்திட வேண்டும்இப் போதே-இதைப்
பின்னும் வடக்கர் சரக்கினை விற்கப்
பெருஞ்சந்தை ஆக்குதல் தீதே!"[173]

என்னும் பாடலடிகள் கருதத்தக்கவை.

168. வானமாமலை, நா., தமிழர் வரலாறும் பண்பாடும், ப. 80
169. மேலது, ப.85
170. இராசமாணிக்கனார், மா., தமிழ்மொழி இலக்கிய வரலாறு - சங்க காலம், ப. 55
171. மேலது
172. திருவாசகன்,ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1921
173. மேலது, ப. 1528

மேலும் பாரத நாட்டை அடிமை செய்து வந்த ஆங்கிலேயர்களை எதிர்ததுக குரல் கொடுத்துள்ளார்.[174] இநதிய விடுதலை குறித்து ஆங்கிலேயர்களிடமிருநது பாரத நாடு விடுதலைப்பெறவும் குரல் கொடுத்தமை[175] உணரலாம். இதனை உணர்த்தும் பாடலடிகள பின்வருமாறு:

"சிங்கம் சுமந்திடும் ஆசன மேலே
செங்கோல் கொள்ளும் ஆதி மன்னர்கள் போலே
எங்கள் நிலத்திற் பிறர்க்கென்ன வேலை",

"வெள்ளைக்காரத் துரைகள் வெள்ளையரின் நாட்டினின்று
பாரதத்தில் ஏன்வந்தார்? என்றால் பல்பொருளைப
பாரதத்தில் விற்கவந்தார். இவ்விடத்தில் பாரதத்தார்
ஒத்து மறுத்துவிட்டால் தொல்லை ஒழிந்துவிடும்
பத்துநாள் போதும்இந்தப் பாரதத்தை நன்றாக்க.

"ஆங்கிலரின் சாமான்கள் அத்தனையும் நீக்குங்கள்
வாங்காதீர்" "

இந்நிலையில் அரசியல் சார்ந்த விழிப்புணர்ச்சி பாரதிதாசன் பாடல்களில் காணப்படுவதை உணரலாம்.

## ஒப்பீடு

சங்கப் பாடல்களில் தமிழ் மன்னர்கள் ஆரிய அரசர்களை எதித்த செய்திகளைப் பாடியுள்ளனர். பாரதிதாசனும் ஆரியர்களை எதிர்த்துப் பாடியுள்ளமை ஒப்பிடத்தக்கதாகும். சங்கப் பாடல்களில் ஆரியக் கொள்கையைத் தழுவிய வடபுல மன்னர்கள் எதிர்க்கப்பட்டுள்ளனர்.

பாரதிதாசன் பாடல்களிலும் ஆரியக்கோட்பாட்டைத் தழுவிய வடக்கு நாடடவர் - வடக்கர் -பாரதிதாசனால் எதிர்த்துப் பேசப்பட்டுள்ளனர். பாரதிதாசன் காலத்தில் பாரத நாட்டை அடிமை கொண்டாண்ட ஆங்கிலேயரையும் புதுச்சேரியை ஆண்டு வந்த பிரெஞ்சியரையும் அவர் எதிர்த்துப் பாடிய பகுதிகளுள் காணப்படும் அரசியல்

174. திருவாசகன்,ஆ., பாரதிதாசன கவிதைகள், ப. 81
175. மேலது, ப. 73

இனவிழிப்புணர்ச்சி சங்க காலத்தில் காணபபட்ட அரசியல் சார்ந்த இனவிழிப்புணர்சசியோடு பெரிதும் ஒத்துக் காணப்படுகிறது.

## சமயம் சார்ந்த இனவிழிப்புணர்ச்சி

பொதுவாக, எவ்வின மக்களும் கடவுள், தெய்வம் தொடர்பான சில கருத்துக்களையும் உயிர்களைப் பற்றிய பிறப்பு, இறப்புப் பற்றிய கருத்துக்களையும அவ்வுயிர்கள் வாழ்தற்குரிய உலகம் பற்றிய - அதாவது இப்பூமி, விண்ணுலகம், நரகம பற்றிய - கருத்துக்களையும் கொண்டிருப்பர். அயலவர் ஆதிக்கம் தங்கள்மேல் நிகழும்போது, ஒரு குறிப்பிட்ட இனத்தவர் சமயம் சார்ந்த இனவிழிப்புணர்ச்சியைத் தம்மினத்தவரிடையே தோற்றுவிப்பது இயல்பே.

சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் காணப்படும் பின்வரும சமயம் சார்ந்த இனவிழிப்புணர்ச்சிக் கருத்துக்கள் ஆராயப்பட்டுள்ளன.

1. கடவுள் வழிபாட்டில் உயிர்க்கருணை
2. அன்பு, அருள் நாடும் கடவுள் வழிபாடு
3. முழுமுதற் கடவுள் வழிபாடு
4. பிறவிக் கோட்பாடு, இம்மை, மறுமை, விண்ணுலகம், நிரையம் பற்றிய கருத்துக்கள்

## கடவுள் வழிபாட்டில் உயிர்க்கருணை

பிற உயிர்களுக்குத் தீங்கில்லாத கடவுள் வழிபாட்டைத் தமிழர்கள் கடைப்பிடித்து வந்துள்ளனர்.

### அ) சங்க இலக்கியங்களில் கடவுள் வழிபாட்டில் உயிர்க்கருணை

மதுரைக் காஞ்சியில் வாய்மையோடு அரசாட்சி செய்யும் நல்லியல்பினன் என்றும் அவன் பல யாகங்களைச் செய்யும் நல்ல வேள்விகள் நிகழ்த்தக் கூடிய தொன்மை வாய்ந்த சான்றோர்கள் புகழும் சிறப்பினையுடையவனான பல்யாக சாலை முதுகுடுமி போல வாழ வேண்டும் என "நெடுஞ்செழியனை வாழ்க" என மாங்குடி மருதனார் வாழ்த்துகிறார். இங்கு நல்வேள்வி என்னும்பொழுது பிற உயிர்களைத் துன்புறுத்தாத

வேள்வி அதாவது மனிதர்களிடம் மட்டுமல்லாது பிற உயிர்களிடத்தும் அன்பு செலுத்தும் மேன்மை பற்றிச் சுட்டப்பட்டுள்ளதெனலாம். இதனை,

"பல்சாலை முதுகுடுமியின்
நல்வேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட் டுண்ட் புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவி னெடியோன் போல"[176]

என்னும் பாடலடிகளின்மூலம் உணரலாம்.

இனிய ஓசை பொருந்திய கின்னரப் பறவைகள் பாடும் தெய்வங்கள் உள்ள சாரலில் மயில்கள் ஆடும் மரக்காட்டில் கலைகள் பாய்ந்ததினால் உதிர்ந்த பூக்களும் முனிவர்களின் தவப்பள்ளி முன்றிலை நாள்தோறும் தூயதாக்கும் மந்திகள் உள்ள இடத்தில் புலியும் துயிலும் இடத்தில் வாழும் முனிவர்கள் உள்ள இடத்தில் நடைபெறும், வேள்விகளுக்காக யானைகள் விறகுகளைத் தந்து உதவும் புகழ்மிக்க ஒளிதருகின்ற அருவிகளை உடைய மலையை உடையோன் எனத் தொண்டைமான் இளந்திரையன் போற்றப்பட்டுள்ளான். வேள்விகளில் உயிர்ப்பலி கொடுக்கப்படாமல் குரங்கு, யானை முதலிய விலங்கினங்களின் உதவியுடன் வேள்வி நிகழ்ந்தன எனக் கூறப்பட்டுள்ளது.

"கின்னர முரலு மணங்குடைச் சாரல்
மஞ்ஞை யாலு மரம்பயி லிறும்பில்
கலைபாய்ந் துதிர்த்த மலர்வீழ் புறவில்
மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றிற்
செந்தீப் பேணிய முனிவர், வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்
ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே".[177]

என்னும் பாடலடிகள் இதனை உணர்த்தியுள்ளன.

## பாரதிதாசன் நிலையில் கடவுள் வழிபாட்டில் உயிர்க்கருணை

"தமிழர்கள், உயிர்கள் அனைத்தும் சமம். அன்பே நம் இன்பொருள் என

176. மது. 759 - 776
177. பெரும். 494 - 500

வாழ்பவர்கள் மக்களின் அறியாமை நீங்கக் கல்வி வேண்டும. ஆனால், ஆரியர் நூல்களில திருத்துவதற்கென்று என்ன உள்ளது.

ஆரியர்கள் கெட்டுப் போகாதவனையும் கெடச் செய்யும் அடாத காரியம் செய்து அதிகாரியின் காலில் வீழ்வர். கடாவெட்டி விழாத் தொடங்க வேண்டுமென்ற கட்டளைபிறப்பிப்பார். மக்கள் இடருமாறு வடமொழிக்கு இடம் தந்து தமிழைக் கொல்வார்''[178]

மேற்கூறியவற்றில் உயிர்களைச் சமமாக நினைத்து, அறியாமையை நீக்கி அன்பே இன்பொருள் என வாழும் தமிழர்கள் உயிர்களிடத்தில் அன்பு செலுததும தன்மையுடையவர்கள் எனவும் ஆரியர்கள் அடாத காரியம் செய்து திருவிழாத தொடககததில கடாவெட்டித் தொடங்க வேண்டுமென்று கூறுவதால் அவர்கள் உயிர்வதை செய்பவாகள எனவும் புலப்படுதல் உணரலாம்.

## கடவுள் வழிபாட்டில் உயிர்க்கருணை பற்றிய ஒப்பீடு

பசுங்கன்றின் உயிரையும் மனித உயிரையும் ஒப்பான நிலையில் கருதி மனித உயிருக்காக விலங்குயிர் அழியலாம் என்று கருதப்படாமல் அனைத்துயிர் நேயத்திறகுப பொருந்த நீதி வழங்கப்பட்டதாகப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகைக் காலத்திற்கு முற்பட்ட பழந்தமிழ் மன்னனாகக் கருதப்படும் மனுநீதிச் சோழன் வரலாற்றினின்றும் உணரலாம்.

> "வாயிற் கடைமணி நடுநா நடுங்க
> ஆவிற் கடைமணி நெஞ்சுசுடத் தான்தன்
> அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
> பெரும்பெயர்ப் புகாரென் பதியே"[179]

என்று சிலப்பதிகாரத்தில் பழைய சோழ மன்னனாக மனுநீதிச் சோழனைப் பாண்டியன நெடுஞ்செழியனிடம் கண்ணகி வழக்குரைக்கும்போது குறிப்பிடுகிறாள்.

வேட்டுவனிடமிருந்து ஒரு புறாவைக் காக்கத் தன் தசையை அரிந்து துலாக் கோலிட்டுத் தர முற்பட்ட சோழ மன்னன் புறநானூற்றில் குறிக்கப்பட்டுள்ளான

178. திருவாசகன்,ஆ., பாரதிதாசன கவிதைகள, ப. 1154
179. சில. புகார். வழக். 53 - 56

"புறாவி னல்லல் சொல்லிய கறையடி
யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக்
கோனிறை துலாஅம் புக்கோன்"[180]

ஈண்டுக் குறிக்கப்பட்ட மனுநீதிச் சோழனும் சிபிச்சக்கரவர்த்தியும் விலங்கு,பறவை ஆகியவற்றிடம் மனிதர் மாட்டுக் காட்டும் கருணையையொத்த அருள் தன்மையைக் கொண்டு ஒழுகினரென்பது புலப்படுகிறது. இவ்வாறு மனுநீதிச் சோழனும் சிபிச்சக்கரவர்த்தியும் உயிர்களிடத்தில் காட்டிய இரக்கம் பண்டைய தமிழரின் சமயக் கோட்பாடு என்றே துணிதற்குரியதாகும். வடமொழியில் வேதப்பகுதிகளை - சமயக் கோட்பாடுகளை - பெரிதும் பிராமணர்கள் எழுதியுள்ளார்கள் என்பதும் உபநிடதப் பகுதிகளை - சமயக் கோட்பாடுகளை - சத்திரியாகள் என்று கூறப்படும் இந்திய மரபிற்குரிய மன்னர்கள் எழுதியுள்ளார்கள் என்பதும் அறியக் கிடக்கின்றன. புத்த சமயக் கோட்பாடுகளை நிறுவியவரும் சமண சமயக் கோட்பாடுகளை நிறுவியவரும் புத்தரும் மகாவீரரும் ஆகிய ஆரிய இனத்திற்கு மாறான திராவிட இனத்து மன்னர்களேயாவர். வடபுலத்தில் புத்தரும் மகாவீரரும் சமயத்தில் உயிர்க்கருணையை வலியுறுத்தியது போன்று தென்னாட்டில் மனுநீதிச்சோழனும் சிபிச்சக்கரவர்த்தியும் வலியுறுத்தினரென்பது பொருத்தப்பாடுடையதாகும். இறைவழிபாட்டு நிலையில் செய்யப்படும் வேள்விகளிலும் தமிழர்கள் உயிர்க்கருணையைக் கைவிடவில்லை என்பது புலனாகிறது.

தொல்காப்பியத்தில் வேள்வி பற்றி, "கபிலை கண்ணிய வேள்வி நிலையும்"[181] என்று கூறப்பட்டுள்ளது. கபிலை என்பது மங்கலான நிறத்தைக் குறிப்பதாகும். ஈண்டு வேள்விக் குண்டத்தில் நெருப்பிலிட்ட பல பொருள்களினின்றும் எழும் மங்கலான புகையை உணர்த்துவதாகக் கொள்ளத்தக்கது. மன்னர்கள் தங்கள் அரசாட்சியும் நாடும் நலம் பெறுவதற்காகக் கடவுளைப் போற்றிச் செய்யும் வேள்வியின் தன்மையே வேள்விநிலை என்பதாகும்.

சங்க இலக்கியத்தில் வேள்வி என்னும் சொல் இருபத்தாறு இடங்களில் வந்துள்ளமை உணரலாம்.[182] இவ்வேள்விகள் பெரிதும் மன்னர்களாலேயே செய்யப்பட்டமை

180. புறம். 39 : 1 - 3
181. தொல். பொருள். இளம். புற. 29 : 6
182. முரு. 96, 156; பதிற். பதி. 3 : 9, 70 : 18, 74 : 2; பரி. 2 : 62, 13 : 56, 17 : 28, 19 : 43, 88; 220 · 6; புறம். 15 : 20, 26 : 15, 224 : 9, 361 : 2, 400 : 19 ; கலி. 36 : 26; திருமு. 96, 156; மது. 760; பெரும். 316; பரி. 5 : 26, 27, 31

புலப்படுகின்றது. தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் கூறப்பட்டுள்ள வேள்வியில் உயிர்ப்பலி பற்றிய கருத்துகள் காணப்படவில்லை. தமிழர்ப் பண்பாட்டிலும் வேள்வி இருந்ததை உணரலாம். ஆரியர்ப் பண்பாட்டிலும் வேள்வி காணப்பட்டாலும் அவற்றுள் உயிர்ப்பலியிடுவது பண்டைத் தமிழர் சமய மரபிற்கு மாறானதாகக் கொள்ளத்தக்கது.

திருக்குறளில் மூன்று இடங்களில்[183]வேள்வி பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது.

ஆரியர்கள் பலப்பல தெய்வங்களுக்கு உயிர்ப்பலியிட்டு வேள்வி புரிந்தனர் என்பது இருக்கு முதலிய வேதப்பகுதிகளால் உணரக் கிடக்கின்றது. மேலும் உயிர்ப்பலியில் மனிதர்களைப் பலியிட்டு வேட்டதற்கான குறிப்பும் காணப்படுகின்றது.

இருக்கு வேதத்தைச் சேர்ந்த "ஆசுவலாயன சூத்திரத்"திலும், "சாங்காயன சூத்திரத்"திலும், வாசபேயம், இராசசூயம், அசுவமேதம், புருடமேதம், சர்வமேதம் என ஐவகை வேள்விகள் வேட்குமாறு சொல்லப்பட்டிருக்கின்றது; சாங்காயனார் இவ்வேள்வி வேட்கு முறைகளை மிக நுணுக்கமாக விரித்துரைக்கின்றார். கிருட்டிண யசூர்வேத தைத்திரீய சம்கிதையின் நாலாங்காண்டம் ஆறாம் பிரபாடகத்திற் குதிரையைக் கொன்று வேட்கும் அசுவமேத இயல் வகுத்துரைக்கப்பட்டிருக்கின்றது; தைத்திரீய பிராமணத்திலோ (ங,சு) சௌத்திராமணி வேள்வியும், ஆண்மகனைக் கொன்று வேட்கும் வேள்வியுங் கூறப்பட்டிருக்கின்றன சதபதபிராமணம் (எ,ரு,உ) ஆண்மகன், குதிரை, எருது, செம்மறி, வெள்ளாடு முதலான ஐவகை உயிர்களின் தலைகளை வெட்டிச் செங்கற் பலிபீடத்தின் அடியிற் புதைக்குஞ் சட்டியில் இடுகவென்று கட்டளையிடுகின்றது; ஒருகால் நூற்றுத் தொண்ணூற்றைந்து ஆண்மக்களை வெட்டி வேள்வி வேட்ட குறிப்பும் அந்தச் சதபத பிராமணத்திலேயே காணப்படுகின்றது.(கநு, கா,உ), குதிரையைக் கொன்று வேட்கும் வேள்வி இருக்கு வேத முதன்மண்டிலத்தின் நூற்றறுபத்திரண்டாம் பதிகத்திற்றெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.[184]

ஆரியர்கள் தமிழ்நாட்டிற்கு வந்த காலம் கி.மு ஏழாம் நூற்றாண்டு என வி. அரங்காச்சாரியர் கூறியுள்ளார்.[185] இவ்வாறு ஆரியர்கள் தமிழகத்தில் நுழைந்த காலத்தில் உயிர்ப்பலியிட்டுச் செய்யும் வேள்விகளில் நன்மை உண்டென மக்களிடையே கருத்துக்களைப்

183. திரு. 87 : 2, 88 : 2, 259 : 1
184. மறைமலையடிகள், மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், பகுதி-I, ப. 368
185. இராசமாணிக்கனார்,ம., தமிழ்மொழி இலக்கிய வரலாறு - சங்க காலம்.ப.80

பரப்பினர். இத்தகைய கருத்துக்களைத் தமிழர்களும் ஓரளவு கடைப்பிடிக்கத் தொடங்கினர். தமிழர் சமய வாழ்க்கையில் ஆரியர்களுக்கு முக்கிய இடம் தோன்றலாயிற்று.

ஆரியர்களுடைய வேள்வி பற்றிய கருத்துக்கள் தமிழகத்திலும் பரவத் தொடங்கிய காலத்தில் திருவள்ளுவர் இத்தகைய உயிர்ப்பலி வேள்விகளைச் செய்யலாகாதென்பதை,

"அவிசொரிந்(து) ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்(து) உண்ணாமை நன்று"[186]

என்று கூறியுள்ளார். இந்நிலையில் சங்க காலத்தில் பண்டைத் தமிழரின் உயிர்க்கருணை பற்றிய சமயம் சார்ந்த விழிப்புணர்ச்சி தோன்றலாயிற்று என்று கூறலாம்.

சங்க காலத்தில் ஆரியர்களைப் போன்று வேள்விகளில் உயிர்ப்பலியிட்டு உயிர்க்கருணை இல்லாது இருத்தலாகாது என்னும் விழிப்புணர்ச்சி திருவள்ளுவரால் தோற்றுவிக்கப்பட்டது போன்று தமிழர்கள் திருவிழா முதலிய சமயக் கொண்டாட்டங்களில் கடா- வெட்டுதல் முதலிய உயிர்க்கருணையற்ற செயல்கள் கூடாதென்னும் விழிப்புணர்ச்சியைப் பாரதிதாசன் ஏற்படுத்தல் ஒப்பிட்டு உணரத்தக்கதாகும்.

## ஆ) அன்பு, அருள் நாடும் கடவுள் வழிபாடு

பொன், பொருள் முதலியவற்றை வேண்டிக் கடவுளுக்கு வழிபாடு இயற்றாமல் அன்பு, அருள் ஆகியவை வேண்டி வழிபாடு இயற்றுவதைப் பண்டைத் தமிழர்களிடையே காணலாம்.

## சங்க இலக்கியங்களில் அன்பு, அருள், நாடும் கடவுள் வழிபாடு

"தேருருள் போன்ற பூக்கள் நிறைந்த மாலையினையுடைய இறைவனிடத்தில் மக்கள் வேண்டும்பொழுது, எங்களுக்குப் பொன், பொருள் முதலிய பொருள்கள் தேவையில்லை நின்பால் நாங்கள் வேண்டிக் கேட்பது அன்பு, அருள், அறம் என்பனவாகும்" என்று இறைவனிடத்துத் துன்பம் தரும் பொன், பொருள் செல்வங்களை வேண்டாமெனவும் பிறவிக்குப் பயன்தரக் கூடிய அன்பையும் பேரருளையும் மிகவும் வேண்டியிரந்துள்ளனர்.

186. திரு. 259

இதனை,

> “பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
> அருளும் அன்பும் அறனு மூன்றும்
> உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே”[187]

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

அருளைக் குடையாக, அறத்தைக் காம்பாகக் கொண்டு மூவேழ் உலகத்தையும் தனியே காத்து நிற்கும் பேரருளையுடைய இறைவன் என்னும்பொழுது இறைவனை வழிபாடு செய்பவர்கள் மட்டுமல்லாது இறைவனும் அன்பு, அருள் நிறைந்தவன் என உணர்த்தப்பட்டுள்ளது.

> “அருள்குடை யாக அறங்கோ லாக
> இருநிழல் படாமை மூவே ழுலகமும்
> ஒருநிழ லாக்கிய ஏமத்தை மாதோ”[188]

உலகியட் பொருள்களுக்காகவும்[189] போகத்திற்காகவும்[190] இறைவனை வேண்டிப் பாடிய பாடல்களும் வேதங்களில் காணப்படுகின்றன.

ஆரியர் கருத்திற்கு மாறாக அன்பு, அருள், அறம் ஆகியவற்றை முதன்மையாகக் கொண்டு வேண்டுவதாகக் கருதலாம்.

## பாரதிதாசன் நிலையில் அன்பு, அருள் நாடும் கடவுள் வழிபாடு

நாள்தோறும் கோயில் வந்து சிவனுக்கு நடைபெறும் பூசைக்காகும் செலவைப் பணம் கொடுத்து நன்மை தேடிக் கொள்ள வேண்டும் எனவும் உழைப்பதனால் வரும் பணத்தில் இரண்டு பணம் நம் தெய்வத்திற்குக் கொடுத்தால் உழைப்பவருக்கு நானூறு பணம் அருள்வான் எனவும் அதைவிட அதிகமாக நாலு பணம் கொடுத்தால் இறைவன் கண்ணுக்குத் தெரிவார் எனவும் நானூறு பணம் கொடுத்தால் சிவனருள் நாலுக்கு நாள் பெருகும் எனவும் குறிஞ்சித் திட்டில் தங்கள் கொள்கையைப் பரவச் செய்யும் அயலவர் கூறுகின்றனர். அதனைக் கேட்ட குறிஞ்சித் திட்டினர் நாலு பணத்தைச் சிவனார் என்ன

187. பரி. 5 : 78 - 81
188. மேலது, 3 : 73 - 76
189. மறைமலையடிகள், மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், தொகுதி - II, ப.379
190. மேலது,

செய்வார் எனக் கேட்க அங்குக் கூடியுள்ள ஒருவர் சிவத்தொண்டர் பால், பழம், பசுநெய வாங்கவோ மற்றும் பருப்பு, செருப்பு வாங்கவோ செலவாகும் எனக் குரல் எழுகிறது.[191] அதாவது பொருள் கொடுத்து இறைவனருள் பெறுவதை மக்கள் எதிர்க்கின்றனர். ஈண்டுச் செருப்பு முதலிய வன்சொற்களால் பாரதிதாசன் எதிர்ப்பைக் காட்டியுள்ளார்.

பஞ்சமர், பார்ப்பனார் எனக் கோயிலில் சிலை அமைத்துச் சாமி எனப் பெயரிட்டு மக்களின் அறிவை இருளடையச் செய்து ஆள நினைப்பவர்கள் உள்ள இடத்தில் கள்ளி முளைக்கும்.[192]

அதாவது வழிபாடு என்பது பொன், பொருள் கொடுத்து இனபம தேடுவதற்குரியதன்று என்பதும் அன்பு அருள் ஆகியவற்றை வழிபாடு அடிப்படையாக கொண்டது என்பதும் ஈண்டு உணரதற்குரியன.

## அன்பு, அருள் நாடும் கடவுள் வழிபாடு பற்றிய ஒப்பீடு

சங்க இலக்கியங்களில் பொன்னும் பொருளும் போகமும் இறைவனிடம் வேண்டலாம் எனும் ஆரியக் கருத்திற்கு மாறாக அன்பு, அருள், அறம் ஆகியவை வேண்டலாம் என்னும் தமிழர்தம் கருத்து வலியுறுத்தப்பட்டமை போன்றே பாரதிதாசனும பொன்னும் பொருளும் பறிக்க ஆரியர் கூறும் கருத்துக்கள் இன்னவை என்று காட்டி இறைவழிபாட்டில் அன்பின் முக்கிய இடத்தைச் சுட்டியுள்ளமை ஒப்பிடத்தக்கதாகும்.

## இ) முழுமுதற் கடவுள் வழிபாடு

பண்டைத்தமிழர்கள் முழுமுதற் கடவுள் வழிபாட்டினையே போற்றுவோராவா.

## சங்க இலக்கியத்தில் முழுமுதற் கடவுள்வழிபாடு

உலகமெங்கும் நன்மை தந்து நான்கு வேதங்களுக்கும் முதுநூல்களுக்கும் உரியவன் என்று கூறப்பட்டுள்ளது. செவ்வான நிறம் போன்ற மேனியையும் அவ்வானில் ஒளிதரும் பிறையினது நிறத்தினையுடைய பற்களையும் தீ எரிவது போன்ற முறுக்கேறிய சடையையும் இளம்பிறைத் திங்கள் ஒளிரும் உச்சியினையும் வரிபுலியின் தோலை

191. திருவாசகன்,ஆ., பாரதிதாசன கவிதைகள், ப. 1206
192. மேலது, ப. 110

ஆடையாகவும் உடுத்தியுள்ள அவனது மிடறு நீலமணி நிறத்தினையும் குரல் யாழினது இனிமையையும் பெற்றுள்ளவன் கார்காலக் கொன்றையின் பொன்னிற மலர்களை அணிந்தும் அம்மலரையே தலையில் கண்ணியாக சூடியும் குற்றமற்ற பூணூல் மார்பில் அணிந்தும் இமைத்தலில்லாத கண் தோன்றுதற்குக் காரணமான பகைவரை அழித்தபின் தோல்வியறியாத அவன் கையில் கணிச்சி (குந்தாலி) யினையும் வேலினையும் கொண்டு உமையுடன் ஆனேற்றில் காட்சி தருபவன் மூவா அமரரும், முனிவரும் பிறரும் அறியாத தொன்மையான மரபினையும் உடையவனாவான்.[193] முக்கட் செல்வன் நெருப்பில் வெம்மையாய் மலரில் மணமாய் மணிகளில் மணியாய் சொற்களில் வாய்மையாய் அறத்தினில் அன்பாய் மறச் செயல்களில் வன்மையாய் வேதத்தில் அரும்- பொருளாய் பூதத்தில் முதற்பொருளாய் ஞாயிற்றில் ஒளியாய் திங்களில் குளிர்ச்சியாய் அனைத்திலும் உள்பொருளாய் அமைந்திருக்கின்ற இறைவனை உலகமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ஒருவன்[194] என விளக்கப்பட்டுள்ளதனை உணரலாம்.

இவ்வாறு எல்லையற்ற பரம்பொருள் முழுமுதற் கடவுள் கோட்பாடு சங்க கால மக்களிடையே காணப்பட்டது.

ஆரியர்கள் இந்திய நாட்டில் நுழைந்து பரவித் தம் தெய்வக் கோட்பாட்டைத தமிழ் மண்ணில் பரப்பலாயினர் அவர்கள் வழிபாட்டில் சிறுதெய்வ வணக்கங்களே மேலோங்கியிருந்தன. அத்தெய்வங்களுக்குச் சில காணிக்கைகளைத் தந்து தமக்கு வேண்டிய வரங்களை அவற்றிடமிருந்து பெற முயன்றமை உணரலாம். பின்வரும் பகுதி கருதத்தக்கது.[195]

“தைத்திரிய சம்ஹிதையில் (க,அ,ச,க),” ஓ பங்கிட்டு உண்டோய், நின் வயிறு நிரம்பிய உதோ பறந்து செல்? நன்றாய் வயிறு நிரம்பியபின் திரும்பவும் எம்பாற் பறந்துவா! ஓ இந்திரனே, விலைதீர்த்துக் கொண்ட வாணிகத்திற்போல, ஆற்றலையும் வலிமையையும் நாம் மாற்றிக் கொள்வேம்! எனக்கு ஒன்று கொடு யானும் உனக்கு ஒன்று கொண்டு வருவேன்” என்று கூறப்பட்டுள்ளது. பகவற்கீதையும் “வேள்வியாற்றுதலால் தேவர்களைச் செழிக்கச்செய், அதனாற்றேவர்களும் நின்னைச் செழிக்கச் செய்வர்” என்று கூறியுள்ளது. மேலும் வணிக முறையில் காணிக்கைகளைக் கொடுத்தலும் வரங்களைப் பெறுதலும் அமைந்துள்ளமை அறியலாம்.

193. அகம். கடவுள் வாழ்த்து
194. மேலது, 181:15, பரி. 3:63 - 68
195. மறைமலையடிகள், மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், தொகுதி - 2, ப.379

சிறுதெய்வ வணக்கம் பற்றிய கருத்துக்களின் தாக்கம் தமிழ்நாட்டில் இருந்ததாகல் வேண்டும். தமிழர்கள் சமயம் பற்றிய நிறைவான கருத்துக்களையெல்லாம் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்கள் கொண்டிருக்கவில்லை. ஏனென்றால் தொகுப்பாளர்களின் விருப்பிற்கேற்பவே பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன எனலாம். முழுமுதற் கடவுள் வழிபாடே திருவள்ளுவரால் போற்றி உரைக்கப்பட்டுள்ளது. சிறுதெய்வ வழிபாடு கடியப்பட்டுள்ளது. “தெய்வம் தொழாஅள்”என்பது சிறுதெய்வத்தைத் தொழமாட்டாள் என்பதை உணர்த்துவதாகும். சிலப்பதிகாரத்தில் வரும் ஒரு நிகழ்ச்சியை ஈண்டு எடுத்துக் காட்டலாம்[196]

கோவலனைப் பிரிந்த கண்ணகியிடம் அவள் தோழி தேவந்தி பிறர் துயர்தீர்க்கும் பாசண்டச்சாத்தனை வழிபாடு செய்து அவள்தன் கணவனைப் பெறலாம் எனக் கூறினாள். அதனைக் கேட்ட கண்ணகி, “நானும் என் கணவனும் நெடுநகரில் புகுந்த பொழுது அந்நகர மக்கள் இடுதேளைப் போடுவது போல் சொல்லக் கூடாத சொல்லைச் சொன்னார்கள். அச்சொல்லால் கோவலனுக்குத் தீங்கு நேர்ந்ததைக் கேட்டு அரசனோடு வழக்காடியதன் விளைவாக அவ்வூர்க்கும் தீங்கு நேர்ந்ததாகக் கனாக் கண்டேன்” எனக் கூறினாள். அக்கனவைக் கேட்ட தேவந்தி, “முற்பிறவியில் நின் கணவனுக்காகச் செய்யும் நோன்பினைச் செய்யத் தவறியதால் ஏற்படும் தீங்கைத் தடுக்க வேண்டுமானால், காவிரி கடலோடு கலக்கும் மலர் மலரும் நெய்தல் நிலத்திலுள்ள சோம குண்டம், சூரிய குண்டம் எனப்படும் துறைகளில் மூழ்கிக் காமவேள் கோட்டத்தைத் தொழுதால், இம்மையில் இன்பத்தையும் மறுமையில் தேவருலகத்தையும் தரும். நாமும் அங்கொரு நாள் சென்று நீராடலாம்” எனக் கூறினாள். அதனைக் கேட்ட கண்ணகி, “அவ்வாறு நீராடுதல் நமக்குப் பெருமை தரும் செயலன்று” எனக் கூறினாள்.

## பாரதிதாசன் நிலையில் முழுமுதற் கடவுள் வழிபாடு

கடவுள் என்பவர் ஒருவர் என்றும் மக்கள் எல்லோரும் உடன்பிறந்தவர்கள் என்றும் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என வேறுபடுத்துவதில் சிறப்பில்லை என்றும் ஒன்றே தெய்வம் என்பதை மறந்து தெய்வம் பல உண்டு எனத் தமிழர்கள் ஏற்றதினால் துன்பத்தையடைந்தனர் என்றும் தெய்வம் பலப்பல என்றும் அவற்றிற்கு உருவம் உண்டு என்றும் தெரு, ஊர், வீட்டின் இருளறையெல்லாம் கோயில் வேண்டும் என்றும் கூறும் ஒழுக்கமில்லாத அயலவர் தமிழைக் கொன்று ஒற்றுமையைக் குலைத்துத் தின்று பிழைக்கும் கூட்டத்தினர் என்றும் அவர்களைப் பாலசுப்பிரமணியன் அன்றே எதிர்த்தவன் என்றும்

196. சில. புகார். கனா. 39 - 64.

கூறும்பொழுது அயலவரின் கொள்கைகள் தமிழர் தம்மிடையே நுழைந்தாலும் அதனை எதிர்க்கும் திறனையும் கொண்டார்கள் என்றும் அதாவது கடவுள் ஒருவனே என்றும் அவன் எங்கும் நிறைந்த பரம்பொருள் என்றும் வலியுறுத்தப்பட்டுள்ளது. இதனை உணர்த்தும் பாடலடிகள் பின்வருமாறு;

"ஏக பரம்பொருள் என்பதை நோக்க
எல்லாரும் உடன் பிறப்பே"[197]

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
எனும் உண்மை உணர்ந்தவன் தமிழைக்
கொன்றே பிழைப்பவர் தமிழர்ஒற் றுமையைக்
குலைத்ததுமே அவர்தம துடைமை
தின்றே பிழைப்பவர் ஆகிய பார்ப்பன
ஓநாய்கள் வெற்றியில் திரிந்த
அன்றே எதிர்த்தவன்! அணிவீரன்!பால
சுப்பிர மணியனை இழந்தோம்"[198]

## முழுமுதற் கடவுள் வழிபாடு பற்றிய ஒப்பீடு

முழுமுதற் கடவுள் வழிபாட்டினை ஏற்றுச் சிறுதெய்வ வழிபாட்டைக் கடியும் பண்டைத் தமிழரின் சமயக் கோட்பாட்டைப் போன்றே பாரதிதாசனின் முழுமுதற்கடவுள், சிறுதெய்வ வழிபாடு ஆகியவை பற்றிய கோட்பாடு அமைந்து வருதல் உணரலாம்.

## பிறவிக் கோட்பாடும் விண்ணுலகம் முதலிய கருத்தும்

பல்பிறவிகளிலும், இம்மை, மறுமை, விண்ணுலகம், நிரையம் ஆகிய கருத்துக்களிலும் பண்டைத் தமிழர்கள் நம்பிக்கை கொண்டு காணப்படுகின்றன.

197. திருவாசகன்,ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 75
198. மேலது, ப.1545

## சங்க இலக்கியங்களில் பிறவிக் கோட்பாடும் இம்மை, மறுமை, விண்ணுலகம், நிரையம் பற்றிய கருத்துக்களும் இம்மை, மறுமை பற்றிய கருத்துகள்

தலைவனைப் பிரிந்த தலைவி மீண்டும் தலைவனைப் புணர்ந்த பின் மகிழ்ச்சியோடிருக்கும் - பொழுது, "நீலமணி நிறத்தினைப் போன்ற பெரும் நீர்ப்பரப்புடைய கடற்கரைத் தலைவனே **இப்பிறப்பிலிருந்து மறுபிறப்பு** எய்தும்பொழுதும் என் அன்புக் கணவனாக நீயே வரவேண்டும் நானே உன் உள்ளத்திற்குரியவளாக இருக்க வேண்டும்" எனத் தலைவனிடம் கூறுகிறாள்.[199]

தலைவியைத் தாய் முதலியோர் இல்லக்காவலில் வைக்கக் கருதியிருப்பதைத் தோழி தலைவனுக்குணர்த்தத் தலைவன் தன் உள்ளத்தினை நோக்கி, "இன்று போல் என்றுமிருக்கும் இவ்வன்பு நோய் என்றும் அழியாது இவ்வுலகத்தில் மட்டுமல்லாது **மறுமையுலகத்தும்** இருக்கும். அதாவது இவ்வுலகத்தில் அவள் எனக்கில்லையென்றால் **மறுபிறப்புப் பிறக்கும்** அவ்வுலகத்தில் அவளைப் பெறுவது உறுதி" எனக் கூறுகிறான்.[200]

மேற்கூறியவற்றில் அன்புத் தலைவன் தலைவியர் வாழ்க்கை என்பது வாழும்பிறவி மட்டுமல்லாது வாழும்பிறவி (**இம்மை**) நீங்கி அடையும் **மறுபிறவியிலும்** தொடரும் எனத் தலைவி தலைவன் ஆகிய இருவரும் கருதியுள்ளமை தெளிவாகிறது.

**இம்மையில்** ஒருவன் நன்மை செய்தால் அவனுக்கு நன்மை விளையுமே அன்றித் தீமை விளையாது என்றும் இப்பிறப்பில் செய்யும் நன்மை **மறுமையில்** உதவும் எனக் கருதிச் செய்யும் அறங்கொள்ளும் வணிகன் அல்லன் ஆய் என்றும் நற்செய்கை செய்வது அவனது குணமே ஆகும்[201] எனக் கூறுபவர்களும் உள்ளனர் என்றும் சங்க இலக்கியப் பாடல்களால் உணரலாம்.

199. புறம். 49 : 1 - 5
200. மேலது, 199 : 6 - 9
201. அகம். 101 : 1 - 3

மேற்கூறியவைகளில் ஒருவன் செய்யும் நன்மை, செய்யும் பிறவியில் பயன்தருவதோடு மட்டுமல்லாமல் மறுபிறவியிலும் பயன்தரக் கூடியதாகும் எனச் சுட்டப்பட்டுள்ளது. ஒருவன் செய்யும் நன்மை மட்டுமின்றித் தீமையும் அவனைத் தொடரும் என்பதனை உணர்த்தும் பாடலடிகள் பின்வருமாறு:

"செம்மையி னிகந்தொரீஇப் பொருள்செய்வார்க் கப்பொரு
**ளிம்மையு மறுமையும்** பகையாவ தறியாயோ"[202]

இப்பாடலடிகளில் பொருள்தேடும் முறையிலிருந்து நீங்கிப் பொருள் தேடுபவர்களுக்கு அப்பொருள் இம்மையிலும் மறுமையிலும் துன்பம் தரக்கூடியதாகும் எனச் சுட்டப்பட்டுள்ளது.

ஒருவன் செய்யும் நன்மைகள் **இம்மை, மறுமைகளில்** பயன் தருவதைப் போல் தீமைகள் துன்பம் தருவனவாகும். அதாவது செய்யும் நன்மைகளும் தீமைகளும் வாழும் பிறவி மட்டுமல்லாது உயிர்நீங்கி மறுபடியும் வாழும் பிறவியிலும் தொடரக்கூடியனவாகும் என்பது குறிக்கப்பட்டுள்ளமை உணரலாம்.

"உயிர்களுக்குத் தீமை செய்பவர், அறநெறிப் புகழில்லாதவர், கூடாவொழுக்கத்தில் அழிந்த தவ விரதமுடையவர், **மறுபிறப்பில்லையென்ற** மடவோர் ஆகியோர் இறைவனது திருவடியை அடைய மாட்டார்கள். நினது திருவருளை விரும்பி ஏற்றுக் கொண்ட அறமுடையோர் நின்னடி சேர்வர்" என்னும்பொழுது இம்மையில் அறத்தன்மையுடையவர்கள் மறுமையில் இறைவனை அடைவர். அதாவது இப்பிறப்பு மட்டுமல்லாது மறுபிறப்பும் உள்ளதென்பது சுட்டப்பட்டுள்ளது.

"நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோர் அல்லதை
மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சினநீடி னோரும்
சேரா வறத்துச் சீரி லோரும்
அழிதவப் படிவத் தயரி யோரும்
**மறுபிறப் பில்லெனும் மடவோருஞ்** சேரார்
நின்னிழல் அன்னோ ரல்ல தின்னோர்"[203]

202. கலி. 14 : 14-15
203. பரி. 5 : 71 - 77

## துறக்கம் அல்லது விண்ணுலகம்

**துறக்கம்** என்பது தேவர்கள் வாழுமிடம் எனவும் அவ்வுலகம் பெறுவதற்கரியது என்றும் திருமாலிருங்குன்றக் கடவுளைத் தொழுபவர்களுக்குச் சிறப்புற்ற **மேலுலகம்** கிடைக்கும் என்றும் அவ்வாறில்லாதவர்களுக்குக் கிடைத்தற்கரியதாகும என்றும் சங்க இலக்கியத்தில் விளக்கப்பட்டுள்ளன.

ஒழுக்க நெறியின்கண் நல்வினை செய்பவர்களுக்கும், தவம் செய்யும வாழ்க்கை வாழ்பவர்களுக்கும், புறங்கொடாத வாழ்க்கை வாழும் வீரர்களுக்கும் **துறக்கம்** (மேலுலகம்) கிடைக்கும். இவற்றை உணர்த்தும் பாடலடிகள் பினவருமாறு,

"மறுவில் **துறக்கத்** தமரர்செல் வன்றன்"[204]

"நாறிணர்த் துழாயோ னல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு **துறக்கம்**
அரிதிற்பெறு **துறக்க** மாலிருங் குன்றம்"[205]

"வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்
நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்றுய்ப்பத் **துறக்கம்**".[206]

"------ சான்றவிர் தான்தவம
ஒரீஇத் **துறக்கத்தின்** வழீஇ ஆன்றோர்
உள்ளிடப் பட்ட அரசனைப் பெயர்த்தவர்
உயர்நிலை யுலகம் உறீஇ யாங்கென்
துயர்நிலை தீர்த்தல் நுந்தலைக் கடனே".[207]

இவ்வுலகில் நன்மை செய்பவர்களை **விண்ணுலகில்** விரும்பி விரைந்தெதிர் கொள்வர் என்பது,

204. பரி. 5 . 69
205. மேலது, 15 16 - 18
206. கலி. 118 : 1 - 3
207. மேலது, 39 . 32 - 37

"-------------------------- மயங்காது
செய்தல் வேண்டுமா னன்றே வானோர்
அரும்பெற லுலகத் தான்றவர்
விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே"[208]

எனவரும் புறநானூற்றடிகளில் உரைக்கப்பட்டுள்ளது.

இவ்வுலகத்தில் செய்யும் அறத்தின் பயனால் **உயர்ந்தோர் உலகம்** அதாவது தேவருலகத்தை அடைவர் என விளக்கப்பட்டுள்ளது. இதனை உணர்த்தும் பாடலடிகள் பின்வருமாறு:

"ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇயர்
**உயர்ந்தோ ருலகத்துப்** பெயர்ந்தனன்".[209]

நிலவெல்லைக்குட்பட்ட உலகத்தில் பெரிய தானைப் படையினையும் அறிவுடையோர் புகழும் நற்புகழினையும் விரிந்த சுடரினையும் வானத்தின் அளவு உயர்ந்த சிறப்பினையும் கொண்டுள்ள செம்பியர் மரபில் வந்த மகன் கொடிகள் அடங்காது (நுடங்காது) நிற்கும் யானைகளுக்குத் தலைவனான மிகப்பெரிய வளவன் **தேவருலகம்** எய்தும்பொழுது அவனைப் புதைப்பதற்குரிய அளவிற்குத் தாழியைச் செய்ய முடியுமோ எனக் குயவனை நோக்கி ஐயூர் முடவனார் என்னும் புலவர் கேட்பதாக அமைந்துள்ளது. இதனை உணர்த்தும் பாடலடிகள் பின்வருமாறு:

"நிலவரை சூட்டிய நீணெடுந் தானைப்
புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை
விரிகதிர் ஞாயிறு விசும்பிவர்ந் தனன
சேண்விளங்கு சிறப்பிற் செம்பியர் மருமகன்
கொடி நுடங்கு யானை நெடுமா வளவன்
**தேவ ருலக** மெய்தினன்".[210]

உலகம் என்பது மக்கள் உலகம், தேவர் உலகம் என இருவகைப் பட்டதெனவும் இவ்வுலகை ஆளமட்டுமல்லாமல் அவ்வுலகை ஆள்வதற்குத் தலைவன் உள்ளான் எனவும் சுட்டப்பட்டுள்ளதோடு இவ்வுலகில் நற்செயல் செய்பவர்கள் தங்கள் வாழ்நாட்களுக்குப் பின் **தேவருலகத்தை** அடைவார்கள் என்ற நம்பிக்கை மக்களிடையே

208. புறம். 287 : 9 - 12
209. மேலது, 174 : 19-20
210. மேலது, 228

இருந்து வந்துள்ளமை புலனாகிறது.

## நிரையம்

நிறைந்த அன்புடைய, **நிரையம்** அதாவது தீயனவற்றை மேற்கொள்ளாதவா என்னும்போது தீமைகளின் முழுமை நிரையம் என்னும் சொல்லால் சுட்டப்பட்டுள்ளதை.

"வரையா நயவினர் **நிரையம்** பேணார்"[211]

என்பதால் உணரலாம்.

பகை முதலியவற்றால் ஏற்படும் துன்பமின்றி நல்வாழ்க்கையையும் உண்மையைப் பேசிப் புலனடக்க ஒழுக்கத்தினையும் நிரையம் எய்தாத வகையில நல்வினையையும் உடைய பெரியோர் செய்தவற்றையே தாமும் செய்யும் சுற்றத்தாருடன பதியிழுக்கும் குற்றம் அறியாது இனிய வாழ்க்கையை விரும்பி வாழும் பலரும் புகழும பண்பினை உடையவன் சேரலாதன்[212] என்னும்போதும்,

ஒளிபொருந்திய நுதலையுடையவள் நீராடச் சென்ற பொழுது அவ்வாற்றில் மிதந்த பசுங்காயைத் தின்ற தவற்றிற்காக எண்பத்தொரு களிற்றையும் அவள் நிறை பொன்னால் செய்த பாவையையும் தண்டமாகக் கொடுத்தும் அதை ஏற்காமல் அப்பெண்ணைக் கொன்று **நிரையம்** சென்ற நன்னனைப் போல் **நிரையம்** செல்ல வேண்டும்[213] எனக் காவல் செய்த அன்னையைத் தோழி கூறும்பொழுதும்

உண்மை பேசி ஒழுக்கத்துடன் நல்வினை செய்பவர்கள் **நிரையம்** எய்த மாட்டார்கள் என்றும் உண்மை அதாவது நீதிக்குப் புறம்பாகச் செயல்பட்டுத் தீவினை செய்வர்கள் **நிரையம்** அடைவார்கள் என்றும் கூறும்போதும் **நிரையம்** சுட்டப்பட்டுள்ளது.

## பாரதிதாசன் நிலையில் பிறவிக் கோட்பாடும் விண்ணுலகம் பற்றிய கருத்துக்களும்

மக்கள் வாழும் உலகம் இவ்வுலகம். மேலே உள்ள உலகம், அதாவது

211. நற். 329 : 1
212. பதிற். 15 : 15 - 31
213. குறு. 292 : 1 - 6

இரப்பவர் இல்லாத மேலுலகம் தேவருலகம் என்றும் மனிதன் இறந்தவுடன் தேவருவகம செல்வான்[214] என்றும் கூறும்போது பிறப்பு, இறப்பு பற்றிக் கூறப்பட்டுள்ளமை புலப்படுகிறது. இரப்பார் இல்லாமலிருக்கும் தேவருலகத்தைப் போல் இவ்வுலகையும் சிறப்புறச் செய்ய அனைவருக்கும் கறியோடு சோறு கொடுக்கப்பட்டுள்ளமையை,

> "தேவர் உலகம் சிறப்பென்னும் ஆரியர்சொல்
> ஈவார் உலகம் இழிவாக்கப் - பாவை
> கலமே நிறையக் கறியோடு சோறிட்டாள்
> இலமே இலம்என்னு மாறு"[215]

என்று பாரதிதாசன் கூறியுள்ளார்.

மன்னர்க்கிடையில் சண்டை வளர்த்தவர்கள், அதாவது ஆரியரைத் தொழுதால் **சுவர்க்கம்** செல்வார்கள் என விளக்கப்பட்டுள்ளது.[216] ஆனால், சங்க இலக்கியத்தில் அறச்செயல் செய்தவர்கள் **சுவர்க்கம்** அதாவது மேலுலகம் செல்வார்கள் எனச் சுட்டப்பட்டுள்ளது. அம்மேலுலகம்,

> "மேலேழு லோகம் என்றார்
> கீழேழு லோகம் என்றார்
> நூலெல்லாம் பொய்கூறினார் - சகியே
> நூலெல்லாம் பொய்கூறினார்!".[217]

என்னும்போது உலகம் என்பது மேல் உலகம் ஏழு, கீழ் உலகம் ஏழு எனப் பிரிவுபடுத்தி நூல்களில் கூறப்பட்டிருத்தல் பொய் அதாவது இவ்வுலகம் மட்டும் உண்மையானது என்று கொண்டு வேறுலகம் பற்றிக் கூறப்பட்டிருத்தலை எதிர்த்தல் காணப்படுகிறது.

குளத்தில் மூழ்கிச் செல்வதால் ஐந்திரம், பழம்பிறப்புச் செல்லலாம். அவ்வாறில்லாமல் நடுவழியில் சென்றால் துன்பம் வரும் என வழி கேட்ட கோவலனுக்குப் பார்ப்பான் வழி கூறினான். குளத்தில் முழுகினால் ஐந்திரம் உணர்வதோடு, பழம்பிறப்பு உணரலாம் என்பது உண்மையோ பொய்யோ யாருக்குத் தெரியும். முழுப்பொய்யை நம்புபவர்கள் உள்ளதால்தான் ஆரியர் கூறுகின்றனர். நாம் நடுவழியே நடப்போம் என நடந்தனர்.[218]

214. திருவாசகன்,ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1959
215. மேலது, ப. 1839
216. மேலது, ப. 95
217. மேலது, ப. 94
218. மேலது, ப. 1325

அதாவது, ஆரியக் கொள்கையை ஏற்றுக் கொள்ளாது படிப்பதனால் வரும் நிலை குளம் முழுகுவதனால் வராதெனக் கூறித் துன்பம் தரும் நடுவழி நடக்கின்றனர் என்னும் போது பிறப்புப் பற்றிய கருத்துக்களையும் ஏற்றுக் கொள்ளாததோடு இடர்தரும் நடுவழி நடப்போம் என்னும்போது அவர்கள் கொள்கையில் நம்பிக்கையில்லாது வருமிடர் என்னவென்று தெரிந்துகொள்ளும் அதாவது உண்மை அறிந்து கொள்ளும் திறன் வேண்டுமெனச் சுட்டப்படுவது தெளிவாகின்றது. ஈண்டுப் பல்பிறவிக் கோட்பாடு ஆரியர்க்கு உரியதாகப் பாரதிதாசன் கருதியுள்ளார்.

சுவர்க்கம், பிறவிக் கோட்பாடு ஆகியவற்றில் பாரதிதாசனுக்கு நம்பிககை இல்லாமை புலப்படுகிறது. இவற்றை ஆரியர்களே கூறினார்கள் என்றும் அவர் கொண்டமை புலப்படுகிறது.

## பிறவிக் கோட்பாடு இம்மை, மறுமை முதலியன பற்றிய ஒப்பீடு

வினைக் கோட்பாடும் அதாவது நல்வினை, தீவினை இடைவிடாது தொடரும் என்னும் கோட்பாடும் பிறவிக் கோட்பாடும் அதாவது இம்மை, மறுமை முதலியன உண்டு என்னும் கோட்பாடும் பண்டைத் தமிழர்களுக்குரியனவாகும்.

> "வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
> முனைவன் கண்டது"[219]

என்னும் நூற்பாவில் வினைக் கோட்பாடு பற்றியும்

> "ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
> ஒன்றி உயர்ந்த பால தாணையின்
> ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப"[220]

என்னும் நூற்பாவில் பிறவிக் கோட்பாடு பற்றியும் கருத்துக்கள் தொல்காப்பியத்தில் காணப்படுகிறதென்றாலும் அவை மிகுதியாகத் தொல்காப்பியரால் விளக்கிக் காட்டப்படவில்லை. இஃது இலக்கண நூலின் நெறிமுறைக்கேற்பச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலாகும். ஆனால் பத்துப்பாட்டு, எட்டுத்தொகைக் காலத்தில் பிறவிக் கோட்பாட்டில் மிகுந்த அழுத்தம்

219. தொல். பொருள். இளம். மரபு. 93
220. மேலது, களவு. 2

இல்லாத ஆரியருடைய சமயக் கொள்கைகள் தமிழ் மக்களிடையே பரப்பப்பட்ட காலத்தில் தமிழ்ப் பிறவிக் கோட்பாடு பற்றிய விழிப்புணர்ச்சி ஏற்படுத்துகின்ற வேளையில் மிகுதியாக இம்மை மறுமை பற்றிய கருத்துக்களைப் பேசியுள்ளனர். வினைக் கோட்பாட்டின் விளக்க நிலையில் துறக்கம், நிரையம் ஆகியவை பற்றியும் சங்க இலக்கியத்தில் பல கருத்துக்கள் காணப்படுகின்றன. தமிழர்களிடையே சமய நிலையில் விழிப்புணர்ச்சியூட்டக் கருதிய பாரதிதாசன் பிறவிக் கோட்பாடு பற்றியும் துறக்கம் பற்றியும் கூறியுள்ளார். ஆயினும் அவர் பல்பிறவிக் கோட்பாடு, துறக்கம் முதலியன ஆரியர் சமயப் பண்பாட்டிற்கே உரியதாகக் கூறியுள்ளார். பாரதிதாசன் உணர்வு நிலையில் இவ்வாறு கூறினாலும் ஆராய்ச்சி செய்யும்பொழுது பாரதிதாசனின் பண்டைத் தமிழர் சமயம் பற்றிய கருதுகோள் பொருத்தப்பாடு உடையதாகாது. பாரதிதாசன் தனது கருதுகோளை நிறுவுவதற்குச் சான்றாதாரங்களைத் தந்திலர். சங்க இலக்கியத்தில் பிறவிக் கோட்பாடு, இம்மை, மறுமை, துறக்கம், நிரையம் ஆகியன பற்றிய பண்டைத் தமிழரின் சமயம் பற்றிய கொள்கைகள் அவர்களின் அன்றாட வாழ்க்கையில் பிணித்துப் பேசப்பட்டுள்ளமை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

இனம் என்ற சொல் தொல்காப்பியத்திலும் சங்கப் பாடல்களிலும் விளக்கிக் காட்டிய நாட்டினம் என்ற பொருளில் கையாளப்படவில்லை என்பதும் பொருளில் ஒத்த பல பொருள்களின் கூட்டத்தையே இனம் என்ற சொல் சுட்டுகிறது என்பதும் பாரதிதாசன் இச்சொல்லை நாட்டினம் என்ற பொருளில் வழங்குகிறார் என்பதும் தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் இனம் என்ற சொல் நாட்டினம் என்ற நிலையில் வழங்கவில்லையென்றாலும் அவற்றில் தமிழினவுணர்ச்சி பற்றிய கருத்துக்கள் மிளிர்கின்றன என்பதும் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. பாரதிதாசன் பாடல்களில் காணப்படும் இனவுணர்ச்சியோடு சங்கப் பாடல்வழிப் புலனாகும் தமிழின உணர்ச்சி ஒப்பீடு செய்யப்பட்டுள்ளது. அத்தமிழ் நாகரிகத்தார்க்கு உரியதல்லாத இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் பாடுபொருளாகக் கொள்ளாமல் தமிழில் தனித்தன்மை வாய்ந்த பொருளிலக்கணத்தையே பாடுபொருளாகக் கொண்டு சங்க இலக்கியம் இனவுணர்ச்சியை இலக்கிய நிலையில் கடைப்பிடித்தமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது. பாரதிதாசனும் இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் பாடுபொருளாகக் கொள்ளாமல் தமிழிலக்கியத் தனித்தன்மையை நிலைநாட்டுகின்ற வகையில் இலக்கியம் புனைந்துள்ள தன்மை ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளது. ஆரியப் பண்பாட்டிற்குரிய கந்தருவ ஒழுக்கத்தைப் பாடாது உள்ளக் காதலையும் திருமணத்தையும் வலியுறுத்தும் தமிழ்ப்பொருளிலக்கண மரபு சார்ந்த

இனவிழிப்புணர்ச்சியோடு பாரதிதாசன் பாடல்களில் காணப்படும் இனவிழிப்புணர்ச்சி ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளது. சங்க இலக்கியக் காதல் பாடல்களிலும் பாரதிதாசன் காதல் பாடல்களிலும் தமிழ்ப்பண்பாட்டு இனவுணர்ச்சியைப் பேணுவதே கோட்பாடாக அமைந்துள்ளது என்பதும் மேலும் அவற்றில் திருமணத்திற்கு முந்தைய காதல் ஒழுக்கத்தில் மெய்யுறுபுணர்ச்சி (உடலுறவு) புனைந்துரைக்கப்படவில்லையென்பதும் ஒப்புமை நிலையில் விளக்கிக்காட்டப்பட்டுள்ளன. ஆரியர்களையும் வடபுல மன்னர்களையும் வடுகக் கருநாடகர்களையும் மோரியர்களையும் தமிழ்மன்னர்கள் எதிர்த்துப் போரிட்டமை அவாகளது தமிழினவுணர்ச்சியைக் காட்டுவதாகும் என்பது விளக்கிக் காட்டப்பட்டுள்ளது. அவ்வாறே ஆரியர்களையும் வடக்கரையும் ஆங்கிலேயரையும் பிரஞ்சுக்காரரையும் பாரதிதாசன் எதிர்த்துப் பாடியுள்ளமை அவரது இனவிழிப்புணர்ச்சியைக் காட்டுவதாகும் என இவை ஒப்பிட்டு விளக்கப்பட்டுள்ளன. கடவுள் வழிபாட்டில் உயிர்க்கருணை, அன்பு, அருள் நாடும் வழிபாடு, முழுமுதற்கடவுள் வழிபாடு, பிறவிக் கோட்பாடு ஆகியவை சங்க இலக்கியங்களில் இனவுணர்ச்சியைப் போற்றுகின்ற நெறியில் சமய நிலையில் காணப்படுகின்றன என்பதும் இக்கருத்துகளோடு பெரும்பான்மை ஒத்துவரும் பாரதிதாசன் பாடல்களில் புலனாகும் இனவிழிப்புணர்ச்சி இன்னதென்பதும் விளக்கிக்காட்டப்பட்டுள்ளன.

# நாடு

நாடு என்பதன் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உறுதுணையாக நிற்கக் கூடிய முக்கிய கூறுகள் 1. நிலம் 2. இனம் 3. சமயம் 4. மொழி 5. பொருளாதாரம் முதலியன என்று இராய் என்பவர் கூறியுள்ளார்[1]. இக்கூறுகளுள் நிலம்[2], இனம்[3], சமயம்[4], மொழி[5] ஆகியவை இவ்வாய்வேட்டில் முன்னரே விளக்கிக்காட்டடப்பட்டுள்ளது. இந்நிலையில் திருவள்ளுவரும் கௌடலீயரும் கூறியுள்ள நாடு பற்றிய கருத்துக்கள் ஆய்வு செய்வதற்கு அடிப்படையாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## திருவள்ளுவரும் கௌடலீயரும்

கௌடலீயர் எழுதிய அர்த்த சாத்திரமும் (பொருள் நூல்), திருவள்ளுவர் எழுதிய பொருட்பாலும் நாடு பற்றிய கருத்துக்கள் பலவற்றைப் பேசுகின்றன. திருவள்ளுவர் பொருட்பாலில் கூறுகின்ற "படைகுடி கூழ்அமைச்சு, நட்புஅரண் ஆறும்"[6] என்னும் திருக்குறள் பகுதி முதற்கண் கருதத்தக்கதாகும். இவ்வாறு குறித்ததற்கேற்பப் பொருட்பாலில் படையியல், குடியியல், கூழியல், அமைச்சியல், நட்பியல், அரணியல் ஆகிய ஆறு இயல்களையும் திருவள்ளுவர் பொருட்பாலில் அமைத்துள்ளதோடு பொதுப்பட அரசியல் என்ற இயலையும் அமைத்துள்ளார். இவ்வியல்களினின்றும் திருவள்ளுவர் வழியில் நாடு என்பதற்குரிய பின்வரும் கூறுகள் கருதத்தக்கனவாகும்.

1. படைவலிமை பெற்றிருத்தல்
2. அறிவுடையோரைப் பெற்றிருத்தல்
3. குறைபாடில்லாத செல்வந்தரைப் பெற்றிருத்தல்
4. பல குழுக்கள் இல்லாதிருத்தல்
5. பொருளீட்டும் வாய்ப்பு
6. இறைப்பொருள் தருதல்
7. செல்வ வளம் நிறைந்திருத்தல்
8. நல்லாட்சி இருத்தல்

1. ATUL CHANDRA ROY, INTERNATIONAL RELATIONS, P . 143.
2. இவ்வாய்வேடு பக்.182,190,198 காண்க.
3. மேலது, பக்.168 - 245
4. மேலது, பக்.226 — 244
5. மேலது, பக். 11 — 70
6. மேலது, பக். 248

9. உள்நாட்டிலும் வெளிநாட்டிலும்நட்புநிலை அமைதல்
10. அச்சமின்றி வாழும் பாதுகாப்பைப் பெற்றிருத்தல்
11. உட்பகை இல்லாதிருத்தல்
12. அரசுக்குக் கட்டுப்படாமல் கொலை நிகழ்த்துவோர் இல்லாதிருத்தல்
13. பாதுகாப்பிற்கான அரண் கொண்டிருத்தல்
14. இயற்கை வளம் பொருந்தியிருத்தல்
15. பசியில்லாதிருத்தல்
16. நீங்காத பிணியில்லாதிருத்தல்
17. இன்ப வாழ்வு

## திருவள்ளுவரும் கௌடலீயரும்

படைவலிமை பெற்றிருத்தல் முதலான நாடு சார்ந்த கூறுகளைத் திருவள்ளுவரைப் போலக் கௌடலீயரும் பேசியுள்ளார்.

## படைவலிமை பெற்றிருத்தல்

எல்லா உறுப்புகளும் பொருந்தியதாக இடையூறுகளுக்கு அஞ்சாததாய் உள்ள வெற்றிதரும்படை அரசர்கள் செல்வங்கள் எல்லாவற்றிலும் சிறந்ததாகும் என்று வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்[7].

தன்மேல் எதிர்த்து வரும் போர்ப்படை எமன் சினந்து வருவதைப் போல் எதிர்க்கும் நிலையிலும் வெல்லும் தன்மையறிந்து எதிர்க்க வல்லதே படையாகும்[8]. அப்படையில் நிலைத்து நிற்கும் வீரர்கள் நிறைய பேர் இருந்தாலும் தாங்கும் தலைவர் இல்லாதிருந்தால் படை சிறப்பற்றதாகும்[9]. அது மட்டுமல்லாமல் கைவேலால் களிற்றை ஓட்டிவிட்டு வந்து தன் மார்பில் உள்ள வேலைக் கண்டு நகைக்கும் தன்மையுடையவனாகப் படைவீரன் இருத்தல் வேண்டும்[10] எனவும் வள்ளுவர் கூறுகிறார். அதாவது ஆற்றலுடைய படை, ஆற்றலற்ற படை, ஆற்றலுடைய வீரன் ஆகியவற்றைப் பற்றிக் கூறியுள்ளார்.

7. திரு.761
8. மேலது, 381
9. மேலது, 770
10.மேலது, 774

கௌடலீயா எசசெயலைச செயய எந்தெநதப் படையைப் பயன்படுத்த வேண்டுமெனவும்[11] படைத்தலைவன அமைததல்[12], படைத்தலைவன் அப்படைகளுக்குப் பயிற்சி அளித்தல்[13] ஆகியவற்றைப பற்றியும கூறியுள்ளார்.

இவ்வாறாக இருவரும படை ஆற்றலுடையதாக இருக்க வேண்டுமானால் படைத்தலைவன் வலிமை, படை வலிமை, படைவீரனின் வல்லமை ஆகியவற்றைக் கொண்டிருக்க வேண்டுமென்கின்றனர்.

## அறிவுடையோரைப் பெற்றிருத்தல்

திருவள்ளுவர், அரசியல் என்ற இயலில் அறிவுடைமை[14] என்ற அதிகாரத்தில் நாடு சிறந்த அறிவுடையோரைப் பெற்றிருத்தல் வேண்டும் என்ற கருத்தை வைத்துள்ளார். மேலும்,

> "தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்வுஇலாச்
> செல்வரும் சேர்வது நாடு"[15]

என்னும் திருக்குறளிலும் தக்கார் என்னும்போது அறிவுடையோரைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

அரசர்களுள் சிறந்தவன் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகியவற்றைக் கொண்டிருக்க வேண்டுமெனக் கூறுகிறார்[16].

செய்யும் செயலறிந்து செய்தற்குரியனவற்றைச் செய்தலிலும் துணிவாகத் தன் கருத்தைச் சொல்வதிலும் வல்லவனாகவும்[17] பகைவர்க்குத் துணையைப் பிரித்தும் தன்னுடையவர்களைக் காத்தும் பிரிந்தவர்களை மீண்டும் சேர்த்துக் கொள்வதிலும் வல்லவனாகவும் அமைச்சன் இருத்தல் வேண்டும்[18] எனவும் அறிவுறுத்தும் அறிவை அழித்து அதனை அறியாதவனாக அரசன் இருந்தாலும் அவனுக்குத் தேவையாக உள்ளனவற்றை எடுத்துக் கூறுதல் அமைச்சனின் கடமை[19] எனவும் வள்ளுவர் கூறியுள்ளார்.

கௌடலீயர் அரசுக்குரிய அங்கங்களாக அரசன், அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு ஆகியவற்றைக் கூறியுள்ளார்.[20] அரசு என்பது அரசன், அரசியல்

11. கௌட. பக். 774 - 780
12. மேலது, ப. 382
13. மேலது, ப. 1097
14. திரு. 421 - 430
15. மேலது, 731
16. மேலது, 381
17. மேலது, 634
18. மேலது, 633
19. மேலது, 635
20. மேலது, ப.718

ஆகிய இரண்டினையும் உள்ளடககியது எனவும் விளக்கப்பட்டுள்ளது.[21] வள்ளுவர் கூறியவாறே அரசன் ஆட்சி செய்யும் முறைமையினைத் திறம்பட நடத்துவதற்குத் தேவையான அங்கமாக அமைச்சரை அமைத்தலைப் பற்றிக் கௌடலீயர் கூறியுள்ளார்.[22]

அரசன் என்பவன் கொண்டிருக்க வேண்டியனவற்றைக் கூறுவதிலும் ஆட்சியைத் திறம்பட நடத்துவதற்குத் தேவையான அங்கங்களில் தலையானதாக அமைச்சரை அமைத்தல் வேண்டுமெனக் கூறுவதிலும் இருவரும் ஒன்றுபடுகின்றனர்.

## குறைபாடில்லாத செல்வந்தரைப் பெற்றிருத்தல்

பழியுள்ள இழிதொழில் செய்து பொருளீட்டுவது சிறப்பில்லாதது எனவும் அவ்வாறு வஞ்சனையால் ஈட்டிய பொருளைச் சேர்த்துவைத்தல் கூடாது[23] எனவும் அறவழியில் ஈட்டும் பொருளே சிறப்புடையதாகும்[24] எனவும் வள்ளுவர் கூறுகிறார்.

பிறர்பொருள் கவரும் கள்வர்க்குத் தண்டனை உண்டு[25] எனவும் தன் மகனோ பிறர் மகனோ எவராக இருந்தாலும் குற்றத்திற்குத் தகுந்தவாறு அரசனால் தண்டனை விதிக்கப்படுவதே மண்ணுலகையும் விண்ணுலகையும் காக்க வல்லதாகும்[26] எனவும் கௌடலீயர் கூறியுள்ளார். பழியில்லாமல் அதாவது குறைபாடில்லாத வழியில் பொருளீட்டல் வேண்டும் என்றும் எவர் தவறு செய்தாலும் அறவழியில் (குறைபாடில்லாத வழியில்) நீதி வழங்க வேண்டும் என்றும் கூறியுள்ளமை புலப்படுகின்றது.

பழியற்ற செயலின்மூலம் பொருளீட்டல் செய்தல், குறைவில்லாத அறச்செயல் செய்தல் ஆகியவற்றைப் புரியும் செல்வந்தர்களைக் கூறுவதில் இருவரும் ஒன்றுபட்டுள்ளனர்.

## பல குழுக்கள் இல்லாதிருத்தல்

ஒரு நாட்டிற்கு சிறுசிறு குழுக்கள் பலவாக அமைந்திருக்குமானால் ஒற்றுமை நிலவுவது அரியதாகும். பலப்பல குழுக்களும் பலப்பல கொள்கைகளைப் பேசி நாடு என்ற ஒருமைப்பாடு நிலவாமல் போக வாய்ப்புண்டு. எனவே திருவள்ளுவர் சிறந்த நாட்டில் பல குழுக்கள் இல்லாதிருத்தல் என்ற கருத்தைக் கூறியுள்ளார்.

21. கௌட. ப. 719
22. மேலது, ப. 725
23 திரு. 657
24. மேலது, 660
25. மேலது, 384
26. மேலது, 48

"பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்(து)அலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு"[27]

என்னும் குறளில் பல்குழுவும் பாழ்செய்யும் என்று எடுத்துக்காட்டியுள்ளார்.

பலருடைய பகையைத் தேடிக் கொள்பவன் பித்தனைவிட அறிவில்லாதவன்[28] எனவும் பகையை நட்பாகச் செய்துகொள்ளும் பெருந்தன்மையான பண்புடையவரிடம் உலகம் தங்கியிருக்கும்[29] எனவும் வள்ளுவர் கூறுகிறார். தன்னாட்டு நல்லவர் தீயவர் குழுக்களைக் காத்தல்[30] பகைவர்நாட்டு நல்லவர் தீயவர் குழுக்களைத் தன்வயப்படுத்தல்[31] எனக் கௌடலீயர் பலகுழுக்கள் இல்லாமலிருக்க அரசன் செய்யும் செயலைக் கூறுகிறார். பலகுழுக்கள் இல்லாமலிருப்பவனிடம் மக்களனைவரும் ஒன்றுபடுவர் என்னும் கருத்தில் இருவரும் ஒன்றுபட்டுள்ளனர்.

## பொருளீட்டும் வாய்ப்பு

"பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு"[32]

என்னும் குறளில் " பெரும்பொருளால் பெட்டக்க தாகி " எனப் பொருளீட்டும் வாய்ப்பு உள்ளதே சிறந்த நாடு என்னும் கருத்தைத் திருவள்ளுவர் பெற வைத்துள்ளார்.

பொருள்கள் வரும் வழியறிந்து உருவாக்குவதிலும் உருவாக்கியனவற்றைப் பாதுகாத்தல் செய்வதிலும் அவ்வாறு பாதுகாவல் செய்தனவற்றைப் பாகுபாடு செய்து செலவு செய்தலிலும் வல்லவன் அரசனாவான்[33] என வள்ளுவரும் அரண், சுரங்கம், அணை, காடு என்பனவற்றாலும் வாணிகத் தொழிலாலும் கிடைக்கும் ஊதியப் பொருள்களின் வருவாய்[34] நிலையை நாட்டுவருவாய்த் தலைவன் ஆராய்வான் எனக் கௌடலீயரும் கூறுகின்றனர். பொருள்களின் உருவாக்கத்தைப் பாதுகாத்தல் செய்யும் தலைவன் பற்றி இருவரும் ஒற்றுமைப்படச் சுட்டியுள்ளனர்.

27. திரு. 735
28. கௌட. ப. 873
29. மேலது, ப. 874
30. மேலது, ப. 74
31. மேலது, ப. 78
32. திரு.732
33. மேலது, 385
34. கௌட. ப. 386

## இறைப்பொருள் தருதல்

அரசனுக்குரிய இறைப்பொருளை அரசுக்கு வழங்கும் நிலையில் உள்ளதே நாடு என்பதை,

"பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்(கு)
இறைஒருங்கு நேர்வது நாடு"[35]

எனத் திருவள்ளுவர் கூறுகிறார்.

மன்னனுக்குப் பொருள் தேவை ஏற்படும்பொழுது தரவேண்டிய இறைப்பொருள் முழுவதும் தரவேண்டும் என வள்ளுவர் விளக்குகிறார்.[36] அதாவது வள்ளுவர் அரசனுடைய பொருள், கொடுக்கப்பட வேண்டிய பொருளெனச் சுட்டுகிறார். கௌடலீயர் அரசுக்குப் பொருள்வரும் வழிகளைப் பிரிவு செய்து எத்தனை பங்கு இறைப்பொருள் கொடுக்க வேண்டுமெனக் கூறுகிறார்.[37] அரசனுக்கு இறைப்பொருள் என்பது தரவேண்டிய ஒன்று என்பதில், இருவரும் ஒன்றுபட்ட கருத்தினையுடையவர்.

## செல்வ வளம் நிறைந்திருத்தல்

நாட்டிற்குரிய அழகுகளாக ஐந்தினைக் குறிப்பிடுகையில் 'செல்வம்' என்று செல்வ வளம் நிறைந்திருத்தலையும் நாட்டிற்குச் சிறந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

"பிணியின்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்(கு)இவ் வைந்து"[38]

என்னும் திருக்குறள் ஈண்டுக் கருதத்தக்கதாகும்.

கௌடலீயம் கூறும் நாட்டிற்குரிய தொழிலிடம் அமைத்தலும், பொன், மணி முதலியவற்றை உருவாக்கும் தொழில், உணவுப்பொருள் உண்டாக்கும் தொழில், விலைப்படுபண்டத் தொழில், நெய்தல் தொழில், இறைச்சித் தொழில் முதலிய தொழில்கள், செய்தலும் செல்வ வளம் நிறைந்திருத்தலைச் சுட்டுவனவாகும்.[39]

35. திரு. 733
36. மேலது, 733
37. கௌட. பக். 161 - 163
38. திரு. 738
39. கௌட. பக். 26 - 47

## நல்லாட்சி இருத்தல்

நல்ல அரசும ஆட்சியும இல்லாத நாடு பயனற்றதாகும் என்பதை,

"ஆங(கு)அமை(வு) எய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்துஅமை வில்லாத நாடு"[40]

என்னும் திருக்குறளில் வளளுவா குறிப்பிட்டுள்ளார். எனவே ஒரு நாட்டிற்கு நல்லாட்சி இருத்தல் தேவையென்று வலியுறுத்தலை உணரலாம்.

செய்த தவறுக்குத் தகுந்தவாறு ஆராய்ந்து அதற்கான காரணத்தை நீக்கிக் கொள்ளுமளவிற்குத் தண்டிப்பவனும்[41] அந்தணர் நூல்களின் அறத்திற்கும் முதன்மையாக உள்ள அற ஆட்சியைச்[42] செய்து குடிமக்களை அன்பால் அரவணைப்பவனும் ஆன அரசனை உலகமக்கள் சேர்ந்திருப்பர்[43] என வள்ளுவர் கூறுகிறார். அரசன் ஆட்சி செய்யும் முறைமையினையும் அவ்வாறு செய்யாவிடில் அரசு அழியும்[44] எனவும் இவ்வுலகம் அரசனது நீதியால் காக்கப்பட்டுத் தன்கடமையை(வருணாச்சிர தருமங்களை) மேற்கொண்டொழுகி வித்தைகள் மூன்றும் அதாவது வித்தைகள் என்பது பொருளுண்மையை ஆராயும் தருக்க நூல், இருக்கு, யசுர், சாம வேதங்கள், உழவு, வாணிகம், பசுக்காவல் என்ற தொழில்களைச் செய்தல் ஆகியவை அரசனது நீதியையே பின்பற்றியுள்ளன[45] எனவும் வலியவர்கள் மெலியவர்களைத் துன்புறுத்திய வாழ்க்கையை எதிர்த்தார்கள்[46] எனவும் கௌடலீயரும் கூறுகிறார். அன்பு செய்தல், அறநெறி தவறாதிருத்தல் ஆகிய அரச நியாயத்தில் இருவரும் ஒன்றுபட்டுள்ளனர். ஆனால் கௌடலீயர் வருணாச்சிர தர்மத்தைக் கடைப்பிடிப்பதையும் வள்ளுவர் அனைவருக்கும் முறை செய்வதையும் கூறுவர்.

## உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் நட்புநிலை அமைதல்

உட்பகை பற்றி வள்ளுவர் உட்பகை என்ற அதிகாரத்தில் விளக்கிக் காட்டியுள்ளார்.[47] வெளிப்பகை பற்றிப் பகைத்திறம் தெரிதல் என்ற அதிகாரத்தில் விளக்கிக் காட்டியுள்ளார். உட்பகை என்பது உள்நாட்டவர் பகையையும் வெளிப்பகை என்பது வெளிநாட்டவர் பகையையும் குறிப்பதாகும்.

40. திரு. 740
41. மேலது, 561
42. மேலது, 543
43. மேலது, 544
44. மேலது, 725
45. கௌட. ப. 37
46. மேலது, பக். 74 - 76
47. திரு. 881 - 890

பொதுவாக உடபகையாயினும வெளிபபகையாயினும் அது ஒரு நாட்டு நலனுக்குத் தீங்கானதாகும். எனவே அரசினா, பகையை நட்பாக்கிக் கொள்ளலே நலம் பயப்பதாகும். உட்பகையைக கொடை செய்து தனக்கு நட்பாக்கிக் கொள்ளலாம் என்பதை வள்ளுவா,

"கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்துஇருந்து
மாணாத செய்வான் பகை"[48]

என்னும் குறளில் கூறியுள்ளாா.

வெளிப்பகையை நட்பாக்கிக் கொள்ளுதலைத் திருவள்ளுவர்,

"பகைநட்பாக் கொண்டுஒழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு"[49]

எனக் கூறியுள்ளார். "பகைநட்பாக் கொண்டுஒழுகும்" என்பது இங்குக் கருதத்தக்கதாகும்.

"பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு"[50]

என்று வள்ளுவர் கூறிய குறளும் எண்ணுதற்குரியது. இதனுள், 'பிரித்தல்' என்பது ' வெளிப்பகையாக உள்ளவர்க்குத் துணையானவரை அவ்வெளிப்பகைவரினின்றும் பிரித்தல் ஆகும். ' பேணிக்கொளல் ' என்பது அவ்வாறு பிரித்தோரைப் போற்றிக் காத்தல் ஆகும். பிரிந்தார்ப் பொருத்தல் என்பது அவ்வாறு காத்தவரைத் தம்மோடு மீண்டும் சேர்த்துக் கொள்ளல் ஆகும். இவ்வாறு வெளிநாட்டில் நட்புநிலை ஏற்படுமாறு செய்தலைப் பற்றி வள்ளுவர் கூறியுள்ளார்.

வெளிப்பகையை நட்பாக்கிக் கொள்வது பற்றித் திருவள்ளுவர்,

"நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல்"[51]

48. திரு. 867
49. மேலது, 874
50. மேலது, 633
51. மேலது, 679

எனக் கூறியுள்ளார். நண்பர்களுக்கு உதவி செய்வதைக் காட்டிலும் வெளிப்பகையாக உள்ளவர்களைப் பொருந்துமாறு சேர்த்துக் கொள்ளல் செய்யத்தக்கதாகும் என்று வெளிநாட்டிலும் நட்புச் செய்தலைத் திருவள்ளுவர் முக்கியமானதாகக் கருதியுள்ளார்.

உட்பகை, துன்பம் நிறைந்தது எனவும் வெளிப்பகை, அச்சம் நிறைந்தது எனவும் உட்பகை, வெளிப்பகை இரண்டையும் களைதல் வேண்டும் எனவும், உட்பகையை இன்சொல், கொடை முதலியவற்றின் மூலமும் வெளிப்பகையை வன்முறையின் மூலமும் களைதல் வேண்டும் எனவும் கௌடலீயம் சுட்டியுள்ளது.[52]

உள்நாட்டில் உள்ள தீயவர்களையும் வெளிநாட்டில் உள்ள தீயவர்களையும் தன்வயப்படுத்தும் நட்பு நிலையை அரசன் மேற்கொள்ள வேண்டுமெனக் கௌடலீயம் கூறியுள்ளது.[53] அதாவது உள்நாடு, வெளிநாடு ஆகிய இரண்டிலும் பகைமையின்றி நட்புநிலையை அமைத்துக்கொள்ள வேண்டிக் கௌடலீயர் கூறியுள்ளார் எனலாம்.

## அச்சமின்றி வாழும் பாதுகாப்பைப் பெற்றிருத்தல்

"பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்(கு)இவ் வைந்து"[54]

என்னும் குறளில் இவ்வேமம் என்பது ஒரு நாடானது அச்சமின்றி வாழும் பாதுகாப்பைப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதை உணர்ததுவதாகும். நாட்டில் வேற்றுநாட்டு மக்களைக் கொண்டு வந்தும் மிகுதியான மக்களை வேறிடங்களில் வைத்தும் சீரமைப்பதோடு சிறுசிறு கிராமங்களில் உழவர்களை அமர்த்தி நூறு வீடுகளுக்கும் ஒன்றுக்கொன்று பாதுகாப்பாக இருக்குமாறும் அமைத்தல் வேண்டும் எனவும் கிராமம் முடியுமிடங்களில் ஆறு, மலை, அணை, காடு, பள்ளம் முதலியனவற்றையும் இலந்தை, இலவம், வள்ளி, பால் முதலிய மரங்களையும் அமைத்தல் வேண்டும்[55] எனவும் அரசன் ஆட்சி செய்யும் முறைமையறிந்து செய்ய வேண்டும்[56] எனவும் கௌடலீயர் கூறியுள்ளார். அதாவது அச்சமின்றி வாழப் பாதுகாவல் அமைய வேண்டியமை பற்றிக் கூறியுள்ளார் எனலாம். கௌடலீயர் அச்சமின்றி வாழப் பாதுகாவல் செய்ய வேண்டுமென்கிறார். திருவள்ளுவரும் மக்களை முறைசெய்து மன்னவன் பாதுகாக்க வேண்டுமெனவும்[57] அவன் ஆட்சி செய்யும் முறையறிந்து செய்ய வேண்டுமெனவும் கூறியுள்ளார்.

52..கௌட. பக். 1006 - 1013
53. மேலது, பக். 661 - 672
54. திரு. 738
55. கௌட. ப. 128
56. மேலது, ப. 725
57. திரு. 388

இருவரும் குடிமக்களுக்குப் பாதுகாவல் செய்ய வேண்டுமென்பதில் ஒன்றுபடுகின்றனா்.

## உட்பகை இல்லாதிருத்தல்

உட்பகை ஒரு நாட்டிற்கு மிகவும் கொடியதென்பதை வலியுறுத்துகின்ற வகையில் உட்பகை என்னும் அதிகாரத்தை எடுத்துரைத்துள்ளாா். இந்நிலையில் ஒரு சிறந்த நாட்டிற்கு உட்பகை இல்லாதிருத்தல் வேண்டுமென்பதை உணரலாம். மேலும்,

"பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்துஅலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு"[58]

என்னும் குறளில் ஒரு நாடு உட்பகை இல்லாதிருத்தல் என்பதனை விளக்கியுள்ளாா்.

அக உடம்பாடு இல்லாதவருடன் வாழ்தல் குடிசையில் பாம்புடன் வாழ்தல்[59] எனவும் தவறான வழிமுறை சொல்லும் அமைச்சனைவிடப் பகைவா் கோடிபோ் இருப்பது நன்மை தரும்[60] எனவும் உட்பகை பற்றியும் வாள் போன்ற வெளிப்பகைக்கு அஞ்சத் தேவையில்லை எனவும் சுற்றம் போன்ற உட்பகைக்கு அஞ்ச வேண்டும் எனவும் வள்ளுவா் கூறியுள்ளாா்.

கௌடலீயரும் பகை என்பதை உட்பகை, வெளிப்பகை என இரண்டாகப் பிரிவு செய்து கூறியுள்ளாா். உட்பகை செய்வோா் அமைச்சா், வேள்வி செய்வோா் எனவும் அதனை இன்சொல், கொடை ஆகியவற்றால் களையலாம் எனவும் வெளிப்பகை செய்வோா் எல்லைக் காவலா் அயலவா் எனவும் இவா்களைத் தண்டித்தலின் மூலம் களைதல் வேண்டும் எனவும் வெளிப்பகை பாம்பைக் கண்டதைப் போல் அச்சம் தந்தாலும் உட்பகை அதனைவிடத் துன்பம் தருவதாகும் எனவும் கூறியுள்ளாா்.[61]

வள்ளுவத்தில் பகைவனை மனமாற்றம் அடையச் செய்யும் வழிமுறைகளைக் கையாளுதல்[62] வேண்டுமெனவும் கௌடலீயத்தில் உயிா்களை, பகைநாட்டினை அதன் அங்கங்களை அழிப்பதற்கும் நம்பிக்கையற்ற நண்பரைக் கொல்வதற்கும் நஞ்சிட்டுக் கொல்லல், களைதல் என வன்வழிமுறைகளைக் கையாளுதல்[63] வேண்டுமெனவும் சுட்டப்பட்டுள்ளன. இருவரும் பகைவனை அழிக்க வேண்டுமென்பா். அவா்கள் மேற்கொள்ளும் வழிமுறைகளில் மாற்றம் கொண்டுள்ளனா்.

58. திரு. 735
59. மேலது, 890
60. மேலது, 636
61. கௌட. பக். 1006 - 1013
62. திரு. 851 - 860, 871 - 880
63. கௌட. பக். 661 - 675

## அரசுக்குக் கட்டுப்படாமல் கொலை நிகழ்த்துவோர் இல்லாதிருத்தல்

"பலகுழுவும பாழ்செய்யும் உட்பகையும் வேந்துஅலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு"[64]

என்னும் திருக்குறள் கருதத்தக்கது. இதனுள் "வேந்துஅலைக்கும் கொல்குறும்பு" என்று கூறப்படுவோர் அரசுக்குக் கட்டுப்படாமல் கொலைநிகழ்த்துவோர் ஆவர். இத்தகையோர் இல்லாதிருததலே சிறந்த நாட்டிற்கு ஏற்புடையதாகும் என்பதைத் திருவள்ளுவர் உணர்த்தியுள்ளார்.

கௌடலீயர் நல்லோரல்லாத குழுவும் கூடித்தொழில் செய்யாமல் அரசனுக்குத் தீங்கு செய்யும் எண்ணம் உடைய கூட்டமும் இல்லாதிருத்தல் வேண்டுமென நாட்டிற்கு வேண்டாதனபற்றிக் கூறியுள்ளார்[65]

நாட்டிற்குத் தீங்கு செய்வோர் வேண்டாமென இருவரும் கூறுகின்றனர்.

## பாதுகாப்பிற்கான அரண் கொண்டிருத்தல்

அரண் பற்றிப் பேசுவதற்காக வள்ளுவர் அரண் என்னும் அதிகாரத்தை வகுத்துள்ளார்.[66] அரண் என்பது பகைவரை நாட்டிற்குள் ஊடுருவ விடாமல் இயற்கையாகவோ செயற்கையாகவோ அமையும் காப்புப் பகுதியாகும்.

"மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்
காடும் உடையது அரண்"[67]

என்னும் குறளில் கூறப்பட்டுள்ள நீரரண், மண்ணரண், மலையரண், காட்டரண் என்னும் இவை இயற்கை அரணாகக் கொள்ளத்தக்கனவாகும்.

வள்ளுவர் அரண் என்பது தெளிநீர், வெட்டவெளி நிலம், மலை, நிழல்தரும் காடு ஆகியவற்றைக் கொண்டிருக்க வேண்டும்[68] எனவும் அவ்வரண் உயரம், அகலம், உறுதி, பகைவரால் அழிக்க இயலாத அருமை ஆகிய நான்கும் அமைந்திருப்பதே

64. திரு. 735
65. கௌட. பக். 529, 1128.
66. திரு. 741 - 750
67. மேலது, 742
68. மேலது

அரணாகும்[69] எனவும் அவற்றின் பயனையும் கூறுகிறார்.

கௌடலீயரும் இயற்கையிலே உள்ள நீர், மலை, நிலம், காடு ஆகிய அரண்களைக் கூறியுள்ளதோடு அரண் கட்டுதல், பயன்படுத்தல், அரணுக்குள் அமைந்த மக்களின் வாழ்க்கை என்பனவற்றையும் கூறுகிறார். நகரம் அமைக்கும்பொழுது மனுநூலில் கூறியுள்ளவாறு ஆறுகள் கலக்கும் நிலப்பரப்பிற்குத் தகுந்த பொருட்செலவு செய்து அரண்மதிலை அமைத்தல் வேண்டும். அவ்வாறு அமைத்த அந்நகரத்தைச் சுற்றி அகழிகளையும் அவற்றிலிருந்து தொலைவாகத் தேர்ச்செலவிற்குத் தகுந்தவாறு, மேற்பரப்பினையும் பனியைப் போன்ற அடிப்பகுதியையும் முரசு குரங்குத் தலையின் வடிவத்தைக் கொண்ட நுனிப்பகுதியையும் பெற்று இருக்குமாறு பெரிய கற்களைக் கொண்டு கல்லுருவத்தில் மதிலை அமைத்தல் வேண்டும்[70] எனக் கூறுவது வள்ளுவரின் அரண் அமைதலோடு ஒன்றுபட்டுள்ளது.

## இயற்கை வளம் பொருந்தியிருத்தல்

"இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்(கு) உறுப்பு"[71]

"நா(டு)என்ப நாடா வளத்தன நா(டு)அல்ல
நாட வளம்தரு நாடு"[72]

முயற்சியின்றித் தேடாமலே கிடைக்கக்கூடிய இயற்கை வளம் பொருந்தியிருத்தலே சிறந்த நாட்டிற்குரிய பண்பாகும் என்று கூறியுள்ளார். மேலும், ஊற்று நீர், மழைநீர் ஆகிய இருவகை நீர்வளமும் மலைவளமும் மலையினின்று ஆறாக வரும் நீர்வளமும் நாட்டிற்கு இன்றியமையாத இயற்கை வளமென்று திருவள்ளுவர் உணர்த்தியுள்ளார்.

நாட்டில் கிராமங்கள் அமைத்து அக்கிராமம் முடியுமிடங்களில் ஆறு, மலை, அணை, காடு, பள்ளம் முதலியனவற்றையும் இலந்தை, இலவம், வள்ளி, பால் முதலிய மரங்களையும் அமைத்தல் வேண்டும் எனவும் அதுமட்டுமல்லாமல் கிராமங்களுக்கான தலைநகரை அரண்களோடு உருவாக்குதல் வேண்டும் எனவும் பயிர் செய்யாதவர்களிடமிருந்து நிலங்களைக் கைப்பற்றிப் பயிர் செய்பவர்களிடம் கொடுத்தோ அல்லது கிராம அதிகாரிகள்,

69. திரு. 743
70. கௌட. பக். 140 - 148
71. திரு. 737
72.. மேலது, 739

வாணிகர்கள் ஆகியோர் உழவு செயயலாம் எனவும் அப்படிச் செய்யவில்லையென்றால் அவ்வருவாயைச சரி செய்யும் பொருட்டு உழாதவர்களுக்குக் கூலம், பசு, பொருள் ஆகியவற்றைக் கொடுகக அவாகள அதைப பயன்படுத்திக் கொண்டு அரசனிடம் மீண்டும் அவற்றைக் கொடுத்தல் வேண்டும் எனவும் பொருள்வளம் உருவாக்குதல் பற்றியும் கௌடலீயர் கூறியுள்ளார்.[73] மேலும் அரண் அமைத்தல், அரணுள் அமைத்தல் ஆகியவற்றில் இயற்கையில் அமைந்த நீர்வளம், மலைவளம் ஆகிய அரண்களை நாட்டிற்குத் தகுந்தவாறு அமைத்துக் கொள்ளல் வேண்டுமெனவும் அவர் கூறியுள்ளார்.[74]

## பசியில்லாதிருத்தல்

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா(து) இயல்வது நாடு"[75]

என்னும் திருக்குறள் கருதத்தக்கதாகும். சிறந்த நாட்டில் பசியில்லாதிருக்க வேண்டுமென்பதை, "உறுபசி--சேராது இயல்வது நாடு" என்று குறித்தமையால் உணரலாம்.

உற்பத்தி செய்யும் தொழிற்சாலை, சந்தனம் முதலிய பயன்தரும் மரங்கள் நிறைந்த காடு, பசுமந்தை, வாணிகத் தொழிற்சாலை, பல பண்டங்களை விற்குமிடம் போன்றவை நாட்டு மக்களுக்காக அரசன் உருவாக்க வேண்டுமெனக் கௌடலீயர் எடுத்துரைத்துள்ளார்.[76]

வள்ளுவர், பசியில்லாமலிருப்பதே நாடாகும் எனச் சுருங்கக் கூறியிருப்பதை, நாட்டு மக்கள் பசியில்லாமலிருக்க நாட்டில் உருவாக்க வேண்டிய உணவுப் பொருள்கட்கான தொழிற்சாலையும் அவை விற்குமிடமும் உருவாக்கப்படல் வேண்டுமெனக் கௌடலீயர் விளக்கமாகக் கூறியுள்ளார்.

## நீங்காத பிணியில்லாதிருத்தல்

சில நோய்களை நீக்க முடியாமல் அவை உலவுமானால் அந்நாடு

73. கௌட. பக். 128 - 140
74. மேலது, பக். 140 - 154
75. திரு. 734
76. மேலது, 131, 132

முன்னேற்றமடையாது. நீக்கவியலாப் பிணியில்லாததே சிறந்த நாடாகும்.

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு"[77]

என்னும் திருக்குறளில் "ஓவாப் பிணியும் ....... சேராது இயல்வது நாடு " என்று குறித்தமையால் ஒரு சிறந்த நாட்டில் நீங்காத பிணியில்லாதிருத்தல் வேண்டும் என்பதை உணரலாம்.

நோயுற்றவர், துன்புறுவோர் முதலானவர்களை அரசன் பாதுகாத்தல் வேண்டுமெனக் கௌடலீயம் சுட்டியுள்ளது.[78]

திருவள்ளுவர் பிணியில்லாதிருத்தல் வேண்டுமெனவும் கௌடலீயர் பிணியுற்றோரைப் பாதுகாத்தல் செய்ய வேண்டுமெனவும் சுட்டியுள்ளமை நோக்கத்தக்கது.

## இன்ப வாழ்வு

"பிணியின்மை செல்வம் விளை(வு)இன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்(கு)இவ் வைந்து"[79]

வாழ்க்கையின் முடிந்த குறிக்கோளே மக்களின் இன்ப வாழ்வாகும். எல்லா உயிர்களும் இன்பத்தையே அவாவி நிற்பனவாகும். எடுத்துக் காட்டிய இத்திருக்குறளில் இன்ப வாழ்வு ஒரு நாட்டிற்கு அழகு தருவதாகும் என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

அரசன் ஒழுக வேண்டிய நெறிமுறைகளையும் நாடமைத்தலையும் அந்நாட்டில் நடத்தக் கூடிய அறநிலையாட்சியையும் அதற்கு இடையூறாக உள்ளவற்றை நீக்குதலையும் போர் பற்றிய செய்திகளையும் கௌடலீயம் சுட்டியுள்ளது.[80] அதாவது அரசனுக்கும் அரசாட்சிக்கும் தேவையானவற்றைக் கூறியுள்ளபடி ஆட்சி செய்தால் மக்கள் இன்ப வாழ்வைப் பெறுவர் என்ற பொருள்நோக்கில் கூறியுள்ளமை உணரலாம்.

77. திரு. 734
78. கௌட. ப. 133
79. திரு. 738
80. கௌட. பொருணூல் பக். 1–1230

## சங்க இலக்கியம்

படைவலிமை பெற்றிருத்தல் முதலிய நாடு என்பதற்குரிய கூறுகள் சங்க இலக்கியங்களில் பயின்று வருதல் பின்வருமாறு ஆராயப்பட்டுள்ளது.

### படைவலிமை பெற்றிருத்தல்

"மதயானைகளைக் கொண்ட கரிகால் வளவனே, போரில் எதிர்நின்றவரைக் கொன்று நினது வலிமையால் வென்றவனே"[81] என்னும்போது படைத்தலைவன் வலிமை சுட்டப்பட்டுள்ளது.

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பவனின் படைவலிமையைக் குறுங்கோழியூர் கிழார் பாடியுள்ளார். வேற்று நாட்டரசர் ஏவல் செய்யத்தக்க நினது வலிமையைப் புகழ்ந்து வாழ்த்த வந்தேன். மேகக்கூட்டம் என்னும்படியான பல தோலால் ஆன கருவிகள் மலையென நினைத்துத் தேனினம் தங்கும் யானைப் படை ஆகியன எதிர்நாட்டரசர் அஞ்சும்படி பெருத்தும் கடல் எனக் கருதி மேகம் நீரை முகக்க மேற்கொள்ளும் தானைப் படை, இடியென முழங்கும் முரசு ஆகியவற்றை[82] அரசன் கொண்டிருந்தான்.

பகைவரால் சூழப்பட்டுள்ள படையிலுள்ள வீரன் எதிர்ப்படை நோக்கி வேலேந்திச் 'செல்லும்பொழுது அவனைத் தடுத்து நிறுத்த இயலாதவாறு கன்றை விரும்பும் பசுவைப் போல் முன்னோக்கிச் சென்றானெனப் படைவீரனின் வலிமை[83] எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

### அறிவுடையோரைப் பெற்றிருத்தல்

வடவெல்லை இமயம், தென்னெல்லை குமரி, கிழக்கெல்லை கீழ்க்கடல், மேற்கெல்லை கடல் என்றமையும் பேரிடத்தில் புகழுடன் விளங்கும் உன்னாட்சியில் அறம் விளங்க வேண்டும். நின் திறம் சிறக்க வேண்டுமெனப் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் வாழ்த்துகிறார். அதாவது " நின் திறம் சிறக்க!"[84] எனக் கூறியது, அரசன் கொண்டிருக்க வேண்டிய அறிவுடையோரையும் அவர்தம் திறமையையும் பெற்றுப்பொலிதலைச் சுட்டுவதெனலாம்.

81. புறம். 66 : 2 - 4
82. மேலது, 17 : 31 - 41
83. மேலது, 275
84. மேலது, 6 : 1 - 10

நாலை கிழவன் என்ற பாண்டிய மறவன் பாண்டியனுக்குப் படை வேண்டும்பொழுது படை வாளுதவியும் செயலாற்றுவதற்குத் தேவையான அறிவுடையோரையும் அறிவாற்றலையும் வழங்கியும் வேந்தனுக்கு வேண்டியவற்றையெல்லாம் தருபவனாவான்.[85]

தொண்டைமான் இளந்திரையனின் நட்பு வேண்டிவந்த வேந்தர்களுக்கு அரசாட்சியின் சிறப்பினைப் பற்றிச் சில அறிவுரைகள் கூறினான். "உருளையை ஒழுங்காகக் கோத்துச் செய்யப்பட்ட சகடத்தைச் செலுத்துவோன் முறையறிந்து செலுத்தினால் அது துன்பம் தராது இனிதாகச் செல்லும். அவ்வாறே அரசனும் ஆட்சியை முறையறிந்து செலுத்தினால் நல்லாட்சி அமையும். செய்யவில்லையென்றால் அவ்வாட்சி நாள்தோறும் பகையாகிய சேற்றிலே அழுந்தி மிகுந்த துன்பத்தை மேன்மேலும் உண்டாக்கும் என்னும் போது அரசன் ஆட்சி செலுத்தும் முறையை அறியவில்லையென்றால் நாளும் பகை உண்டாகித் தனக்கும் தன்னாட்டவர்க்கும் மிகப் பல துன்பம் உண்டாகும் என்னும் பொருள்படச் சுட்டப்பட்டுள்ளது.

" மழை பொய்யாமல் பெய்து வளம்தரும் மோகூரினைப் பழையன் ஆட்சி செய்தான். அவ்வாட்சியில் நலந்தரும் நான்மொழிக்கோசர் நாற்பெருங்குழுவினர் ஆகியோர் அவையில் இருந்தனர்." ஈண்டு மன்னன் ஆட்சியில் நாடு சிறப்பதற்குத் தேவையான அறிவுடையோர் ( சான்றோர் ) அவையில் இருந்து ஆலோசனை கூறி அரசனை வழி நடத்திச் சென்றுள்ளனர் என்பதால் அரசாட்சியில் தேவையான அறிவுடையோர் இருந்தமை புலனாகிறது. பின்வரும் பாடலடிகள் கருதத்தக்கன.

"மழை ஒழுக்(கு) அறாஅப் பிழையா விளையுள்
பழையன் மோகூர் அவையகம் விளங்க
நான் மொழிக் கோசர் தோன்றி யன்ன
தாமமே எந் தோன்றிய நாற்பெருங்குழு"[86]

மேலே கூறியவற்றில், அறிவுடையோர் அரசாட்சிக்குத் தேவையான அறிவாற்றலை வழங்கியுள்ளனர் என எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

85. புறம். 179 . 5 - 8
86. மது. 507 - 510

## குறைபாடில்லாத செல்வந்தரைப் பெற்றிருத்தல்

"வேந்துதரு விழுக்கூழ் பரிசிலர்க் கென்றும்
அருகா தீயும் வண்மை
உரைசா னெடுந்தகை யோம்பு மூரே"[87]

என்னும் பாடலடிகளில் தனக்குப் பகைவேந்தர் கொடுக்கும் பொருளைப் பரிசில் வேண்டி வருபவர்களுக்குக் குறையாது கொடுக்கும் புகழுடைய தலைவன் என்னும்பொழுது அரசன் நெறிமுறையோடு ஈட்டிய பொருளைத் தன்னை வேண்டி வருபவர்களுக்குக் கொடுத்து அவர்களைப் பாதுகாத்தனன் என்பதுணரலாம்.

பரிசில், வழங்கும் செல்வப்பகைவரை வென்றதால் கிடைத்த பொருளேயாம். சோழன் நலங்கிள்ளியின் செல்வம் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று செய்வதற்கு உதவும்[88] என்னும்போது குறைபாடில்லாத செல்வத்தையுடைய செல்வந்தன் எனக் கூறப்பட்டுள்ளது.

## பல குழுக்கள் இல்லாதிருத்தல்

"முழங்கும் கடலால் சூழப்பட்ட பரந்த பெருநிலப்பரப்பைத் தமது முயற்சியால் பெற்றுத் தம் புகழை நிலைநிறுத்தி ஆண்ட வலியோர் வழித் தோன்றியவன்" என்னும்போது பல குழுக்களாக இல்லாமல் பாரதநாடு முழுமையும் ஒருசேர முன்னோர்கள் ஆண்டமை போல நீயும் ஆள வேண்டும் என்ற எண்ணம் கொண்டமை புலனாகின்றது. இதனை,

"முழுங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்துபட்ட வியன் ஞாலம்
தாளிற் றந்து தம்புகழ் நிறீஇ
ஒருதா மாகிய வுரவோ ரும்பல்"[89]

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

87. புறம். 320 : 16 - 18
88. மேலது, 28 : 16 - 18
89. மேலது, 18 : 1 - 4

### பொருளீட்டும் வாய்ப்பு

பகைவரை வென்று அவர்களது ஆநிரையைக் கைப்பற்றிப் பிறர்க்குக் கொடுத்தான்[90] எனவும் உவர் நிலத்தில் விளையும் உப்பை எடுத்துக்கொண்டு நீண்ட தூரம் உமணர்கள் செல்வார்கள் எனவும் சேரிகள் தோறும் நெல்லையும் உப்பையும் சமமான விலையுடன் விற்பார்கள்[91] எனவும் சுட்டப்பட்டுள்ளதால் வாணிபம், போர் ஆகியவற்றால் பொருளீட்டியமை புலனாகியுள்ளது.

### இறைப்பொருள் தருதல்

வேந்தன் இறைப்பொருளைப் பெற்றால், அந்நாடு கோடிப் பொருளைப் பெற்று வாழும். எனவே இறைப்பொருள் என்பது வேந்தனுக்குத் தரவேண்டிய ஒன்றாகும்[92] என்று கூறப்பட்டுள்ளது.

### செல்வ வளம் நிறைந்திருத்தல்

சோழன் நலங்கிள்ளியின் நாட்டில், வேலிப்புறத்திலுள்ள விலங்குகளுக்கு நன்மை கருதி அக்கரும்புத் தோட்டத்திலுள்ள கரும்பு கழையைப் பிடுங்கி எறிய அது குளத்தில் உள்ள தாமரைப் பூக்களின்மீது வீழ்ந்து சிதறியது கூத்தர் ஆடும் களத்தைப் போலிருந்தது எனவும் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றினையும் செய்யவல்லது சோழன் நலங்கிள்ளியின் செல்வம் எனவும் விளக்கப்பட்டமை[93] நோக்கத்தக்கது.

### நல்லாட்சி இருத்தல்

மோசிகீரனார் பாடலில் "உலகத்திற்கு (நாட்டிற்கு) அரசன் உயிராவான். நெல்லும் உயிரல்ல. நீரும் உயிரல்ல. அரசனே உயிராவான். மக்களைக் காத்தல் அரசனின் கடமையாகும்." இங்கு மக்களைக் காக்கக் கூடியது நெல்லும் நீரும் அல்ல. அரசனின் உயிரே அதாவது அரசனின் நல்லாட்சியே மக்களைக் காக்கும் என்பது உணர்த்தப்பட்டுள்ளது.[94]

"விசும்புற வோங்கிய வெண்குடை
முரசுகெழு வேந்தே ரரசுகெழு திருவே"[95]

90. புறம். 257 : 7 - 13
91. அகம். 390 : 1 - 9
92. புறம். 184 : 5, 6
93. மேலது, 28 : 11 - 17
94. மேலது, 186
95. மேலது, 75 : 11-12

மேற்கூறிய பாடலடிகளில் விண்ணளவிற்கு உயர்ந்த வெண்குடையினையும் முரசினையும் உடைய அரசாட்சி என்று சிறப்பான நல்லாட்சி சுட்டப்பட்டுள்ளது என்பது அறநெறியுடன் கூடிய அரசாட்சி நடத்தலைக் குறிக்கின்றது.

## உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் நட்புநிலை அமைதல்

சோழன் நலங்கிள்ளியை எதிர்ப்பவன் பனம்பூச் சூடிய சேரனும் அல்லன் என்றும் வேப்பந்தார் அணிந்த பாண்டியனும் அல்லன் என்றும் நலங்கிள்ளியோடு போர் செய்த நெடுங்கிள்ளியினுடைய கண்ணியும் ஆத்திப் பூவால் கட்டப்பட்டதே என்றும் அதனால் அவர்களில் ஒருவர் தோற்பினும் தோற்பது அவர்தம் குடியே என்றும் உள்நாட்டில் அமைய வேண்டிய நட்பு நிலை எடுத்துக் கூறப்பட்டுள்ளது.[96]

"பிட்டனின் வெற்றி வேலும் அவனுடைய தலைவனான பெருங்கொடை வழங்கும் கோதையும் கோதையைப் பகைத்த பகைவேந்தரும் நெடிது வாழ்க" என வடமவண்ணக்கன் தாமோதரனார் வாழ்த்தினார் எனச் சுட்டப்பட்டமையால்[97] பகைவராகிய வெளிநாட்டினரிடத்தும் நட்புநிலை அமையவேண்டி விரும்பிக் கூறியுள்ளமை உணரலாம்.

## அச்சமின்றி வாழும் பாதுகாப்பைப் பெற்றிருத்தல்

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரந் சேரல் இரும்பொறை நாட்டின் மண்ணைக் கருவுற்ற மகளிர் உண்ணுவர் எனவும் பகைவர் உண்ணார் (கைப்பற்றார்) எனவும் அம்பு தங்கும் காவலையுடைய அரணும் அறம் பொருந்திய செங்கோலாட்சியும் தீய நிமித்தத்திற்குரிய புதுப்புள் வரினும் பழைய புள் போகினும் அவற்றால் நடுக்கமறியாப் பாதுகாவலையுடையது அவன் நாடு எனவும் சுட்டப்பட்டமையாலும்[98] போரின்கண் வேந்தன் தன் போர் வீரர்களுக்கு ஏமமாக அதாவது அரணாக நின்று பகைவரை வெற்றி கொண்டவன் என்று சுட்டப்பட்டமையாலும்[99] நாட்டில் நிகழக் கூடிய வறுமை முதலியவற்றிலிருந்தும் நாட்டைக்காக்கும் அதாவது குடிமக்கள் அனைவருக்கும் பாதுகாவலைச் செய்யும் பாதுகாவலனாக வேந்தன் சுட்டப்பட்டுள்ளான்.

96. புறம். 459 : 3 - 7
97. மேலது, 172 : 8 - 10
98. மேலது, 35 : 13 - 34
99. மேலது, 178 : 6 - 11

## உட்பகை இல்லாதிருத்தல்

கற்புக் காலததுப பிரிவிடை வருந்திய தலைவி கூறுவதாக அமையும் பாடலில் தாய், "மன்னன் ஆதன் வாழ்க, வேந்தன் பகை நீங்குக என்றும் பலகாலம் வாழ்க" என்று விரும்பினாள்.

ஈண்டு "வேந்துபகை தண்ிக" என்னும்போது வேந்தின் பகை (உட்பகை முதலான) இல்லாமலிருத்தல் வேண்டும். அதாவது பகை இல்லாமலும் பகையிருப்பின் நீங்கியும் மன்னன் ஆட்சி செய்ய வேண்டும் என்பது அறிவுறுத்தப்பட்டுள்ளது. இது,

> "வாழி யாதன் வாழி யவினி
> வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
> என வேட்டோளே"[100]

எனச் சுட்டப்பட்டுள்ளது.

சோழநாட்டு வேந்தன், பாண்டியநாட்டு வேந்தன் ஆகிய இருவரையும் கண்ட காவிரிபூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், அவர்கள் இருவரும் நட்புக் கொண்டு பிரியாமலிருந்தால் உலகம் முழுமையும் அவர்களிடம் இருக்கும் எனவும் அவர்கள் இருவரும், ஒருவர்க்கு ஒருவர் உதவி செய்து வாழ வேண்டும் எனவும் அவர்களிடையே புகுந்து பிரிக்கும் அயலவரின் சொற்களைக் கேளாது இணைந்திருந்தால் வெற்றிமேல் வெற்றியை அடைவார்கள்[101] எனவும் கூறுவதால் நட்புக் கொண்டு உயர உட்பகை இல்லாமலிருக்க வேண்டும் என்பதை உணர்த்தியுள்ளார்.

## அரசுக்குக் கட்டுப்படாமல் கொலை நிகழ்த்துவோர் இல்லாதிருத்தல்

நீர் இல்லாத நெடிய மூங்கில்கள் உள்ள காட்டில் கொடிய விற்கொண்டு கொலைத் தொழில் செய்பவர்கள் அவ்வழியே செல்பவர்களை அழித்தும் கொள்ளையிட்டும் உண்டனர். அவ்வாறு மலை வழியில் பறிக்கும் பகையாயினும் எப்பகையாயினும் அரசன் போக்குவான்[102] என்னும் போது அரசுக்குக் கட்டுப்படாமல் கொலை நிகழ்த்துவோர்

100. ஐங். 6
101. புறம். 72
102. மேலது, 136 : 11 - 19

இல்லாதிருத்தல் வேண்டுமென்ற எண்ணம் கொண்டமை புலனாகிறது எனலாம்.

## பாதுகாப்பிற்கான அரண் கொண்டிருத்தல்

"மலையாகிய வேலி, நிலவு போன்ற மணலையுடைய அகன்ற கடற்கரை, தெளிந்த கழியில் தீப்போலும் பூவுடைய தொண்டி"[103], "வெயில் நுழையாத மரம் செறிந்த காவற்காடு",[104] "தென்னெல்லை குமரிக் கடலும் வடஎல்லை இமயமலையும் கிழக்கு மேற்கு எல்லைகளாகக் கடலும் குன்றும் மலையும் காடும் நாடும் என்பனவற்றை உடையோர் ஒன்றுபட்டுத் தீயதை நீக்கி நடுநிலையோடு செங்கோலாட்சியால் நிலத்தை ஆண்டோன் மரபைக் காத்தவன் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை ஆவான்."[105] என வரும் இடங்கள் கருதற்குரியன.

மேற்கூறியவற்றில் தெளிநீர், வெட்டவெளியான நிலம், மலை, காடு ஆகியனவும் உயரம், அகலம், உறுதி, அழிக்க முடியாத அரணாகக் குமரிக்கடல், இமயமலை, குன்று, மலை, காடு ஆகியனவும் அமைந்துள்ளன.

## இயற்கை வளம் பொருந்தியிருத்தல்

### நீர் வளம்

காற்றில் அசையும் பிரம்பின் நிழலைக் கண்டு அஞ்சும் இடத்திலுள்ள நீர் உள்ள பெரிய குளத்தில் மீன் பிடிக்கும் பாண்மகன் தலைப்புறத்து இழுத்துக் கட்டிய நெடிய தூண்டிலின் வளைவாய் இருக்கும் இரும்பில் உள்ள இரையைத் தின்னும் வாயுள்ள வாளைமீனும் நெருப்புப் போல மலர்ந்த கடவுள் சூடும் தாமரைப் பூ, உயர்ந்த வானத்தில் தோன்றிய இந்திரவில்லைப் போன்ற அரக்கு இதழ், செங்குவளைப்பூ, நீலப்பூ ஆகிய மலர்களும் மிளிர்கின்றன[106] என நீர்வளம் சுட்டப்பட்டுள்ளதை உணரலாம்.

### நில வளம்

குடிமக்களுக்கு உணவு தரும் உழவர் பெரிய எருதுகளை நுகம் பூட்டி உழுது விதைத்துக் களை நீக்கி அறுவடை செய்வார்கள் என்றும் குறுங்காலுடைய கருங்கழுத்துக் காடை, உழவர்களைக் கண்டு அஞ்சித் தன் இளங்குஞ்சுகளுடன் கடந்து

103. புறம். 17 : 1 - 8
104. மேலது, 21 : 5
105. மேலது, 17 : 1 - 8
106. பெரும். 283 - 289

செல்லும் மருத நிலச் சேற்றில் திகழும நண்டு, பசுமையான கோரையைக் குத்தி எடுக்கும் கொம்புடைய எருதுகள். நுண்ணிய சேறறை உழ முடியாத உழவர்கள் நடும் நாற்றுகள் ஆகியவை நிறைந்திருந்தன[107] என்றும் நிலவளம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## மலைவளம்

வரைவுகடாதல் என்னும் துறையில் "தலைவனுடைய குரலோசையைக் கிளியோசை எனக் கருதிப் பக்க மலையில் வாழும் கிளிகள் எல்லாம் பசுங்கதிர்த் தினைப்புனத்தைச் சேரும் நெடிய மலைநாடனே! தலைவியை வரைந்துகொள்"[108] என்று தோழி சொல்லும்போது, குறிஞ்சி நிலமான மலையும், அம்மலையில் வாழும் கிளிகள் என்ற உயிரினமும், பசிய தினைக்கதிர் என்ற தாவரமும் புனையப்பட்ட நிலையில் மலைவளம் தோன்றுதல் உணரலாம்.

## பசியில்லாதிருத்தல்

"யான் வாழு நாளும்" எனத் தொடங்கும் பாடலைப்[109] பாடிய சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் தன்னை ஒரு பாணனாகவும் சிறுகுடி கிழான் ஆகிய பண்ணனை வள்ளலாகவும் வைத்துப் பாடியுள்ளான். பழங்கள் பழுத்துள்ள மரத்தில் பறவைகள் ஒலித்தல் போலப் பண்ணனது இல்லத்தில் உணவு உண்ணும் ஒலி கேட்கிறது எனவும் காலம் தவறாது மேகம் மழை பெய்யும். அவ்வாறு மழை பெய்யும் காலத்து எறும்புகள் வரிசை வரிசையாகச் சென்று வன்புலம் சேருவதைப் போலப் பசியாகிய நோயினைப் போக்கும் மருத்துவன் (பண்ணன்) இல்லம் நோக்கிச் சிறுவர்கள் கையில் சோற்று உருண்டையுடன் வரிசை வரிசையாகச் செல்வதைப் பார்த்தும் இல்லம் அண்மையில் உள்ளதா சேய்மையில் உள்ளதா எனப் பரிசில் பெற வரும் பாணன் கேட்கின்றான் எனப் பரிசில் பெற்று வரும் பாணன் கூறினான் எனவும் பின்பு பண்ணன் தன் வறுமையைத் தீர்த்துச் சுற்றத்தவரது வறுமைத் துன்பத்தினையும் போக்கும் பண்ணன், புலவர் தான் வாழும் நாளையும் பெற்று, நீண்ட நாள் வாழவேண்டும் எனவும் கூறியுள்ளான்.

ஈண்டுப் பண்ணன் வீடு பசிப்பிணி போக்கும் மருத்துவன் இல்லம் என்னும் போது சிறந்த நாட்டில் பசியாகிய நோயைப் போக்கிப் பசியில்லாதிருத்தல் செய்ய வேண்டுமெனப் புலப்படுத்தப்பட்டுள்ளது.

107. பெரும். 197 - 211
108. ஐங். 289
109. புறம். 173

## நீங்காத பிணியில்லாதிருத்தல்

கற்புக்காலத்துப் பிரிவிடை வருந்திய தலைவி கூறுவதாக அமையும் பாடலில், தாய் அவினி மன்னன் நீண்ட காலம வாழ வேண்டும் என்றும் உலக உயிர்கள் பசியில்லாமல் இருக்க வேண்டுமென்றும். அவை பிணி நீங்கியிருத்தல் வேண்டுமென்றும் விரும்பியதாகக் கூறப்பட்டுள்ளது.[110]

ஈண்டு மன்னன் அரசாட்சியில் பிணியில்லாமல் (நோயில்லாமல்) உயிர்கள் வாழ வேண்டும் என்று சுட்டியுள்ளது நோக்கத்தக்கதாகும்.

## இன்ப வாழ்வு

கோப்பெருஞ்சோழன் வடக்கிருத்தலைக் கேள்வியுற்று அவனைக் காணப் பிசிராந்தையார் செல்லச் சென்றடைவதற்குள் மன்னன் உயிர் துறந்துவிடப் பிசிராந்தையார் வருந்திச் சான்றோர்களிடம் பேசிக்கொண்டிருக்கும் வேளையில் அவர்கள், "வாழ்நாள் பல ஆகியும் சிறிதும் நரை காணப்படவில்லையே" எனக் கேட்க, அவர் கூறுவதாக அமையும் பாடலில், "நரை திரைகட்குக் காரணம் முதுமையன்று; மனக்கவலையே; எனக்குக் கவலை கிடையாது, அதற்குக் காரணம் என் குடியிலோ, ஊரிலோ, நாட்டிலோ கவலையுண்டாதற்குரிய நிலைகள் இல்லை. எவ்வாறெனின் என் குடியில் என் மனைவி மக்கள் அறிவு நிரம்பியவர்கள். என் ஏவலர் என் குறிப்புப் பிழையாதொழுகுவர் எங்கள் ஊரில் ஆன்றவிந்தடங்கிய கொள்கையையுடைய சான்றோர் பலர் உளர். நாட்டு வேந்தனும் அறமல்லது செய்யான்"[111] எனக் கூறப்பட்டுள்ளது.

ஈண்டுப் பிசிராந்தையாரின் துன்பமற்ற இன்ப வாழ்வு எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## பாரதிதாசன் பாடல்கள்

படைவலிமை பெற்றிருத்தல் முதலிய நாடு என்பதற்குரிய கூறுகள் பாரதிதாசன் பாடல்களில் பயின்றுவருதல் பின்வருமாறு ஆராயப்பட்டுள்ளது.

110. ஐங். 5 : 1 - 3
111. புறம். 191

## படைவலிமை பெற்றிருத்தல்

"கதிர் நாட்டின்மேல், வேழநாட்டுப் படைகள் போர் தொடுத்தன. பொன்னொலி தேர்ப்படைகள், மிகுகார் போன்ற யானைப்படைகள், கழுத்து மயிர் ஆடும் குதிரைப் படைகள், வில், வேல், வாள் கொண்ட காலாட்படைகள் ஆகியன மண்ணதிர முழங்கின. வெற்றியென முரசு முழங்கின. சங்கு, இசைக்கருவி போன்றவை பார் அதிர ஒலித்தன. கொடிகள் விண்ணதிரப் பறந்தன. ஆயுதங்கள் வழி அதிர மின்னின. படைத்தலைவர் படைநடத்திச் சொல்லும் மொழி அதிர்வேட்டேயாம்.

கதிர்நாட்டின் நெடுங்கோட்டை மதில்மீது பறந்த கொடி "வா பகையே" என அழைக்கும் புதுமை கண்டனர் போர் தொடுத்தோர். "விரைவாகப் போவீர்கள்" எனப் படைத்தலைவர் உரைக்க "ஆம்" என மறவர்கள் விண்ணதிரும்படி குதித்து ஆர்ப்பாட்டத்துடன் போர்ப்பாட்டுப் பாடிச் சென்றார்கள்."[112]

மேற்கூறியவற்றில் தேர்ப்படை, யானைப்படை, குதிரைப் படை ஆகியவற்றோடு வில், வேல், வாள் ஆகியவற்றை ஏந்திய காலாட்படைகள் முழங்கின என்றும், சங்கு முதலிய இசைக்கருவிகளையும் விண்ணதிரப் பறக்கும் கொடிகளையும் விழியதிர மின்னும் ஆயுதங்களையும் உள்ள பெரும் படையைப் படைத்தலைவன் வழிநடத்திச் சென்றான் என்றும் கூறும்போது படைவலிமையும் படைத்தலைவன் வலிமையும் சுட்டப்பட்டுள்ளன. படைத்தலைவன் விரைவாகப் போவீர்கள் என உரைக்க "ஆம்" என மறவர்கள் விண்ணதிரும்படி குதித்து ஆர்ப்பாட்டத்துடன் பாடிச் சென்றார்கள் எனப் படைவீரரின் வல்லமையும் குறிக்கப்பட்டுள்ளது.

## அறிவுடையோரைப் பெற்றிருத்தல்

குறிஞ்சித் திட்டுத் திரைய மன்னன் அயல்நாடு சென்று திரும்பும்போது எதிர் கொண்டழைக்க அமைச்சர் முதலியோர் வந்தனர். அவ்வேளையில் அமைச்சன், தொழிலாளர்கள் அழுகின்றார்கள் என்று சுட்டிக்காட்டினான். "நாட்டில் மழை உண்டா?" என அரசன் கேட்க அமிழ்து (மழை) ஒரு துளியும் இல்லை என்று அமைச்சன் கூறினான்..

112. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள் ப.310

அயல்நாடு சென்று வந்தது செய்யக்கூடாதது என்றும் அதுவும் இல்லாமல் மேலும் அரசன் அங்குள்ள முற்றிய முடிச்சு அவிழ்த்த பயல்களைக் கொண்டு வந்தது வீணானது என்றும் அமைச்சன் இடித்துரைத்தான். அவன் கூறியதைக் கேட்ட அரசனின் கண்கள் கெஞ்சின. "நல்லவர் வருகையால் நமக்கெல்லாம் நலம். தமிழ்ச்சான்றோர் வருகையால் தமிழுக்குத் திருத்தம். அமிழ்தினை நஞ்சென்று எண்ணாதீர்" என அரசன் கூறியதைக் கேட்ட அமைச்சன் அவனை விளித்து, அவன்தன் சொற்கள் அழுகையைச் சிரிப்பாக்கின என்றும் செத்த கழுதைகள் நிலத்தைத் திருத்தா என்றும் கள்ளிகள் ஊரைத் திருத்தா என்றும் விழல் காடு நீரைத் திருத்தாது என்றும் குழந்தை திருந்தி வாழும் குறிஞ்சியைத் திருத்த முடியாது என்றும் உரைத்தான்.

மேற்கூறியவற்றில் அமைச்சன் திரைய மன்னனிடம் அயலவர்களுடன் உறவு கொண்டதனால் துன்பம் ஏற்படும் என்பதை எடுத்துரைத்தான்.

குறிஞ்சித் திட்டில் அயலவர் படையெடுப்பு நிகழாத போது செல்வ வளங்கள், கலைகள் ஆகியவற்றை உள்ளடக்கியதாக நாடு இருந்தது. திரைய மன்னனின் முட்டாள்தனமான செய்கையால், அதாவது அயலவர்களை உள்ளே நுழைய விட்டதோடு மட்டுமல்லாமல் அரசன் தன் செல்வ வளநாட்டில் ஆட்சியைத் திறம்பட நடத்தத் தவறும் நேரத்தில் அமைச்சன் இடித்துரைத்ததைக் கேளாததனால் அவன் நாடு செழுமை இழந்தது.[113]

## குறைபாடில்லாத செல்வந்தரைப் பெற்றிருத்தல்

வரையறுத்துச் சொல்ல இயலாத அளவிற்கு மிகுதியான செல்வத்தையும் வாய்மையையும் மாசாத்துவான் உடையவனாக இருந்தானென்பதை[114] உணர்த்தும் போது மாசாத்துவான் குறைவில்லாத செல்வந்தன் என்பதை உணரலாம்.

## பல குழுக்கள் இல்லாதிருத்தல்

"குறிஞ்சித் திட்டில் சாதி, மதம் இல்லை, தச்சர்கள் உருவம் செய்து அறிவை மாய்க்கும் கோயில்கள் இல்லை. அதனால் மனம் கொதித்தெழவில்லை. அயலவர் படையெடுப்பு இல்லாததால் தமிழ் ஒழுக்கத்தை மாற்றுவோர் இல்லை. அதனால் மக்களனைவரும் சீற்றமில்லாமல் சிரித்த முகத்துடன் வாழ்ந்தனர்."[115]

113. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், பக். 1147 - 1153
114. மேலது, ப. 1608
115. மேலது, ப. 1147

சாதி, மத வேறுபாடில்லாமல் வாழ்ந்தனர் என்னும் போது தங்களுக்குள் பிரிவு இல்லாமல் ஒன்றுபட்டு வாழ்ந்தனர் எனவும் பொதுப்பணத்தைக் கொள்ளையிடாமல் வாழ்ந்தனர் எனவும் அயலவர் படையெடுப்பு இல்லாமல் தமிழர் ஒழுக்கத்துடன் சீற்றமில்லாமல் சிரித்த முகத்துடன் வாழ்ந்தனர் எனவும் கூறும்போது மக்களிடையே ஒருங்கிணைப்புக் காணப்பட்டது எனவும் உணரலாம்.

இவ்வாறாக, மக்களிடையே பிரிவுகளை உண்டாக்கும் சாதி, மத வேறுபாடில்லாமலும் பணத்தைக் கொள்ளையிடும் ஏமாற்று வேலையில்லாமலும், பல குழுக்களாகப் பிரிந்து வாழாமல் ஒன்றுபட்ட மனத்துடன் இன்பமாய் வாழ்ந்தனர்.

## பொருளீட்டும் வாய்ப்பு

தென்னாட்டு வள்ளியூர்தனில் மறைநாய்கன், வடிவு ஆகிய இருவருக்கும் பிறந்த பூங்கோதையும் மானநாய்கன் அன்னம் தம்பதியருக்குப் பிறந்த பொன்முடியும் ஒருவரையொருவர் விரும்பிய பின்பு இருவரது வீட்டினருக்கும் பகை ஏற்பட்டது. பகையையும் மீறி அவர்கள் காதல் தொடர்ந்ததை அறிந்த பொன்முடியின் வீட்டில், அவனை வடநாட்டிற்கு முத்து விற்க அனுப்பிய பொழுது பொதிசுமந்து மாடுகள் முன்னே செல்ல வணிகர்கள், பின்னே சென்றனர். பூங்கோதையின் மேல் அன்பு வைத்த பொன்முடி காதல் மனத்தோடு குதிகாலைத் தூக்கி வைத்துச் சென்றான். மதிமுகத்தாள் இருக்கும் வழியில் முத்து வணிகர் கூட்டம் சென்றது.

வடநாடு செல்கின்ற வணிகர்களையெல்லாம் மங்கையர், ஆடவர் துன்பம் நேராமல் திரும்ப வேண்டுமென வாழ்த்தி அனுப்பினர். மாடியின்மேல் நின்று பூங்கோதையிடம் விழிக்குறிப்பால் விடைகேட்க அவள் அதிர்ந்து விதிர்விதிர்த்து வெடித்துவிடும் நெஞ்சோடு செந்நீர் கண்ணால் உதிர்த்து விடைகொடுத்தாள்.[116]

மேற்கூறியவற்றில் தலைவன் தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் சென்றமை பற்றி விளக்கப்பட்டுள்ளமையால் தலைவனுக்குப் பொருளீட்டும் வாய்ப்பு உருவாகியுள்ளமை புலப்படுகின்றது.

116. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 268

## செல்வ வளம் நிறைந்திருத்தல்

நாட்டின் புகழ் பொன்னைப் போல் பெரியதாகவும் சுரங்கத்திற்கு ஒப்பானதாகவும் பொருள் உற்பத்தியில் வானுக்கு நிகரானதாகவும் சிறப்பு மிகுந்ததாகவும் இருந்தது என்றும் மற்றும் வளம், அழகு இவைகளில் இணையற்றதாகவும் எல்லாம் செய்யுமளவிற்குச் செல்வ வளங்கள் நிறைந்ததாகவும் பழம்பெரும் நாடிருந்தது.[117]

கவிதை, காவியம், சிற்பம், உயர் கலைகள் ஆகியன சிறந்தும் பொன், பொருள், செந்நெல் ஆகியன குறைவில்லாமல் குவிந்தும் கிடந்த நாடு கூறப்பட்டுள்ளது.[118]

மேற்கூறிய நாட்டில் பொன் பொருள் ஆகிய செல்வங்களும் இலக்கண இலக்கியங்களும் கலைகளும் சிறந்து விளங்கின என்னும்போது அந்நாட்டு மக்கள் வாழ்வில் செல்வ வளம் நிறைந்திருந்தமை தெரிய வருகிறது.

## நல்லாட்சி இருத்தல்

நாடும் நாட்டில் உள்ள செல்வங்களும் அனைவர்க்கும் பொதுவாதல் வேண்டும் என்பதனையும் மனிதர்களிடையே எளியோர், வலியோர் என்ற பாகுபாடு இல்லாதிருத்தல் வேண்டுமெனவும் கல்வி சுகாதாரத்துடன் கூடிய நல்லிதயத்தைக் கொண்டிருத்தல் வேண்டுமெனவும் செல்வர், வல்லவர் ஆகியயோருக்கு நாடுடையதென்ற எண்ணத்தினை அழிக்க வில்லேந்தும் வீரரும் மாதரும் விடுதலையெனப் பொங்கியெழ வேண்டுமெனவும் சுட்டப்பட்டுள்ளன.[119] அதாவது ஈண்டு நல்லாட்சி இல்லாமையைச் சுட்டி நல்லாட்சி என்பது எவ்வாறிருத்தல் வேண்டுமென்பது கூறப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

## உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் நட்புநிலை அமைதல்

இங்கிலாந்து தேசத்தைச் சேர்ந்தவன் அவனைச் சேர்ந்தவர்களிடம் நாவலந்தீவு அவர்களை விட்டுப் போகாது எனவும் அதனால் அஞ்ச வேண்டாம் எனவும் அங்கு வாழ்கின்ற முந்நூறு கோடி மக்களிடம் காணப்படும் வேற்றுமையும் முந்நூறு கோடியாக இருப்பதாலும் அவர்கள் எல்லோரும் தனித்தனியாக இருப்பதாலும் ஒன்றுபட்டு எதிர்க்கமாட்டார்கள் எனவும் வேற்றுமை வளர்க்கும் பெரும்புராணங்கள், சாதிச்சண்டை வளர்க்கும் இதிகாசங்கள்

117. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 76
118. மேலது, ப. 238
119. மேலது, ப. 156

ஆகியனவும் சமூகத்தின் கண்ணவித்து உண்ணும் எண்ணற்ற குருக்கள், வான்சுரரைத் தேன் போலப் பேசி இந்தத் தேசத்தைத் தின்னும் பூசுரர் ஆகியோரும் வாழ்வாங்கு வாழ்ந்த மாந்தர்களுக்கு உருவாக்கிய கற்களும் காணப்படுகின்றன என்றும் அத்தகைய சூழலில் சுதந்திரப் போர் நடைபெறாது என்றும்[120] கூறப்பட்டுள்ள காரணங்களால் இந்தியரிடையே நட்புநிலை பெரிதும் பாதிக்கப்பட்டு நாட்டை இழந்துள்ளனர் என்பதும் இழந்த நாட்டைப் பெறும் நிலையிலும் அவர்கள் இல்லையென்பதும் சுட்டப்பட்டு உள்நாட்டினரிடையே நட்புநிலை வேண்டியமை பற்றிய சிந்தனை தூண்டப்பட்டுள்ளது.

இத்தாலித் தேசத்தைச் சேர்ந்த ஒருவன் உணவு விடுதியில் கறுப்பன் எதிரே உணவு உண்பதைப் பொறுக்க முடியாதென்றான் எனவும் அதைக் கேட்ட பிராஞ்சியன், இத்தாலி நண்பனை நோக்கிப் பிறப்பதிலும் இறப்பதிலும் வேறுபாடில்லை எனவும் மிகுந்த அன்புடையார் வேற்றுமை கொள்ளார் எனவும் அவனைச் சேர்ந்த பிராஞ்சியரும் வேற்றுமை பாராட்டிப் பழம்பெருமை தாழ்வடையச் செய்யார் எனவும் வேற்றுமை செய்வது பிராஞ்சியர்களுக்குப் பிடிக்காது எனவும் அதனால் வேற்றுமை பார்ப்பவர்களுக்கு இடமில்லையெனக் கூறினான் எனவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.[121]

மேற்கூறியவற்றில் வெளிநாடு என வேற்றுமை பாராட்டாது நட்புநிலையோடு அனைவரும் சமம் என்ற உணர்வோடு ஒன்றுபட்டிருக்க வேண்டிய நட்புநிலை உணர்த்தப்பட்டுள்ளது எனலாம்.

## அச்சமின்றி வாழும் பாதுகாப்பைப் பெற்றிருத்தல்

வேற்றுநாட்டார் குறிஞ்சி நாட்டை அறியமாட்டார்கள் என்றும் அது போலத் துன்பம் இல்லாமல் வாழும் அந்நாட்டை நீங்கி மக்கள் வேற்றுநாடு சென்றதில்லை என்றும் நன்முறையில் ஆண்ட மன்னர் நான்காயிரம் பேர் ஆவர் என்றும் அயலவர் படையெடுப்பு நிகழாமல் நலிவில்லாமல் தமிழ் அறிஞர்கள் தமிழை வளர்ச்சியடையச் செய்ததும் புதுப்புதுத் தொழில்கள், கலைகள் ஆகியன வளர்ந்து சிறப்புற்றதும் ஆகிய நாடு அது என்றும் பன்னூறாண்டுக் காலமாகப் பல மன்னர்களால் எள் அளவுக் குறையில்லாமல் குறிஞ்சி நாடு இருந்தது என்றும் அக்குறிஞ்சி நாட்டில் அதாவது மூன்று தமிழ் நாட்டில் நெறிதவறும் முட்டாளாய்த் திரைய மன்னன் அயல்நாட்டுடன் உறவு கொண்டதனால், துன்பத்தில் குறிஞ்சி நாடு ஆழ்ந்தது என்றும் கூறப்பட்டுள்ளமை[122] அறியலாம்.

120. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 115
121. மேலது, பக். 114, 115
122. மேலது, பக். 1148,1149

மேற்கூறியவற்றில் வேற்றுநாட்டார் உறவில்லாதிருந்த குறிஞ்சி நாடு எந்தத் துன்பமும் இல்லாமல், பல நூறாண்டுகளாய் எள்ளளவுக் குறையில்லாமல் அதாவது எந்தவிதத் துன்பமும் இல்லாமல் இருந்தது எனச் சுட்டப்பட்டமையால் அச்சமின்றி வாழும் பாதுகாப்பைக் குறிஞ்சித திட்டுப் பெற்றிருந்தது என உணரலாம்.

## உட்பகை இல்லாதிருத்தல்

"செங்குட்டுவன் பிறந்த திராவிடத்தை வடக்கர் ஆளுதல் செய்யாலாமோ? நல்லது! நல்லது! திராவிட நாடு பொலிவிழந்துவிட்டது என்ற எண்ணமோ? மறவர்கள் மாண்டுவிட்டனர் என்ற எண்ணமோ? வடமொழியால் தமிழ் பிறந்தது என்பர். எவ்வளவு வாய்த்திமிர். செய்யத்தக்கது ஒன்றேயாகும். திராவிடர் நமக்குள் பிரிவு வேண்டாம்"[123]

ஒரு நாட்டின் சிறப்பு அயலவரால் அழியாதிருக்க வேண்டுமானால் நமக்குள்ளேயே பிரிவு அதாவது உட்பகை இல்லாதிருத்தல் வேண்டும். உட்பகை இல்லாத நாடே தாழாது சிறப்புற்று வாழும் என்னும் பொருள்படக் கூறியுள்ளார்.

## அரசுக்குக் கட்டுப்படாமல் கொலை நிகழ்த்துவோர் இல்லாதிருத்தல்

அனைத்து வளங்களையும் உள்ளடக்கிய அயலவர் தொடர்பில்லாமலிருந்த குறிஞ்சித்திட்டில் அயலவர் நுழைந்ததால், அனைவரும் எதிர்த்தனர். அவ்வாறு எதிர்த்தவர்களில் ஒருவனான சேந்தனை (படைத்தலைவனை) அயலவர் குழுவைச் சேர்ந்த விநோதை நயவஞ்சகமாக அழித்தாள். அவ்வாறு அழிப்பதற்கு முன்பு அரசியைப் பிரிந்து மன்னன் விநோதையுடனிருந்ததை அறிந்த அரசி, மன்னனிடம் உணருமாறு எடுத்துரைத்துவிட்டுத் தற்கொலை செய்து கொண்டதை அறிந்து அரசியைக் காண வந்த விளாமாவட்டத்தைச் சேர்ந்த அண்ணன் திண்ணனையும் அவனது மகன் இளந்திரையனையும் மன்னனின் உதவியாள் சில்லியின் மகன் தங்கவேலையும் விநோதை அம்புயத்தின் உதவியுடன் நயவஞ்சகமாகக் கொலை செய்தாள் என்னும்போதும் அவ்வாறு நயவஞ்சகமாகக் கொலை செய்த விநோதையை அரசியின் தோழி தாமரை கொன்றாள் என்னும்போதும்[124] அனைத்து வளங்களையும் உள்ளடக்கிய நன்னாட்டில் அரசுக்குக் கட்டுப்படாமல் கொலை நிகழ்த்துவோரிருந்தால் எத்தீமையும் விளையும் என்பதும் அவ்வாறிருப்பவர்களை

123. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 112
124. மேலது, பக். 1147 - 1296

இல்லாதிருத்தல் செய்ய வேண்டும் என்பதும் உணர்த்தப்படுதல் அறியலாம்.

## பாதுகாப்பிற்கான அரண் கொண்டிருத்தல்

கடல் கொள்ளை கொண்ட குமரி நாட்டில் குறிஞ்சித் திட்டுக் கடல் கொள்ளாமல் இருந்தது. பிறர்நாட்டை அடிமை செய்து ஆளும் தீயவர்களின் வழியில் படாமல் நடுக்கடலில் குறிஞ்சி நாட்டை இயற்கை அன்னை படைத்தாள். அதனால் குறிஞ்சித் திட்டு எந்தக் குறைவும் இல்லாமல் தொன்மை வாய்ந்ததாக இருந்தது.

நாட்டின் நடுவினில் நூறு கற்களைக் கொண்ட பரந்த குறிஞ்சித் திட்டுப் படைகொண்டு வருவோர்களால் பழிவாங்கப்படாது. அப்படிப் படைகொண்டு வந்தாலும் சுழல்களில் மாட்டி அடியோடு மாய்வார்கள்.[125]

அதாவது, குறிஞ்சி நாடு நடுக்கடலில் அமைந்து கடல் அரண் உடையதாகிப் படை கொண்டு வரும் மாற்றார் அடியோடு மாய்ந்து போகுமளவிற்குப் பாதுகாப்பிற்கான அரண் கொண்டிருந்தமையை உணரலாம்.

## இயற்கை வளம் பொருந்தியிருத்தல்

மூன்று கடல்களில் முத்தெடுக்கும் திராவிட நாட்டில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்கள் நலம் செய்தன[126] என்றும் தமிழர்க்கு உயர்வான தமிழ்நாட்டில் நறுந்தென்றல் வீசும் என்றும் காவேரி ஆறு பாயும் . அதுமட்டுமல்லாமல் இனிக்கும் மா, பலா, வாழை, செந்நெல் ஆகிய தாவரங்களையும் கொண்டிருந்தது[127] என்றும் கூறப்பட்டமை அறியலாம்.

திராவிட நாட்டின் கடலில் முத்தெடுக்கப்படுகிறது என்னும்போது நீர் வளம் நிறைந்த நாடு எனவும் முல்லை நிலம் நலம் செய்யும் என்னும்போது காட்டில் இயற்கை வளங்கள் நிறைந்திருந்தன எனவும் குறிஞ்சி நிலம் நலம் செய்யும் என்னும்போது மலை வளங்கள் நிறைந்திருந்தன எனவும் நெய்தல் நிலம் வளம் செய்யும் என்னும்போது கடல் வளங்கள் நிறைந்திருந்தன எனவும் குறிப்பிட்டுள்ளமையால் நீர் வளம், நில வளம், மலை வளம் ஆகிய இயற்கை வளங்கள் பொருந்தியதால் நாடு சிறப்பித்துக் கூறப்பட்டமை உணரலாம்.

125. திருவாசகன், ஆ., பாரதிதாசன் கவிதைகள், ப. 1147
126. மேலது, ப. 1030
127. மேலது, ப. 1007

## பசியில்லாதிருத்தல்

பசியெனக் கேட்டு வருபவர்களுக்கு, ஒரு பிடி சோறு தந்து சாப்பிடுமாறு கொடுத்துத் துன்பத்தைப் போக்கினால் வரும் இன்பமே இன்பமாகும் எனவும் அதுவே சிறந்த அறமாகும் எனவும் அறம் இன்னதென்று கூறும் நூல்கள் சொன்ன அந்த நாட்கள் நல்லவையாகும் என்பதைச் சிறுவர்கள் அவர்களது திறமையால் அறிந்திட வேண்டும்[128] என்று கூறப்படுவதால், பிறர் துயர் போக்குதல் அதாவது பசியைப் போக்குதல் சிறந்த அறமெனச் சுட்டப்பட்டுள்ளதால், பசியில்லாதிருத்தல் கருதப்பட்டுள்ளதை உணரலாம்.

## நீங்காத பிணியில்லாதிருத்தல்

சுருட்டின் புகையால் இளமை போய்த் துன்பம் உண்டாகும் என்றும் முகம், உதடு ஆகியன கருமையாகி முறுக்கு மீசை எரிந்து போகும் என்றும் மூச்சுக் கருவிகளில் (உறுப்புகளில்) நோய் உண்டாகும் என்றும் பெரியவர்களிடையே பேசும்பொழுது மனம் புகை பிடிக்கச் சொல்லும் என்றும் அதனால் அவர்களுக்கு மனம் துடிக்கும் என்றும் காசு பணம் கொடுத்துத் தீயதை விலைக்கு வாங்கித் துன்பம் கொள்ள வேண்டாம் என்றும் மாசில்லாத செந்தமிழ் நாட்டில் பிணித்துன்பம் வேண்டாம் என்றும் கூறப்பட்டுள்ளது.[129]

ஈண்டுப் பிணியில்லாதிருக்க வேண்டியதன் தேவை சுட்டப்பட்டுள்ளது.

## இன்ப வாழ்வு

மிகப் பல ஆண்டுகளாகியும் மேனியில் நரையில்லா நன்னிலையை எப்படியடைந்தீர்கள் எனப் பிசிராந்தையாரை நோக்கிக் கேட்டவர்களிடம் குணம், அறிவு ஆகியவற்றில் அவரது மனைவி மக்கள் சிறந்தவர்களெனவும் ஏவலர் எண்ணியது எண்ணுபவர்கள் எனவும் வேந்தன் முறைசெய்து காப்பவன் எனவும் கற்க வேண்டியவற்றைக் கற்றுத் தன்முனைப்பு இல்லாது அடங்கிய, கொள்கை உள்ள சான்றோர்கள் மிகப் பலர் அவர் ஊரில் வாழ்கின்றனர் எனவும் எடுத்துக்காட்டி இத்தகு காரணங்களால் அவருக்கு நரை ஏற்படவில்லையெனக் கூறியுள்ளார்.[130]

மேற்கூறியவாறு பிசிராந்தையாருக்கு நரை தோன்றாமைக்குக் காரணமாக

128. திரு. 229
129. மேலது, பக். 236, 237
130. மேலது, ப. 1730

மனைவி, மக்கள் , சான்றோர், வேந்தன் ஆகியோரைச் சுட்டியுள்ளதால் நற்குணம், நல்லறிவு நிறைந்தவர்களால் இன்ப வாழ்வு கிடைக்கும் என்பது உணரத்தக்கதாகும்.

## ஒப்பீடு

படைவலிமை பெற்றிருத்தல் முதலாக இன்பவாழ்வு ஈறாக விளக்கிக்காட்டப்பட்டுள்ள பதினேழு கூறுகளும் சங்கப் பாடல்களில் பொருந்தி வந்துள்ளன. பாரதிதாசன் பாடல்களில் இறைப்பொருள் தருதல் நீங்க மற்ற பதினாறு கூறுகளும் அமைந்து வந்துள்ளன. சங்கப் பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் பேசப்பட்டுள்ள நாடு என்பது தமிழ் பேசப்படும் நிலப்பரப்பு என்ற நிலையில் மட்டுமே ஒற்றுமையுற்றுத் திகழ்கிறது. சங்கப்பாடல்களில் குறிக்கப்படும் நாடுகள்; சேரநாடு, சோழநாடு, பாண்டிய நாடு கொங்கு நாடு, தொண்டை நாடு, முரப்பு நாடு முதலியனவாக அமைவதையும் பாரதிதாசன் பாடல்களில் குறிக்கப்படும் நாடுகள் கதிர்நாடு, வேழநாடு, கொன்றை நாடு, மழை நாடு, கொடுநாடு, மணிபுரி, வெள்ளி நாடு, வள்ளி நாடு, குன்ற நாடு குறிஞ்சித்திட்டு முதலியனவாக அமைவதையும் உணரலாம்.

## தொகுப்புரை

ஒரு சிறந்த நாட்டிற்குத் தேவையான கூறுகள் இன்னவை என்பது திருக்குறளையும் கௌடலீயத்தையும் அடிப்படையாகக் கொண்டு எடுத்துரைக்கப்பட்டுள்ளது. நாட்டிற்குத் தேவையான கூறுகளைக் கூறுவதில் திருவள்ளுவரும் கௌடலீயரும் எவ்வாறு ஒத்துக் காணப்படுகின்றனர் என்பது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. சிறந்த நாட்டிற்குத் தேவையான கூறுகள் சங்க இலக்கியத்தில் நாடு பற்றிய புனைந்துரை வந்துள்ளபொழுது எவ்வாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளன என்பது ஆராயப்பட்டுள்ளது. அவ்வாறே பாரதிதாசனின் பாடல்களிலும் சிறந்த நாட்டிற்குத் தேவையான கூறுகள் அப்பாடல்களின் புனைந்துரையில் எவ்வாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளன என்பது ஆராயப்பட்டுள்ளது. இறைப்பொருள் தருதல் நீங்கலாக மற்ற கூறுகள் பாரதிதாசன் பாடல்களில் பயின்று வரும் பாங்கும் விளக்கிக்காட்டப்பட்டுள்ள எல்லாக் கூறுகளும் சங்க இலக்கியங்களில் பயின்றுவரும் பாங்கும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

# நிறைவுரை

இவ்வாய்வேட்டில் சங்கப் பாடல்களில் மொழி உணர்வு, இலக்கியம் சார்ந்த விழிப்புணர்ச்சி ஆகியவை எவ்வாறு அமைந்துள்ளன என்பது ஆராயப்பட்டுள்ளது. பாரதிதாசன் பாடல்களில் காணப்படும் மொழி உணர்வு இலக்கியத்தில் காணப்படும் விழிப்புணர்ச்சி ஆகியவை ஆராயப்பட்டுள்ளன. இவ்விரு வேறு பாடல்கட்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைப் பகுதிகள் விளக்கிக்காட்டப்பட்டுள்ளன. இலக்கிய நிலையில், சங்க இலக்கிய அகத்துறை, மெய்ப்பாடு, புறத்திணை ஆகியவற்றின் சில கூறுகள் பாரதிதாசன் பாடல்களில் மிக ஒத்துப் பயின்று வந்துள்ளமை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. தொனி, இரசம், ஔசித்தியம் ஆகிய இலக்கியக் கோட்பாடுகளைச் சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும ஏற்றிப் பார்த்தல் இயலுவதாக உள்ளது இலக்கியம் சார்ந்த இனவிழிப்புணர்ச்சியும் அரசியல் சார்ந்த இனவிழிப்புணர்ச்சியும் சமயம் சாரந்த இனவிழிப்புணர்ச்சியும் சங்கப் பாடல்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் எவ்வாறு அமைந்துள்ளன என்பது ஆராயப்பட்டுள்ளது. திருவள்ளுவரும் கௌடலீயரும் கூறியுள்ள நாடு சார்ந்த கூறுகள் சங்க இலக்கியங்களிலும் பாரதிதாசன் பாடல்களிலும் பொருந்திவரும் பாங்கும் ஆராயப்பட்டுள்ளது.

சங்க இலக்கியப் பாடல்களோடு தற்காலப் பாடல்கள் விரிவான அளவில் இன்னும் ஒப்பிட்டு ஆராயப்படவில்லை. இந்நிலையில் இவ்வாய்வேடு ஒரு முன்னோடி ஆய்வாக இத்துறையில் விளங்கும் எனலாம் பாரதியார், வாணிதாசன் முதலிய புலவர்களின் பாடல்களும், சங்க இலக்கியங்களோடு, வருங்காலத்தில் இவ்வாய்வேட்டில் பாரதிதாசன் பாடல்கள் விளக்கிக் காட்டிய அடிப்படையில் ஆராயப்படலாம்.

# துணை நூற்பட்டியல்

## மூல நூல்கள் (இலக்கியம்)

1. சாமிநாதையரவர்கள், டாக்டர் வே., <u>சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும்,</u>
அடியார்க்கு நல்லாருரையும்,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு,
1985.

2. சோமசுந்தரனார், பொ.வே.(உ_ரை.), **அகநானூறு,**
களிற்றியானை நிரை,
கழக வெளியீடு,
சென்னை,
மூன்றாம் பதிப்பு,
1981.

3. மேலது, **அகநானூறு,**
மணிமிடை பவளம்,
நித்திலக்கோவை,
கழக வெளியீடு,
சென்னை,
மூன்றாம் பதிப்பு,
1977.

4. மேலது, **ஐங்குறுநூறு,**
கழக வெளியீடு,
சென்னை,
மூன்றாம் பதிப்பு,
1979.

5. மேலது, **குறுந்தொகை,**
கழக வெளியீடு,
சென்னை,
நான்காம் பதிப்பு,
1978.

6. மேலது, **சிறுபாணாற்றுப்படை,**
கழக வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு,
1953.

7. சோமசுந்தரனார், பொ.வே.(உரை.), **பரிபாடல்,** கழக வெளியீடு, சென்னை, நான்காம் பதிப்பு, 1975.

8. மேலது, **பத்துப்பாட்டு மூலமும் உரையும், (பகுதி–2),** கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1956.

9. மேலது, **பத்துப்பாட்டு மூலமும் உரையும், (பகுதி – 1),** கழக வெளியீடு, சென்னை, ஆறாம் பதிப்பு, 1976.

10. மேலது, **பெரும்பாணாற்றுப்படை,** கழக வெளியீடு, சென்னை, ஆறாம் பதிப்பு, 1987.

11. மேலது, **பொருநராற்றுப்படை,** கழக வெளியீடு, சென்னை, ஆறாம் பதிப்பு, 1981.

12. திருவாசகன், ஆ., **பாரதிதாசன் கவிதைகள்,** அருள் - சுடர்ப் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 1993.

13. துரைசாமிப்பிள்ளை, ஔவை, சு., **பதிற்றுப்பத்து,** கழக வெளியீடு, சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1995.

14. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு.,
**பதிற்றுப்பத்து,**
கழக வெளியீடு,
சென்னை,
பத்தாம் பதிப்பு,
1996.

15. நச்சினார்க்கினியார். (உரை.),
**கலித்தொகை,**
கழக வெளியீடு,
சென்னை,
ஏழாம் பதிப்பு,
1967.

16. நாராயணசாமி ஐயர்,
பின்னத்தூர், ஆ. (உரை.),
**நற்றிணை,**
கழக வெளியீடு,
சென்னை,
ஐந்தாம் பதிப்பு,
1976.

17. பாரதிதாசன்,
**இசையமுது - I**
பாரி நிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு,
1939.

18. மேலது,
**இசையமுது - II**
பாரதிதாசன் பதிப்பகம்,
புதுச்சேரி,
முதற்பதிப்பு,
1952.

19. மேலது,
**பாரதிதாசன் கவிதைகள்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
மறுபதிப்பு,
1999.

20. மேலது,
**காதல் பாடல்கள்,**
பூம்புகார் பிரசுரம்,
சென்னை,
முதல் பதிப்பு,
1977.

21. பாரதிதாசன, **தேனருவி,**
பாரதிதாசன பதிபபகம்,
புதுச்சேரி,
முதற்பதிப்பு,
1956.

22. மேலது, **பாண்டியன் பரிசு,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு,
1974.

## இதழ்

பாரதிதாசன், **குயில் கிழமை இதழ்,**
26-07-60,

**குயில் கிழமை இதழ்,**
02-12-58.

## மூல நூல்கள் (இலக்கணம்)

1. இளம்பூரணர், (உரை.), **தொல்காப்பியம் எழுத்ததிகாரம்,**
கழக வெளியீடு,
சென்னை,
ஐந்தாம் பதிப்பு,
1974.

2. மேலது, **தொல்காப்பியம் சொல்லதிகாரம்,**
கழக வெளியீடு,
சென்னை,
இரண்டாம் பதிப்பு,
1987.

3. மேலது, **தொல்காப்பியம் பொருளதிகார உரை,**
கழக வெளியீடு,
சென்னை,
ஏழாம் பதிப்பு,
1982.

4. நக்கீரர், **களவியல் என்ற இறையனார் அகப்பொருள்,**
கழக வெளியீடு,
சென்னை.
முதற்பதிப்பு,
1953.

## ஆங்கில நூல்கள்

1. Anandha Vardhana, **Dhvanyaloka,**
K. Krishnamoorthy (Trans.)
Karnatak University,
Darwar,
1974.

2. Atul Chandra Roy, **International Relations Since 1919,**
The World Press Private Limited.
1994.

3. Bharatha, **Natya Sastra, Vol. I,**
Man Mohan Ghosh (Trans.)
Granthalaya Private Limited,
Calcutta,
1967.

4. Raghavan, Prof. V., **An Introduction in Indian Poetics,**
MacMillan and Company Limited.
Madras,
1970.

5. Sundaramoorthy, **Early Literary Theories in Tamil**
Sarvodhaya Ilakkiya Pannai,
Madurai,
1974.

# ஆய்வு நூல்கள்


1. அண்ணாமலை, சுப., **உருவும் உணர்வும்,** கயல் பதிப்பகம், மதுரை, முதற்பதிப்பு, 1975.

2. ஆனந்தவர்த்தனர், **தொனி விளக்கு,** டாக்டர். பி. எஸ். சுப்ரமணிய சாஸ்திரி,(மொ.பெ.), திருச்சி, முதற்பதிப்பு, 1944.

3. இராசேந்திரன், சே., **தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம்,** பூமணிப் பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1985.

4. இராசமாணிக்கனார், மா., **தமிழ் மொழி – இலக்கிய வரலாறு,** பாரி நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1971.

5. மேலது, **பல்லவர் வரலாறு,** கழக வெளியீடு, சென்னை, மூன்றாம் பதிப்பு, 1944.

6. கதிரேசச் செட்டியார், மு., **கௌடலீயம் பொருணூல்,** தமிழ் மொழி பெயர்ப்பு - முதற்பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், முதற்பதிப்பு, 1979.

7. கதிரேசச் செட்டியாரவர்கள், மு, **கௌடலீயம் பொருணூல்,** தமிழ் மொழிபெயர்ப்பு - இரண்டாம் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1980.

8. கிருட்டிணன், ப., **தமிழ் நூல்களில் தமிழ் மொழி தமிழ் இனம் தமிழ் நாடு,** இளந்தமிழர்ப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1984.

9. கோதண்டபாணி பிள்ளை, கு., **கம்பரும் மெய்ப்பாட்டியலும்,** அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், முதற்பதிப்பு, 1971.

10. சண்முகசுந்தரம், சு., **பாவேந்தரின் தமிழ்ப் போராட்டங்கள்,** காவ்யா வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1990.

11. சாரதா நம்பி ஆரூரன், **தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும்வளர்ச்சியும்,** சேக்கிழார்ப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1994.

12. சுந்தரம், வீ.ப.கா., **தொல்காப்பியத்தில் இசைக் குறிப்புக்கள்,** உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, 1994.

13 சுந்தரமூர்த்தி, டாக்டர் கோ., **பண்டைத்தமிழ் இலக்கியக் கொள்கைகள்,** சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, முதற்பதிப்பு, 1977.

14. சுப்ரமண்யன, ந., **தமிழக வரலாறு,** எனஎெஸ் பப்ளிகேசன்ஸ், மதுரை, முதற்பதிப்பு, 1979.

15. செந்துறைமுத்து, **தமிழர் வரலாறு நாகரிகம் பண்பாடு,** அருண் மொழிப் பதிப்பகம், சேலம், முதற்பதிப்பு, 1981.

16. சேதுபாண்டியன், தூ., **தெலுங்கு இலக்கியம் ஓர் அறிமுகம்,** அரசுப்பதிப்பகம், மதுரை, முதற்பதிப்பு, 1988.

17. தமிழமல்லன், க., **பாவேந்தரும் தனித்தமிழும்,** தனித்தமிழ்ப் பதிப்பகம், புதுச்சேரி, முதற்பதிப்பு, 1949.

18. மேலது, **தனித்தமிழ்,** நாவல் ஆர்ட் பிரிண்டர்சு, சென்னை, முதற்பதிப்பு, 1978.

19. தமிழண்ணல், டாக்டர்., **சங்க இலக்கிய ஒப்பீடு,**
முதல் பாகம்,
இலக்கியக் கொள்கைகள்,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை,
மூன்றாம் பதிப்பு,
1985.

20. தங்கப்பிரகாசம், சா., **பாரதிதாசன் பாடல்களில் பெரியாரின் சிந்தனைகள்,**
பகுத்தறிவுப் பதிப்பகம்,
பெரம்பலூர்,
முதற் பதிப்பு,
1995.

21. திருஞானசம்பந்தன், பெ., **இந்திய எழிற்கலை,**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை,
முதற்பதிப்பு,
1977.

22. நடராசன்,அ.லெ., **வியாசர் அருளிய மகாபாரதம்,**
அருணா பப்ளிகேசன்ஸ்,
சென்னை,
நான்காம் பதிப்பு,
1977.

23. பரமசிவானந்தம், அ.மு., **தமிழக வரலாறு,**
தமிழ் கலைப் பதிப்பகம்,
சென்னை,
மூன்றாம் பதிப்பு,
1971.

24. பரமேச்வரன், பி.கே., **மலையாள இலக்கிய வரலாறு,**
சாகித்திய அக்காதெமி,
புதுதில்லி,
முதற்பதிப்பு,
1968.

25. மறைமலையடிகள், **<u>மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்,</u>** கழகவெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1930.

26. முகளி, ரம். ஸ்ரீ., **<u>கன்னட இலக்கிய வரலாறு,</u>** சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, முதற்பதிப்பு, 1972.

27. முதலியார்,ஏ.எல்., **<u>தமிழ் நாட்டு வரலாறு,</u>** கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1958.

28. வரதராசனார், மு.வ., **<u>திருக்குறள் தெளிவுரை,</u>** கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1998.

29. வானமாமலை, நா., **<u>தமிழர் வரலாறும் பண்பாடும்,</u>** கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1966.

30. வீராசாமி, தா.வே., **<u>தமிழ்நாடக வரலாற்றில் பாரதிதாசன்,</u>** தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, முதற்பதிப்பு, 1981.

31. வேங்கடசாமி, சீனி., **<u>மறைந்துபோன தமிழ் நூல்கள்,</u>**
சாந்தி நூலகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு,
1967.

32. வேலு, இரா., **<u>திருக்குறள் கௌடலீயம் ஒப்பாய்வு,</u>**
அறம் பதிப்பகம்,
மதுரை,
முதற்பதிப்பு,
1989.

33. வையாபுரிப்பிள்ளை, எஸ்., **<u>இலக்கிய உதயம் – இரண்டாம் பகுதி,</u>**
தமிழ் புத்தகாலயம்,
சென்னை,
மூன்றாம் பதிப்பு,
1963.